

ஸ்ரீ. மாணிக்கம் பிள்ளை,

வில்லேஜ் மாஜிஸ்திரேட்,

சேலம் டவுன்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவக்ஷேத்திர யாத்திரை விளக்கம்.



(இரண்டாம்பதிப்பு)

இஃது

சேலம் ஜில்லா, ஒசூர் தாலூகா,

ரெவினியூ இன்ஸ்பெக்டர்

**தியாகதுருகம் சபாபதி பிள்ளையவர்கள்**

குமாரர்

சேலம் டவுன் வில்லேஜ் மாஜிஸ்திரேட்

**ஸ்ரீ. மாணிக்கம் பிள்ளை அவர்களால்**

இயற்றப்பட்டு

சேலம்

ஷண்முகவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

(1000-பிரதிகள்.)

**1918**

# அட்டவணை.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவ க்ஷேத்திர யாத்திரை விளக்கம்.

## முகவுரை.

---

நமது தேசமாகிய பரதகண்டத்திலே சிவபெருமான் திருக்கோயில்கொண்டு வீற்றிருந்தருளும் ஸ்தலங்கள் ஆயிரத்தெட்டென்று புராணங்களில் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளிலிப்போது தேவாரப்பதிகங்களை உடையனவாயிருக்கும் இருநூற்றெழுபத்துநான்கு ஸ்தலங்களில் சோழநாட்டில் 190, ஈழநாட்டில் 2, பாண்டிநாட்டில் 14, மலைநாட்டில் 1, கொங்குநாட்டில் 7, நடுநாட்டில் 22, தொண்டைநாட்டில் 32, துளுவநாட்டில் 1, வடநாட்டில் 5 ஆக 274-ம் உள்ளன. இத்தலங்களை (சென்னை) மதிராசிலிருந்து புறப்பட்டு பிரதக்ஷணமாய் ஒவ்வொரு ஸ்டேஷனிலும் ஜங்ஷனிலுமிறங்கி சுவாமி தரிசனம் செய்துகொண்டு மறுபடி மதிராசுக்கு வந்துசேர பல பிரதிகளைக்கொண்டும் நேரில் பார்வையிட்டும் யாத்திரை வாசிகளுக்கு உபயோகமாகும்பொருட்டே இச் "சிவ க்ஷேத்திர யாத்திரை விளக்கத்தை" இயற்றியிருப்பதால் அவைகளிலேதேனும் பாற்றுகளிருக்கின்றவைகளைப் பக்தர்கள் க்ஷமையோடு திருத்தியும் அவைகளிற் சேர்க்கவேண்டியவைகளைச் சேர்த்தும் இலிகிதமூலமாய்த் தெரிவிக்கும்பக்ஷத்தில் இரண்டாவது பதிப்பிலவைகளைக் கிரமமாக வெளியிட ஊழியனாய்க் காத்துக்கொண்டிருக்கின்றனன்.

சேலம்
1915-௵ ஜனவரி ௴ 2௳
ஆனந்த௵ தை௴ 19-௳

**S. மாணிக்கம் பிள்ளை,**
வில்லேஜ் மாஜிஸ்திரேட்,
சேலம் டவுன்.







உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிறப்புப்பாயிரம்.

---

சேலம் பேட்டைத்தெருவில் இருக்கும் சேலம் டி. மு. கோர்ட்டு

## வக்கீல் ஹா. ஷண்முக முதலியாரவர்களியற்றியது.

"மூர்த்திதலந் தீர்த்தம் முறையாற் றொடங்கினர்க்கோர்
வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கு"மென்ற திருவாக்கு
சார்த்தமிகப் பலிதமாய்ச் சபாபதி தலத்துதித்த
சீர்த்தமிகு மாணிக்கவேள் சிவக்ஷேத்திரம் விளக்கினனே.

---

சேலம் செவ்வாய்ப்பேட்டையில் இருக்கும்

சேலம் டி. மு. கோர்ட்டு வக்கீல்

## துரைசாமி பிள்ளை அவர்களியற்றியது.

நேரிசைவெண்பா.

1. சீரார் சிவக்ஷேத்ரச் சேவை புரிவோர்க்குப்
பேரார் துணைஞாலம்பேசுங்கால்—நேராகும்
மார்க்க முதலான மற்ற விவரங்கள்
பார்க்கலா மந்நூலின் பால்.

2. இத்தகைய நூலை யியற்றினோ னாரென்னில்
நித்த னருள்பெற்ற நேர்மையால்—பத்திவளர்
சீலச் சபாபதி செய்தவத்தால் வந்துதித்தான்
சேலத் தலத்திலெனச் செப்பு.

3. 'மாணிக்கம்' பேர்பெற்றோன் மாநிலத்திற் சீருற்றோன்
ஆணிப்பொன் னம்பலத்தி லாடி தாள்—பேணிப்
பரவுங் குணமுடையோன் பாவலர்க்கு நேயன்
இராமா மிவையென்னத் தேர்.

---

சேலம் சேர்ந்த அன்னதானப்பட்டியிலிருக்கும்

தமிழ்பண்டிதர்

## ஸ். மு. மே. சி. கோவிந்த பிள்ளையவர்கள் இயற்றியது.

நிலைமண்டில ஆசிரியப்பா.

திருவளர்மார்பன் தருமகன் படைத்த
சீர்கடலாடைப் பார்மிசை நீடச்
சிறப்புறு சைவ அறநெறித்திவ்யத்
தெய்வத்தன்மை மெய்த்தவவுண்மை
அப்பர் சுந்தரர் ஒப்பில் சம்பந்தர்
மூவரருளிய தேவாரத் திருமுறை
பாடல்கள் பெற்ற ஆடல் செய் பரமன்
திருக்கோயிற் சென்று உருக்கமாய்நின்று
இறைவனை வணங்கி முறைப்படி பணிந்து
நேர்த்தியாய் நற்சிவ க்ஷேத்திர யாத்திரை
விளக்கமென் றோர் நூல் முழக்கினனுலகில்
மேழிக்கொடியுடை வேளாணற்குலத்தோன்
கபாலீசுரனருள் சபாபதி தவமே
உருவாயமைந்தவன் றருங்கொடையாளன்
ஆங்கிலந், தமிழும் பாங்குறத் தெளிந்தோன்
வாணிச்சதுரக மாணிக்கவேளே.

கொடிமாடச்செங்குன்றூர் எனுந் திருச்செங்கோடு
**விவேகதிவாகரன் பத்திராதிபர்,**
**ஸ்ரீ. அ. முத்துசாமி கோனார் அவர்கள் இயற்றியது.**

விருத்தம்.

அங்கமெங்கும் பாலுறினு மாவின்முலைக் கண்ணில்வெளி யாதல்போல
எங்குமிறை நிறைந்திடினு மிணையில்தலத் தேகாண விலங்குமென்னப்
பொங்குமறை மொழியதனு லத்தலயாத் திரைவிளக்கம் புகன்றான்சேலம்
கங்கைகுல சபாபதிமால் பெற்றெடுத்த மாணிக்கங் கனிவுகூர்ந்தே.

சேலம் சுகவனபுரி
அழகிரிசாமி பிள்ளை அவர்களின் குமாரரும்
சேலம் ஷண்முகவிலாஸ அச்சுக்கூடத்தின்
புரொப்ரைட்டருமாகிய

**அ. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் இயற்றியது.**

(குளகம்.)

திங்களுங் கங்கை யணிமுடி பரமன்
றிசைதிசை சிரங்கரங் கொண்ட
மங்களங் கமழு மான்மிய தீர்த்த
மகிமைசேர் க்ஷேத்திரங் கொள்ள
தங்குத லிலாது சாலவே திரட்டித்
தந்தனன் மாந்தர்க ளுய்ய
நங்கடம் பெருமா னற்பத மனதி
னுடொறுஞ் சிந்தைசெய் சால்பன்.

இன்னலை யகற்றி யின்புறச் செய்வா
னெழிலுற நற்றவம் புரிவான்
நன்னல மியற்றி நாடொறுங் கொடைக
ளவையுற தளிப்பவன் சேல
மன்னுற வாழ்வோன் சபாபதி பெற்ற
மைந்தன்சீ ரிகையிற் சிறந்தோன்
மன்னர்கே ரன்பன் மாணிக்க மென்னு
மருவிலா மாண்பின னவனே.

உ

சிவமயம்.

# சிவ க்ஷேத்திர யாத்திரை விளக்கம்.

காப்பு.

## விநாயகர் துதி.

சத்தி யாய்ச்சிவ மாகித் தனிப்பர
முத்தி யான முதலைத் துதிசெய
சுத்தியாகிய சொற்பொரு ணல்குக
சித்தியானைதன் செய்ய பொற்பாதமே.

## பரமசிவ வணக்கம்.

எழுசீரடியாசிரிய விருத்தம்.

அன்பெனும்பிடியு ளகப்படுமலையே யன்பெனுங்குடில்புகுமரசே
யன்பெனும்வலைக்குட் படுபரம்பொருளே யன்பெனுங்கரத்தமராமுதே
யன்பெனுங்கடத்து ளடங்கிடுங்கடலே யன்பெனுமுயிரொளிரறிவே
யன்பெனுமணுவுள் ளமைந்தபேரொளியே யன்புருவாம் பரசிவமே.

உலகெ லாமுணர்ந் தோதற் கரியவ
னிலவு லாவிய நீர்மலி வேணிய
னலகில் சோதிய னம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்.

## ஸ்நாநஞ் செய்ய.

ஒன்றாயுலகனைத்துமானார்தாமே
ஊழிதோறூழியுயர்ந்தார்தாமே
நின்றாகியெங்குநிமிர்ந்தார்தாமே
நீர்வளிதீயாகாசமானார்தாமே
கொன்றடுங்கூற்றையுதைத்தார்தாமே
கோலப்பழனையுடையார்தாமே
சென்றடுதீர்த்தங்களானார்தாமே
திருவாலங்காடுறையுஞ்செல்வர்தாமே.

## திருமூலர் திருமந்திரம்.

அறிவாரமரர்களாதிப்பிரானைச்
செறிவானுறைபதஞ்சென்றுவலங்கொண்
மறிவார்வளைக்கைவருபுனற்கங்கைப்
பொறியார்புனன்மூழ்கப்புண்ணியராமே.



# விபூதி மகிமை, திருநீற்று மான்மிய

விருத்தம்.

சாதியினிற் றலையான தரும சிலர் தத்துவத்தி னெறியுணர்ந் தோர் தங்கள் கொள்கை, நீதியினிற் பிழையாத நெறியி னிற்போர் நித்தநிய மத்துநிக ழுங்கி தன்னிற், பூதியினைப் புதியபாசனத்துக் கொண்டு புலியதளி னுடையானைப் போற்றி நீற்றை, யாதிவரு மும்மலமு மறுத்த வாய்மை யருமுனிவர் முழுவதுமெய் யணிவ ரன்றே.

வசனம்

முழுநீறு பூசிய முனிவர் கற்பம், அநுகற்பம், உபகற்பம் என மூவகைத் திருநீற்றையாவது நித்தியாக்கினி நீற்றையாவது உள்ளன்போடு மும்மலங் கழியச் சிவபிரானுக்கெதிரிலும், அக்கி னிக்கெதிரிலும், வழியிலும், குருவுக்கெதிரிலும், அசுத்தமான நிலத்திலும் அணியாது, உத்தூளனமாகவும், திரிபுண்டரமாகவும், பிறை வடிவமாகவும் வட்டவடிவமாகவும், ஆகமவிதிப்படி அணிந்து பூசிக்கின்றவர்களாம்.

## உருத்திராக்ஷ மான்மியம்.



1-முகமுள்ளது சிவ சொரூபம் இதை யணிந்தால், ஹத்தி தோஷ நீங்கும். 2-முகமுள்ளது சிவ சத்தி, இதை யணிந்தால் பல கோஹத்தி நீங்கும். 3-முகமுள்ளது அக்கினி சொரூபம் இதை யணிந்தால் ஸ்திரீஹத்தி நீங்கும். 4-முகமுள்ளது பிரம்ம தேவசொரூபம் இதையணிந்தால் தீயநரகத்தினின்று நீக்கும் 5-முகமுள்ளது கால ருத்திர சொரூபம் இதை யணிநதால் தகாதபுசிப்பும் தகாத புணர்ச்சி தோஷத்தையும் போக்கும். 6-முகமுள்ளது சுப்பிரமணிய சொரூபம் இதை யணிந்தால் ப்ரூண (கற்ப) ஹத்தி நீக்கும். 7-முகமுள்ளது ஆதிசேஷ சொரூபம் இதை யணிந்தால் கோ ஹத்தியையும், போர்க் களக் கொலை பாதகத்தைபு நீக்கும். 8-முகமுள்ளது விநாயகர் சொரூபம் இதை யணிந்தால் பொருள்

தான முதலாகிய தானம் வாங்குதலாலான பாபத்தையும் பிறர்கைச் சோறு உண்பதால் சேரும் பாபத்தையும் பிட்சைகொடாத பாபத்தையும் நீக்கும். 9-முகமுள்ளது வயிரவ சொரூபம் இதை யணிந்தால் விஷ ஜெந்துக்களைக் கொன்ற பாபத்தை நீக்கும். 10-முகமுள்ளது விஷ்ணு சொரூபம் இதையணிந்தால் நவக்கிரக தோஷம், நட்சத்திரதோஷம், பைசாசம், பிர்ம்மராட்சதர் முதலானவர்களால் உண்டாகும் பயம் முதலிய குற்றங்களை நீக்கும். 11-முகமுள்ளது ஏகாதச ருத்திர சொரூபம் இதையணிந்தால் அஸ்வமேதயாக பலனும் லட்க்ஷங் கோதானபலனும் கொடுக்கும். 12 முகமுள்ளது துவாதசாதித்ய சொரூபம் இதையணிந்தால் அஸ்வமேதம், பசுமேதம், பொன், மேரு தான பலனைக் கொடுக்கும். 13-முகமுள்ளது இதை யணிந்தால் காமமல்லாத இஷ்டகாமியங்களையும், ரசவாத பொன்னையும், தாய் தந்தை சகோதிரர் இவர்களுக்குச் சதி செய்த பாதகத்தையும் நீக்கும். 14-முகமுள்ளது சிவம், சக்தி என்று இரண்டு சொரூபம்; இதை யணிந்தால் முனிவர்களும், தேவர்களும், மற்ற யாவரும் ஆசீர்வாதம் செய்யும்படியான பலனைக் கொடுத்து அழியாத மோட்க்ஷத்தைத் தரும்.

## உருத்திராட்சம் தரிக்கவேண்டிய ஸ்தானமும் பலனும்.

சிரசா ருறு கண்டமா லெட்டு சிகையிலொன்று
திரமார் ஐம்பது கரத்திலீ ரெட்டு சேர்மணிக்கட்
டிரண்டாறுந் தாழ்வட மீரைம்ப தோடெட் டிப்படியாத்
தரித்துச் சங்கரன் றாளிணை தியானித்துத் தயைகொளலே.

சிகையில் ஒன்றும், சிரசில் 36-ம், கண்டத்தில் 32-ம், மார்பில் 50-ம், கரத்தில் 16-ம், கரத்தின் மணிக்கட்டில் 12-ம், தாழ்வடத்தில் 108-ம், தரித்து உமாமகேஸ்வரனைத் தியானித்து யாதொரு ஜீவராசிகளையும் மிதிக்காமல் ஓரடி எடுத்துவைக்கில் ஒரு அஸ்வமேதயாக பலன் உண்டாகும். குடுமியில் ருத்திராட்க்ஷம் அணியில் கோடி பலனும் காதிலணியில் ஒன்பதுகோடி பலனும் கண்டத்திலணியில் ஆயிரங் கோடி பலனுமுண்டாகும்.

யாரும் முடிவுகாலத்தில். அன்புடன் உருத்திராட்சதாரணம் செய்வார்களாகில் நமவாதனையினின்று நீங்கி மறுபிறப்பின்றி மோக்ஷமடைவர்.

## அநுட்டானஞ்செய்ய.

திருநீற்றுப்பதிகம். பண்-காந்தாரம்.

மந்திரமாவதுநீறு வானவர்மேலதுநீறு
சுந்தரமாவதுநீறு துதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவதுநீறு சமயத்திலுள்ளதுநீறு
செந்துவர்வாயுமைபங்கன் றிருவாலவாயான்றிருநீறே

### தனித்திருநேரிசை.

சந்திரன்சடையில்வைத்த சங்கரன்சாமவேதி
யந்தரத்தமரர் பெம்மானானல்வெள் ளூர்தியான்றன்
மந்திரநமச்சிவாயவாக நீறணியப் பெற்றால்
வெந்தறும்வினையுநோயும் வெவ்வழல்விறகிட்டன்றே

### திருவிருத்தம்.

கருவாய்க்கிடந்துன்கழலே நினையுங்கருத்துடையேன்
உருவாய்த்தெரிந்துன்றனாமம் பயின்றேனுனதருளாற்
றிருவாய்ப்பொலியச்சிவாய நமவென்றுநீறணிந்தேன்
றருவாய்சிவகதிநீபாதிரிப்புலியூரானே.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவதரிசனவிதி.



1. ஆலயத்துக்குட் சென்றவுடனே துவஜபலி பீடத்தண்டை வடமேற்குமுகமாய் சாஷ்டாங்க தண்டம் செய்து சிரசும், நெஞ்சும் பூமியிற் படும்படியா யமர்ந்திருந்தபடியே முன்னே வலது கையையும் பின்பு இடது கையையும் சிரசின்பக்கமாய் நீட்டி கீழ்படியவைத்துப் பிறகு அதேமுறையில் கைகளைப் பின்புறம் நீட்டித்

துடையோடு சேரவைத்தும் அடியார் திருவடி தூளதம் இரு புஜ த்தில் படும்படியாகப் படியவைத்துப் வலதுகாதை முன்னும் இடது காதைப் பின்னும் பூமியிற் பொருந்தவைத்தும் இப்படிப் பணிந் திருப்பதில் இரண்டு முழுந்தாள், நெற்றி, பூமியில் ஏககாலத்தில் படும்படியாய் வைத்தும், இவ்வாறு சாஷ்டாங்க தண்டம் செய்த வுடன், எழுந்து காமியார்த்தம் கோருவோர்கள் ஆலயத்துக்கு வல துபக்கமாகவும், மோக்ஷார்த்தம் கோருபவர்கள் இடது பக்கமாக வும், இரண்டும் கோருகிறவர்கள் மேற்கூறிய இரண்டு விதமாகவும் பிரகாரம் வந்து, அப்படி வருவதில் பஞ்சாட்சரத்தை மனதிலே யே தியானித்துக்கொண்டு மூன்று தடவைமுதல் 7-தடவைவரை யில் இம் மாதிரி பிரகாரம் வந்தவுடன் 1. கணபதி 2. நந்தி 3. திரு ம்பக்கணபதி 4. மூலலிங்கம் 5. நடராஜமூர்த்தி 6 சோமாஸ்கந்தர் 7 மூலஸ்தானம் (ஸ்தூபி) 8. மூலஅம்மன் 9. சண்டிகேஸ்வரர் 10. வயிரவர் இந்த வரிசைப்படிக்கே தரிசித்துவரவேண்டுமென்று ஏற்பட்டிருக்கின்றது.

2. அப்படி வருவதில் சங்கராந்தி புண்ணிய மாதத்தி லும், உச்சிப்பொழுதுக்கு மேற்பட்டும், சூரிய கிரகணத்தன் றும், சாஷ்டாங்க தண்டமின்றி, நின்றபடியே அஞ்சலி கூப் பித் தரிசிக்கவேண்டும். மற்ற காலங்களிலெல்லாம் மேற்கூறிய பலிபீடத்தண்டை மேற்குமுகமாய் நின்று சாஷ்டாங்கமாய்ப் படி ந்து எழுந்து காமியார்த்தம் கோருவோர்கள் ஆலயத்திற்கு வலது பக்கமாகவும் மோக்ஷார்த்தம் கோருகிறவர்கள் இடதுபக்கமாகவும் இரண்டும் கோருகிறவர்கள் இரண்டுவிதமாகவும் பிரகாரம் வந்து அந்தப்படி வருவதில் பஞ்சாட்சரத்தை மனதிலே தியானித்துக் கொண்டு மூன்றுதடவை முதல் ஏழுதடவை யிம்மாதிரி பிரகாரம் வந்தவுடன் மேற்கூறிய மூர்த்திகளை மேற்கூறிய வரிசைக் கிரமத் தில் தரிசிக்கவேண்டியதென்று விதிகளால் ஏற்பட்டிருக்கின்றன.



## ஜெபஞ்செய்ய.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருமுறை 3-ல்
நமச்சிவாயத்திருப்பதிகம்-பண்-கௌசிகம்.

காதலாகிக்கசிந்து கண்ணீர்மல்கி
யோதுவார்தமை நன்னெறிக்குய்ப்பது
வேதநான்கினு மெய்ப்பொருளாவது
நாதநாமநமச்சிவாயவே.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருமுறை 3-ல்
பலவகைத் திருத்தாண்டகம்.

தந்தையார்தாயாருடன்பிறந்தார்
தாரமார்புத்திரரார் தாந்தாமாரே
வந்தவாறெங்ஙனே போமாறேதோ
மாயமாமிதற்கேதுமகிழவேண்டா
சிந்தையீருமக்கொன்று சொல்லக்கேண்மின்
றிகழ்மதியும் வாளரவுந்திளைக்குஞ்சென்னி
யெந்தையார் திருநாமநமச்சிவாய
வென்றெழுவார்க்கிருவிசும்பிலிருக்கலாமே.

திருமுறை 2-ல் திருநல்லம் பண்-திருக்குறுந்தொகை.

அல்லலாகவைம் பூதங்க ளாட்டினும்
வல்லவாறு சிவாயநமவென்று
நல்லமேவிய நாத னடிதொழ
வெல்லவந்த வினைப்பகைவீடுமே.

## பூசைசெய்ய ஆரம்பிப்பதற்குமுன் தோத்திரஞ்செய்ய.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருமுறை 1-ல்
திருப்பிரமபுரம் பண்-நட்டபாடை.

தோடுடையசெவியன்விடையேறியோர்தூவெண்மதிசூடிக்
காடுடையசுடலைப்பொடிப்பூசியென்னுள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமலரான்முனைநாள்பணிந்தேத்தவருள்செய்த
பீடுடையபிரமாபுரமேவிய பெம்மானிவனன்றே.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருமுறை ௪-ல்.

திருவதிகைவீரட்டானம் பண்-கொல்லி

கூற்றாயினவாறுவிலக்ககிலீர் கொடுமைபலசெய்தனநானறியே
னேற்றாயடிக்கேயிரவும்பகலும்பிரியாதுவணங்குவனெப்பொழுதுந்
தோற்றாதென்வயிற் றினகம்படியேகுடரோடுதொடக்கிமுடக்கியிட
வாற்றேனடியேனதிகைக்கெடிலவீரட்டானத்துறையம்மானே.

சுந்தரமூர்த்திசுவாமிகள் திருமுறையில்.

திருவெண்ணெய்நல்லூர் பண்-இந்தளம்.

பித்தாபிறைசூடி பெருமானேயருளாளா
வெத்தான்மறவாதேநினைக்கின்றேன்மனத்துன்னை
வைத்தாய்பெண்ணைத்தென்பால்வெண்ணெய்நல்லூரருட்டுறையு
ளத்தாவுனக்காளாயினி யல்லேனெனலாமே.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருமுறை 3 ல்.

திருவாலவாய்த்திருத்தாண்டகம்.

முளைத்தானையெல்லார்க்குமுன்னேதோன்றி
முதிருஞ்சடைமுடிமேன் முகிழ்வெண்டிங்கள்
வளைத்தானைவல்லசுரர்புரங்கண்மூன்றும்
வரைசிலையாவாசுகிமாநாணுக்கோத்துத்
துளைத்தானைச்சுடுசரந்தாற்றுவளநீறுத்
தூமுத்தவெண்முறுவலுமையோடாடித்
திளைத்தானைத்தென்கூடற்றிருவாலவாய்ச்
சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே.

## பூதசுத்திசெய்ய.

ஷை திருமுறை 3ல் திருக்கற்குடி திருத்தாண்டகம்.

மண்ணதனிலைந்தைமாநீரினான்கை
வயங்கெரியின்மூன்றைமாருதத்திரண்டை
விண்ணதனிலொன்றைவிரிகதிரைத்
தண்மதியைத்தாரகைகடம்மின்மிக்க

வெண்ணைதனிலெழுத்தையேழிசையைக்காம
னெழிலழியவெரியுமிழ்ந்தவிமையா நெற்றிக்
கண்ணவனைக்கற்குடியில் விழுமியானைக்
கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனானே.

ஷ டிருமுறை 1ல் சிவனெனுமோசை பண் பியந்தைக்காந்தாரம்

விரிகதிர் ஞாயிறல்லர் மதியல்லர் வேதவிதியல்லர் விண்ணுநிலனுந்
திரிதருவாயுவல்லர்செறிதீயுமல்லர்தெளிநீருமல்லர்தெரியி
லரிதருகண்ணியாளையொருபாகமாகவருள்காரணத்தில்வருவா
ரெரியரவாரமார்வரிமையாருமல்லரிமைப்பாருமல்லரிவரே

## உட்பூசைசெய்ய.

ஷ டிருமுறை 1ல் தனித்திருநேரிசை.

காயமேகோயிலாகக் கடிமன மடிமையாக
வாய்மையேதூய்மையாகமனமணியிலிங்கமாக
நேயமேநெய்யும்பாலாநிறையநீரமையவாட்டிப்
பூசனையீசனார்க்குப்போற்றவிக்காட்டினோமே.

ஷ டிருமுறை 2ல் தனித்திருக்குறுந்தொகை.

தெள்ளத்தேறித்தெளிந்துதித்திப்பதோ
ருள்ளத்தேறலமுதவொளிவெளி
கள்ளத்தேன்கடியேன்கவலைக்கடல்
வெள்ளத்தேனுக்கெவ்வாறுவிளைந்ததே.

ஷ டிருமுறை 2ல் கோயிற்றிருக்குறுந்தொகை.

பனைக்கைமும்மதவேழமுரித்தவ
னினைப்பவாமனங்கோயிலாக்கொண்டவ
னனைத்தும்வேடமாமம்பலக்கூத்தனைத்
தினைத்தனைப்பொழுதும்மறந்துய்வனோ.

ஷை திருமுறை 1ல் தனித்திருநேரிசை.

உடம்பெனுமனையகத்துளுள்ளமேதகளியாக
மடம்படுமுணர்நெய்யட்டியுயிரெனுந்திரிமயக்கி
யிடம்படுஞானத்தீயாலெரிகொளவிருந்துநோக்கிற்
கடம்பமர்காளைதாதைகழலடிகாணலாமே.

ஷை திருமுறை 1ல் கோயில்திருவிருத்தம் பண் கொல்லி.

முடிகொண்டமத்தமுமுக்கண்ணினோக்குமுறுவலிப்புந்
துடிகொண்டகையுந்துதைந்தவெண்ணீறுஞ்சுரிகுழலாள்
படிகொண்டபாகமும்பாய்புலித்தோலுமென்பாவிநெஞ்சிற்
குடிகொண்டவாதில்லையம்பலக்கூத்தன்குரைகழலே.

## துவாரபூசைசெய்ய.

சுந்தரமூர்த்திசுவாமிகள்திருமுறையில்

திருப்புன்கூர் — பண் — தக்கேசி.

நற்றமிழ்வல்லஞானசம்பந்த
  னாவினுக்கரையனாளைப்போவானுங்
கற்றசூதனற்சாக்கியன்சிலந்தி
  கண்ணப்பன்கணம்புல்லனென்றிவர்கள்
குற்றஞ்செய்யினுங்குணமெனக்கருதுங்
  கொள்கைகண்டுநின்குரைகழலடைந்தேன்
பொற்றிரண்மணிக்கமலங்கண்மலரும்
  பொய்கைசூழ்திருப்புன்கூருளானே.

மூவெயில்செற்றஞான்றுய்ந்தமூவரி
  லிருவர்நின்றிருக்கோயிலின்வாய்தல்
காவலாளரென்றேவியபின்னை
  யொருவனீகரிகாடரங்காக
மானைநோக்கியோர்மாநடமகிழ
மணிமுழாமுழக்கவருள்செய்த
  தேவதேவநின்றிருவடியடைந்தேன்
செழும்பொழிற்றிருப்புன்கூருளானே.

## சிவோகம் பாவனைசெய்ய.

ஷை திருமுறையில் - திருவொற்றியூர் - பண் - தக்கேசி.

வழித்தலைப்படுவான் முயல்கின்றே
னுன்னைப்போலென்னைப்பாவிக்கமாட்டேன்
சுழித்தலைப்பட்டநீரதுபோலச்
சுழல்கின்றேன் சுழல்கின்றதென்னுள்ளங்
கழித்தலைப்பட்டநாயதுபோல
வொருவன்கோல்பற்றிக்கறகறவிழுக்கை
யொழித்துநீயருளாயினசெய்யா
வொற்றியூரெனுமூருறைவானே.

திருநாவுக்கரசுசுவாமிகள் திருமுறை 1-ல்
கோயிற்றிருநேரிசை - பண் - கொல்லி.

பத்தனாய்ப்பாடமாட்டேன் பரமனே பரமயோகி
யெத்தினாற்பத்திசெய்கேனென்னைநீயிகழவேண்டாம்
முத்தனேமுதல்வாதில்லையம்பலத்தாடுகின்ற
அத்தாவுன்னாடல்காண்பானடியனேன்வந்தவாறே.

## திரவியசுத்திசெய்ய.

ஷை திருமுறை 3-ல் நின்றதிருந்தாண்டகம்.

ஆவாகியாவினிலைந்துமாகியறிவாகியழலாகியவியுமாகி
நாவாகிநாவுக்கோருரையுமாகிநாதனாய்வேதத்தினுள்ளானாகிப்
பூவாகிப்பூவுக்கோர்நாற்றமாகிப்புக்குளால்வாசமாய்நின்றானாகித்
தேவாகித்தேவர்முதலுமாகிச்செழுஞ்சுடராய்ச்சென்றடிகணின்ற
[வாறே.

## மந்திரசுத்திசெய்ய.

ஷை திருமுறை 3-ல் திருப்புள்ளிருக்குவேளூர்
திருத்தாண்டகம்.

பேராயிரம்பரவிவானோரேத்தும்
பெம்மானைப்பிரிவிலாவடியார்க்கென்றும்
வாராதசெல்வம்வருவிப்பானை
மந்திரமுந்தந்திரமுமருந்துமாகித்

தீராநோய்தீர்த்தருளவல்லான்றன்னைத்
திரிபுரங்கடீயெழுத்திண்சிலைகைக்கொண்ட
போரானைப்புள்ளிருக்கும்வேளூரானைப்
போற்றாதேயாற்றநாள்போக்கினேனே.

## பெட்டகக்கோயில்திறக்க.

ஷை திருமுறை 2-ல் திருமறைக்காடு திருக்குறுந்தொகை.

பண்ணினேர்மொழியாளுமைபங்கரோ
மண்ணினார்வலஞ்செய்மறைக்காடரோ
கண்ணினாலுமைக்காணக்கதவினைத்
திண்ணமாகத்திறந்தருள்செய்ம்மினே.

## *பெட்டகக்கோயிலினின்றும் மூர்த்தியையெழுந்தருளப்பண்ண.

ஷை திருமுறை 3-ல் திருப்புள்ளிருக்கும்வேளூர்
திருத்தாண்டகம்.

ஆண்டானையடியேனையாளக்கொண்டு
வடியோடுமுடியயன்மாலறியாவண்ண
நீண்டானைநெடுங்களமாநகரான்றன்னை
நேமிவான்படையானீளாரவோடுகங்
கீண்டானைக்கேதாரமேவினானைக்
கேடிலியைக்கிளர்பொறிவாளரவோடென்பு
பூண்டானைப்புள்ளிருக்கும்வேளூரானைப்
போற்றாதேயாற்றநாள்போக்கினேனே.

## ஸ்நானவேதிகையில் மூர்த்தியை யெழுந்தருளச்செய்தபின் சொல்ல.

ஷை திருமுறை 2-ல்
கடிவாய்க்கரைத்திருப்புத்தூர் திருக்குறுந்தொகை.

பந்தபாசமறுத்தெனையாட்கொண்ட
மைந்தனைம்மணிவாளனைமாமலர்க்
கந்தநீர்க்கடுவாய்க்கரைத்தென்புத்தூர்
எந்தைபிசனைக்கண்டினிதாயிற்றே.

*பெட்டகம் பூசைப்பெட்டி.

## இலிங்கசுத்திசெய்ய.

ஷை திருமுறை 6-ல் நின்றதிருத்தாண்டகம்.

இருநிலனாய்த்தீயாகிநீருமாகி
யியமானனாயெறியுங்காற்றுமாகி
யருநிலையதிங்களாய்ஞாயிறாகி
யாகாசமாயட்டமூர்த்தியாகிப்
பெருநலமுங்குற்றமும்பெண்ணுமாணும்
பிறருருவுந்தம்முருவுந்தாமேயாகி
நெருநலையாயின்றாகிநாளையாகி
நிமிர்புன்சடையடிகணின்றவாறே.

## அஷ்டபுஷ்பஞ்சாத்த.

ஷை திருமுறை 2-ல் திருமறைக்காடு திருக்குறுந்தொகை.

அட்டமாமலர்சூடியடம்பொடு
வட்டப்புன்சடைமாமறைக்காடரோ
நட்டமாடியுநான்மறைபாடியு
மிட்டமாகவிருக்குமிடமதே.

## தூபதீபம்.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருமுறை 3-ல்
திருச்சண்பைநகர் திருவிராகம் பண் சாதாரி.

எந்தமதுசிந்தைபிரியாதபெருமானெனவிறைஞ்சியிமையோர்
வந்துதுதிசெய்யவளர்தீபமொடுதூபமலிவாய்மையதனா
லந்தியமர்சந்திபலவர்ச்சனைகள்செய்யவமர்கின்றவழகன்
சந்தமலிகொந்தளநன்மாதினொடுமேவுபதிசண்பைநகரே.

## எண்ணெய்க்காப்பு.

ஷை திருமுறை 3-ல் கோயில் பண் காந்தாரபஞ்சமம்.

ஆடினாய்நறுநெய்யொடுபால்தயிர் அந்தணர்பிரியாதசிற்றம்பல
நாடினாயிடமாநறுங்கொன்றைநயந்தவனே [ண்டிங்கள்
பாடினாய்மறையோடுபல்கீதமும்பல்சடைப்பணிகால்கதிர்வெ
சூடினாயருளாய்சுருங்கவெந்தொல்வினையே,

## நெல்லிக்காப்பு.

திருநாவுக்கரசுசுவாமிகள் திருமுறை 2-ல்
திருநீலக்குடி திருக்குறுந்தொகை.

செய்யமேனியன்றேனொடுபாலுதயிர்
நெய்யதாடியநீலக்குடியரன்
மையலாய்மறவாமனத்தார்க்கெலா
கையில்ஆமலகக்கனியொக்குமே.

## பஞ்சகவ்விய அபிஷேகம்.

ஷெடி திருமுறை 2-ல் பாவநாசத் திருக்குறுந்தொகை.

பாவமும் பழிப்பற்றறவேண்டுவீர்
ஆவிலைஞ்சுகந்தாடுமவன்கழல
மேவராய் மிகவும் மகிழ்ந்துள்குமின்
காவலாளன் கலந்தருள் செய்யுமே.

## பஞ்சாமிர்த அபிஷேகம்.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருமுறை
திருச்செங்காட்டங்குடி-பண்-பழந்தக்கராகம்.

பாலினாறுநெய்யாற் பழத்தினாற் பயின்றாட்டி
நூலினான் மணமாலைகொணர்ந்தடியார்புரிந்தேத்தச்
சேலினார்வயல்புடைசூழ்செங்காட்டங்குடியதனுட்
காலினாற்கூற்றுதைத்தான்கணபதீச்சரத்தானே.

## நெய்யபிஷேகம்.

திருநாவுக்கரசுசுவாமிகள் திருமுறை 3-ல்
திருப்புகலூர் திருத்தாண்டகம்.

நெய்யாடி நின்மலனே நீலகண்டா
நிறைவுடையாய் மறைவல்லாய் நீதியானே
மையாடு கண்மடவாள் பாகத்தானே
மான்றோலுடையாய் மகிழ்ந்து நின்றாய்

சொய்யாடு கூவிளங்கொன்றைமாலை
கொண்டடியேனுனிட்டுக்கூறிநின்று
பொய்யாதசேவடிக்கேபோதுகின்றேன்
பூம்புகலூர் மேவிய புண்ணியனே

## பாலபிஷேகம்.

ஷை திருமுறை 2-ல் திருவெண்காடு திருக்குறுந்தொகை.

பாலையாடுவர்பன்முறையோதுவர்
சேலையாடியகண்ணுமைபங்கனார்
வேலையார்விடமுண்டவெண்காடர்க்கு
மாலையாவதுமாண்டவராங்கமே.

## தயிரபிஷேகம்.

சுந்தரமூர்த்திசுவாமிகள் திருமுறையில்
திருவோணகாந்தன்றளி—பண்—இந்தளம்.

நெய்யும்பாலுந்தயிருங்கொண்டுநித்தம்பூசனைசெய்யலுற்றார்
கையிலொன்றுங்காணமில்லைக்கழலடிதொழுதுய்யினல்லா
லைவர்கொண்டிங்காட்டவாடியாழ்குழிபட்டழுந்துவேனுக்
குய்யுமாறென்றருளிச்செய்யீரோணகாந்தன்றளியுளீரே.

## தேனபிஷேகம்.

ஷை திருமுறையில் திருவாவடுதுறை பண்-தக்கேசி.

வானநாடனேவழித்துணைமருந்தே
மாசிலாமணியேமறைப்பொருளே
ஏனமாவெயிறாமையுமெலும்பு
மீடுதாங்கியமார்புடையானே
தேனெய்பால்தயிராட்டுகந்தானே
தேவனேதிருவாவடுதுறையு
ளானேயேயெனையஞ்சலென்றருளா
யாரெனக்குறவமரர்களேறே.

## கருப்பஞ்சாறபிஷேகம்.

திருநாவுக்கரசுசுவாமிகள் திருமுறை 3-ல்
திருவீழிமிழலை திருத்தாண்டகம்.

ஆலைப்படுகரும்பின்சாறுபோல
வண்ணிக்குமஞ்செழுத்தினாமத்தான்காண்
சீலமுடையடியார் சிந்தையான்காண்
திரிபுரமூன்றெரிபடுத்தசிலையினான்காண்
பாலினொடுதயிர்நறுநெய்யாடினான்காண்
பண்டரங்கவேடன்காண்பலிதேர்வான்காண்
வேலைவிடமுண்டமிடற்றினான்காண்
விண்ணிழிதன்வீழிமிழலையானே.

## பல்கனிச்சாறபிஷேகம்.

ஷை திருமுறை 2-ல் திருவிடைமருதூர் திருக்குறுந்தொகை.

கனியினுங்கட்டிபட்டகரும்பினும்
பனிமலர்க்குழற்பாவைநல்லாரினுந்
தனிமுடிகவித்தாளுமரசினும்
இனியன்றன்னடைந்தார்க்கிடைமருதனே

## இளநீரபிஷேகம்.

ஷை திருமுறை 3-ல் திருவீழிமிழலை திருத்தாண்டகம்

நெய்யினொடுபாலிளநீராடினான்கா
ணித்தன்மணவாளனெனநிற்கின்றான்காண்
கையின்மழுவாளொடுமானேந்தினான்காண்
காலனுயிர்காலாற்கழிவித்தான்காண்
செய்யதிருமேனிவெண்ணீற்றினான்காண்
செஞ்சடைமேல்வெண்மதியஞ்சேர்த்தினான்காண்
வெய்யகனல்விளையாட்டாடினான்காண்
விண்ணிழிதன்வீழிமிழலையானே

## சந்தனக்குழம்பபிஷேகம்.

ஷை திருமுறை 1-ல் தனித்திருநேரிசை.

தொண்டனேன்பட்டதென்னே தூயகாவிரியினன்னீர்
கொண்டிருக்கோதியாட்டிக்குங்குமக்குழம்புசாத்தி
யிண்டைகொண்டேறநோக்கியீசனையெம்பிரானைக்
கண்டனைக்கண்டிராதேகாலத்தைக்கழித்தவாறே

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருமுறை 3-ல்
திருக்கானப்பேர் பண்-கொல்லி.

வாவிவாய்த்தங்கியநுண்சிறைவண்டினங்
சாவிவாய்ப்பண்செயுங்கானப்பேரண்ணலை
நாவிவாய்ச்சாந்துளும்பூவுளுஞானநீர்
தூவிவாய்ப்பெய்துநின்றூட்டுவார்தொண்டரே.

## தூபம்.

ஷை திருமுறை 1-ல் திருச்செங்காட்டங்குடி
பண் பழந்தக்கராகம்.

தொங்கலுங்கமழ்சாந்துமகிற்புகையுந்தொண்டர்கொண்
டங்கையாற்றொழுதேத்தவருச்சனற்கன்றருள்செய்தான்
செங்கயல்பாய்வயலுடுத்தசெங்காட்டங்குடியதனுட்
கங்கைசேர்வார்சடையான்கணபதீச்சரத்தானே.

## சுத்தஜல அபிஷேகம்.

ஷை திருமுறை 1-ல் திருவிடைமருதூர் பண் தக்கராகம்.

தடங்கொண்ட தோர்தாமரைப்பொன்முடிதன்மேற்
குடங்கொண்டடியார்குளிர்நீர்சுமந்தாட்டப்
படங்கொண்டதோர்பாம்பரையார்த்தபரம
னிடங்கொண்டிருந்தான்றனிடைமருதீதோ.

### மூர்த்தியைப்பீடத்திலெழுந்தருளப்பண்ண.

ஷை திருமுறை 2ல் திருப்புள்ளிருக்குவேளூர்

பண்-சீகாமரம்.

கள்ளார்ந்தபூங்கொன்றைமதமத்தங்கதிர்மதிய
முள்ளார்ந்தசடைமுடியெம்பெருமானாருறையுமிடந்
தள்ளாயஞ்சம்பாதிசடாயென்பார்தாமிருவர்
புள்ளானார்க்கரையனிடம்புள்ளிருக்குவேளூரே.

### ஆவாகனஞ்செய்ய.

திருநாவுக்கரசுசுவாமிகள் திருமுறை 2-ல் சித்தத்தொகை

திருக்குறுந்தொகை.

அண்டமாரிருளூடுகடந்தும்பர்
உண்டுபோலுமோரொண்சுடரச்சுடர்
கண்டிங்காரறிவாரறிவாரெலாம்
வெண்டிங்கட்கண்ணிவேதியனென்பரே.

ஷை திருமுறை 2-ல் திருஇன்னம்பர் திருக்குறுந்தொகை.

என்னிலாருமெனக்கினியாரில்லை
யென்னிலும்மினியானொருவனுளன்
என்னுளேயுயிர்ப்பாய்ப்புறம்போந்துபுக்
கென்னுளேநிற்குமின்னம்பரீசனே.

சிவதருமோத்தரம் பரிகாரவியல் 89-ம் திருவிருத்தம்.

உச்சிமுகமீசானமொளிதெளியபளிங்கே
யுத்தரபூருவதிசையைநோக்கியுறுமுகந்தே
நிச்சயித்தமுகத்தின்கீழ்ப்பூர்வதிசைநோக்கி
நிகழுமுகந்தற்புருடங்கோங்கலர்போனிறமே
யச்சுறுத்துமகோரமுகமறக்கரிதுகராள
மவிழ்தாடிவலத்தோளிற்றென்னோக்கியமருஞ்
செச்சைநிறத்தெரிவைமுகம்பிடத்தோண்மேல்வாமஞ்
சிறுபுறத்தின்முகஞ்சத்தியோசாதந்திகழ்பால்.

## அர்க்கியங்கொடுக்க.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருமுறை 2-ல்
திருநணிபள்ளி பண்-பியந்தைக்காந்தாரம்.

தோடொருகாதனொருகாதிலங்குசுரிசங்கநின்றுபுரளக்
காடிடமாகநின்றுகனலாடுமெந்தையிடமாயகாதனகர்தான்
வீடுடனெய்துவார்கள்விதியென்றுசென்றுவெறிநீர்தெளிப்பவிரலா
னூடுடனுபிசெம்மையொவிவெள்ளமாருநணிபள்ளிபோலுநமர்காள்.

## கோவணம்பாவனைசாத்த.

ஷை திருமுறை 3-ல் திருக்கொள்ளிக்காடு பண்-காந்தாரபஞ்சமம

பாவணமேவுசொன்மாலையிற்பல
நாவணங்கொள்கையினவின்றுசெங்கைய
ராவணங்கொண்டவுடையாள்வாரியினுங்
கோவணங்கொள்கையர்கொள்ளிக்காடரே.

## கீள்பாவனைசாத்த.

திருநாவுக்கரசுசுவாமிகள் திருமுறை 2-ல்
திருப்பராய்த்துறை திருக்குறுந்தொகை.

பட்டநெற்றியர்பான்மதிக்கீற்றினர்
நட்டமாடுவர்நள்ளிருளேமமுஞ்
சிட்டனர்தென்பராய்த்துறைச்செல்வனார்
இட்டமாயிருப்பாரையறிவரே.

## பரிவட்டஞ்சாத்த.

ஷை திருமுறை 1-ல் திருப்பருப்பதம் திருநேரிசை.

கட்டிட்டதலைகையேந்திக்கனலெரியாடிச்சீறிச்
சுட்டிட்டநீறுபூசிச்சுடுபிணக்காடராகி
விட்டிட்டவேட்கையார்க்குமேவறிருந்தருள்கள்செய்து
பட்டிட்டவுடையராகிப்பருப்பதநோக்கினாரே.

## சந்தனஞ்சாத்த.

ஷை டி திருமுறை 3-ல் திருக்கீழ்வேளூர் திருத்தாண்டகம்.

ஆளானவடியவர்கட்கன்பன்றன்னை
யானஞ்சுமாடியைநானபயம்புக்க
தாளானைத்தன்னொப்பாரில்லாதானைச்
சந்தனமுங்குங்குமமுஞ்சாந்துந்தோய்ந்த
தோளானைத்தோளாதமுத்தொப்பானைத்
தூவெளுத்தகோவணத்தையரையிலார்த்த
கேளானைக்கீழ்வேளூராளுங்கோவைக்
கேடிலியைநாடுமவர்கேடிலாரே.

## திருவாபரணஞ்சாத்த.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருமுறை 2-ல்
திருக்கைச்சினம் பண்-சீகாமரம்.

மங்கையோர்கூறுடையான்மன்னுமறைபயின்றான்
அங்கையோர்வெண்டலையானாடரவம்பூண்டுகந்தான்
திங்களொடுபாம்பணிந்தசீரார்திருமுடிமேற்
கங்கையினான்மேவியுறைகோயில்கைச்சினமே.

திருநாவுக்கரசுசுவாமிகள் திருமுறை 3-ல்
தனித்திருத்தாண்டகம்.

நின்னாவார்பிறரின்றிநீயேயானாய்
நினைப்பார்கண்மனத்துக்கோர்வித்துமானாய்
மன்னானாய்மன்னவர்க்கோரமுதமானாய்
மறைநான்குமானாயாறங்கமானாய்
பொன்னானாய்மணியானாய்போகமானாய்
பூமிமேற்புகழ்தக்கபொருளேயுன்னை
யென்னானாயென்னானாயென்னினல்லா
லேழையேனென்சொல்லியேத்துகேனே.

## பூணூல் சாத்த.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருமுறை 2-ல்

திருநணா பண்-காந்தாரம்

முத்தேர்நகையாளிடமாகத்தன்மார்பில்வெண்ணூல்பூண்டு
தொத்தேர்மலர்சடையில் வைத்தாரிடம்போலுஞ்சோலைசூழ்ந்த
வத்தேனளியுண்களியாலிசைமுரல்வாலத்தும்பி
தெத்தேயெனமுரலக்கேட்டார்வினைகெடுக்குந்திருநணாவே.

## புஷ்பாஞ்சலி.

திருநாவுக்கரசுசுவாமிகள் திருமுறை 1-ல்

திருவையாறு திருவிருத்தம்.

நின்போலமார்கணீண்முடிசாய்த்துநிமிர்த்துகுத்த
பைம்போதுழக்கிப்பவளந்தழைப்பனபாங்கறியா
வென்போலிகள்பறித்திட்டவிலைபுமுகையுமெல்லா
மம்போதெனக்கொள்ளுமையனையாறனடித்தலமே.

## இண்டை சாத்த.

ஷை திருமுறை 1-ல் திருஏகம்பம் பண்-காந்தாரம்.

அண்டமாயாதியாயருமறையோடைம்பூதப்',
பிண்டமாயுலக்குக்கோர்பெய்பொருளாம்பிஞ்ஞகனைத்
தொண்டர்தாமலர்தூவிச்சொன்மாலைபுனைகின்ற
இண்டைசேர்சடையானையென்மனத்தேவைத்தேனே.

## திருப்பள்ளித்தாமஞ்சாத்த.

ஷை திருமுறை 2-ல் திருப்பராய்த்துறை திருக்குறுந்தொகை.

போதுதாதொடுகொண்டுபுனைந்துடன்
தாதவிழ்சடைச்சங்கரன்பாதத்துள்
வாதைதீர்க்கவென்றேத்திப்பராய்த்துறைச்
சோதியானைத்தொழுதெழுந்துய்ம்மினே.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருமுறை 2-ல்
திருவேகம்பம் பண்-இந்தளம்.

மொச்சியேவன்னிகொன்றைமதிகூவிளம்
உச்சியேபுனைதல்வேடம்விடையூர்தியான்
கச்சியேகம்பமேயகறைக்கண்டனை
நச்சியேதொழுமினும்மேல்வினைநையுமே.

## போகாங்கமூர்த்தி பூசைக்குத்தியானம்.

சிவதருமோத்தரம் பரிகாரவியல் 91-ம் விருத்தம்.

திருவுருவந் தெளிபளிங்குதிரிநயனம்பிறையுஞ்
செரிசடையர்வலக்கரத்திற்றிரிசூலமவரதம்
கருதுகமழ்மறையகரத்திற்செபமாலையபயங்
காருணிகர்க்கீசானர்க்கவர்தமக்குக்கனிட்டர்
திருவுருவங்கோங்கினலர்திரிநயனங்கரமுன்
செப்பியதேதிருநாமந்தற்புருடதேவர்
வரியரவு மிளம்பிறையுஞ் சடைமுடியின் வைத்தார்
மலரடியை மறவாதார் வல்வினையை மாய்ப்பார்.

இதுவுமது 92-ம் விருத்தம்.

கரியவுருவெறிய சடைகபால நிறைமாலை
கராளமுகங் கவிழ்தாடிகண்மூன்றுவட்டங்
கரதலங்க ளொருநான்குங் கட்டுரைத்தபடியே
காட்டினமுன்னிருநான்கு கரமுமுளரென்றே
வெருவியிடமருவலரை வெருட்டிய உக்கிரத்து
விக்கிரகாகோரமென விளம்பு பெயருடையார்
இருபதமு மொருபொழுது மறவாதே யேத்தி
யெண்ணுமவரிடர் வினையை யிடிப்பார்களென்றும்.

இதுவுமது 93-ம் விருத்தம்.

தேமொழியாளுமையென்னைத் திருமுகமுந்தோடுந்
திலகமுதற்சிறப்புமிரு ளளகவிதச்செறிவும
வாமமெனுந்தேவர்க்கு வாய்த்தனவேசெம்மை
வடிவுமவர்கரதலங்கண் ஞானில்வகுப்பே

சேடவுருத்திகழ்சங்கஞ் சடாமுடியிற் பிறையுந்
திரிநயனங்கரதலங்கள் செப்பியமுற்படியே
நாயமதுசத்தியோ சாதமெனநின்ற
நாதற்குநயந்தவளை நினைக்கவினைநாசம்.

இதுவுமது 14-ம் விருத்தம்.

திருவுருவமிருதயர்க்குத் தவளமெனத்தெளிக
சேடித்தவுறுப்பனைத்துஞ் செப்பியமுற்படியே
திருவுருவங்கனகமெனச் சிரத்தினுக்குத்தெளிக
சேடித்தவுருப்பனைத்துஞ் செப்பியமுற்படியே
திருவுருவஞ்சிந்தூர மெனத்தெளிகசிகைக்குச்
சேடித்தவுறுப்பனைத்துஞ் செப்பியமுற்படியே
திருவுருவம்வண்டிறங்க ராளமுகங்கவசஞ்
சேடித்தவுறுப்பனைத்துஞ செப்பியமுற்படியே.

இதுவுமது 15-ம் விருத்தம்.

ஒவ்வொன்றேதிருமுகமு நேத்திரங்கட்குணரி
லுடலொளியுமிரவிமதி யுதாசனனையொக்கு
மிவ்விரண்டேகரதலமும் வரப்பையமவையு
மிவ்விரண்டேவிழியுமென வெண்ணிடுகவெழிலார்
செவ்வரத்தந்திருவுருவங் கரதலமீரைந்துந்
திருநயனமொருமூன்றுஞ் சினத்திடித்தகுரலு
மிவ்வகையெல்லாமுடைய ரத்திரனொன்றியம்பு
மிவரடியையிருதயத்தினிருத்தினிடரிலையே

நிவேதனம்செய்ய

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமுறையில்.

திருவேகம்பம்—பண்-தக்கேசி.

ஆலந்தானுகந்தமுதுசெய்தானை
யாதியையமரர்தொழுதேத்துஞ்
சீலந்தான்பெரிதுமுடையானைச்
சிந்திப்பாரவர்சிந்தையுளானை

யேலவார்குழலாளுமைநங்கை
யென்றுமேத்திவழிபடப்பெற்ற
காலகாலனைக்கம்பனெம்மானைக்
காணக்கண்ணடியேன்பெற்றவாறே.

திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் திருமுறை 3-ல்
திருவேகம்பம் திருவிருக்குக்குறள் பண்-கொல்லி.

கலியார்கச்சிமலையேகம்பம்
பலியார்போற்றநலியாவினையே.

அடைக்காம்பு.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருமுறை 3-ல்
திருப்புறம்பயம் திருத்தாண்டகம்.

ஆகாத நஞ்சுண்டவந்திவண்ண
ரைந்தலையமாசுணங்கொண்டம்பொற்றோண்மே
லேகாசமாவிட்டொன்றேந்திவந்
திடுதிருவேபலியென்றார்க்கில்லேபுக்கேன்
பாகேதுங்கொள்ளார்பலியுங்கொள்ளார்
பாவியேன்கண்ணுள்ளே பற்றிநோக்கிப்
போகாதவேடத்தார்பூதஞ்சூழப்
புறம்பயநம்மூரென்றுபோயினாரே.

தூபம்.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருமுறை 3-ல்
திருக்கழிப்பாலை பண்-கௌசிகம்.

வெந்தகுங்கிலியப்புகைவிம்மவே
கந்தநின்றுலவுங்கழிப்பாலையார்
அந்தமும்மளவும்மறியாததோர்
சந்தமாலவர்மேவியசாந்தமே.

## தீபம்.

திருநாவுக்கரசுசுவாமிகள் திருமுறை 3-ல்

திருவையாறு-திருத்தாண்டகம்.

எல்லாவுலகமுமானாய்நீயே
 யேகம்பமேவியிருந்தாய்நீயே
நல்லாரை நன்மையறிவாய்நீயே
 ஞானச்சுடர்விளக்காய்நின்றாய்நீயே
பொல்லாவினைகளறுப்பாய்நீயே
 புகழ்ச்சேவடியென்மேல்வைத்தாய்நீயே
செல்வாயசெல்வந்தருவாய்நீயே
 திருவையாறகலாதசெம்பொற்சோதீ.

ஷை திருமுறை 3-ல் திருமறைக்காடு திருத்தாண்டகம்.

தூண்டுசுடரனையசோதிகண்டாய்
 தொல்லமரர்சூளாமணிதான்கண்டாய்
காணற்கரியகடவுள்கண்டாய்
 கருதுவார்க்காற்றவெளியான்கண்டாய்
வேண்டுவார்வேண்டுவதேயீவான்கண்டாய்
 மெய்ந்நெறிகண்டாய்விரதமெல்லா
மாண்டமனத்தார்மனத்தான்கண்டாய்
 மறைக்காட்டுறையுமணாளன்றானே.

## திருநீறுசாத்த.

ஷை திருமுறை 1-ல் திருவாரூர் பண்-சாந்தாரம்.

நீறுமெய்பூசவல்லானுநினைப்பவர்நெஞ்சத்துளானும்
ஏறுகந்தேறவல்லானுமெரிபுரைமேனியினானு
நாறுகரந்தையினானுநான்மறைக்கண்டத்தினானும்
ஆறுசடைக்கரந்தானுமாரூரமர்ந்தவம்மானே.

## *தர்ப்பணந் தெரிசிப்பிக்க.

ஷை திருமுறை 1-ல் திருவாரூர் திருவிருத்தம்.

பூம்படி மக்கலம்பொற்படி மக்கலம்மென் றிவற்று
ளாம்படி மக்கலமாகிலுமாரு ரினிதமர்ந்தார்
தாம்படிமக்கலம்வேண்டுவரேற்றமிழ்மாலைகளால்
நாம்படிமக்கலஞ்செய்துதொழுதுய்மடநெஞ்சமே.

## ஜெடம்பண்ணினபிறகு அர்க்கியங்கொடுக்க.

சுந்தரமூர்த்திசுவாமிகள் திருமுறையில்
திருப்பாண்டிக்கொடுமுடி பண்-பழம்பஞ்சுரம்.

இட்டனும்மடியேத்துவாரிகழ்ந்திட்டநாண்மறந்திட்டநாள்
கெட்டநாளிவையென்றலாற்கருதேன்கிளர்புனற்காவிரி
வட்டவாசிகைகொண்டடிதொழுதேத்துபாண்டிக்கொடுமுடி
நட்டவாவுனைநான்மறக்கினுஞ்சொல்லுநாநமச்சிவாயவே.

## குருவர்ச்சனையுள் வணக்கம்.

ஷை திருமுறையில் திருக்காளத்தி பண்-நட்டராகம்.

மறிசேர்கையினனேமதமாவுரிபோர்த்தவனே
குறியேயென்னுடையகுருவேயுன்குற்றேவல்செய்வே
னெறியேநின்றடியார்நினைக்குந்திருக்காளத்தியுள்
அறிவேயுன்னையல்லாலறிந்தேத்தமாட்டேனே.

## அருச்சனை செய்ய.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருமுறை 1-ல்
திருப்பாம்புரம் பண்-தக்கராகம்.

கொக்கிறகோடுகூவிளமத்தங்கொன்றையொடெருக்கணிசடையர்
அக்கினொடாமைபூண்டழகாகவனலதுவாடுமெம்மடிகள்
மிக்கநல்வேதவேள்வியுளெங்கும்விண்ணவர்விரைமலர்தூவப்
பக்கம்பல்பூதம்பாடிடவருவார்பாம்புரநன்னகராரே.

---

* தர்ப்பணமென்பது-கண்ணாடி.

ஷை திருமுறை 1-ல் அச்சிறுபாக்கம் பண்-குறிஞ்சி.

ஏறுமொன்றேறிநீறுமெய்பூசி
யிளங்கிளையரிவையோடொருங்குடனாகிக்
கூறுமொன்றருளிக்கொன்றையந்தாருங்
குளிரிளமதியமுங்கூவிளமலரு
நாறுமல்லிகையுமெருக்கொடுமுருக்கு
மகிழிளவன்னியுமிவைநலம்பகா
வாறுமோர் சடைமேலணிந்தவெம்மடிக
ளச்சிறுபாக்கமதாட்சிகொண்டாரே.

ஷை திருமுறை 2-ல் திருப்புள்ளிருக்கும்வேளூர் பண்-சீகாமரம்.

வாசநலஞ்செய்திமையோர் நாடோறுமலர்தூவ
வீசனெம்பெருமானா ரினிதாகவுறையுமிடம்
யோசனைபோய்ப்பூக்கொணர்ந்தங் கொருநாளுமொழியாமே
பூசனைசெய்தினிதிருந்தான் புள்ளிருக்குமவேளூரே.

## திருமந்திரம்.

அம்புயநீலங்கழுநீரணிநெய்தல்
வம்பவிழ்பூகமுமாதவிமந்தாரந்
தும்பைவகுளஞ்சுரபுன்னைமல்லிகை
செண்பகம்பாதிரிசெவ்வந்திசாத்திடே.

## எழுந்துகும்பிட.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருமுறை 1-ல்
திருவாவூர்ப்பசுபதீச்சரம் பண்-நட்டபாடை.

குற்றமறுத்தார்குணத்தினுள்ளார் கும்பிடுவார்தமக்கன்புசெய்வார்
ஒற்றைவிடையினர் நெற்றிக்கண்ணா ருறைபதியாகுஞ் செறிகொள் [மாடஞ்
சுற்றியவாசலின்மாதர்விழாச்சொற்கவிபாடநிதானநல்கப்
பற்றியகையினர்வாழுமாவூர்ப்பசுபதீச்சரம்பாடுநாவே.

### பிரதக்ஷணஞ்செய்ய.

திருநாவுக்கரசுசுவாமிகள் திருமுறை 3-ல்
திருவாரூர்—திருத்தாண்டகம்.

மதிதருவாய்நெஞ்சமேயுஞ்சுபோக
வழியாவதிதுகண்டாய்வானோர்க்கெல்லாம்
அதிபதியேயாரமுதேயாதீயென்று
மம்மானேயாரூரெம்மையாவென்றுந்
துதிசெய்துதன்றுமலர்கொண்டுதூவிச்
சூழும்வலஞ்செய்துதொண்டுபாடிக்
கதிர்மதிசேர்சென்னியனேகாலகாலா
கற்பகமேயென்றென்றேகதறுநில்லே.

### ஜெபித்துச்சாத்த.

சுந்தரமூர்த்திசுவாமிகள் திருமுறையில்
திருவாரூர் பண்-புறநீர்மை.

அந்தியுநண்பகலுமஞ்சுபதஞ்சொல்லி
முந்தியெழும்பழையவல்வினைமூடாமுன்
சிந்தைபராமரியாத்தென்றிருவாரூர்புக்
கெந்தைபிரானாரையென்றுகொலெய்துவதே.

திருநாவுக்கரசுசுவாமிகள் திருமுறை 2-ல்
திருவீழிமிழலை—திருக்குறுந்தொகை.

கருவனைகருவாய்த்தெளிவார்க்கெலாம்
ஒருவனையுயிர்ப்பாயுணர்வாய்நின்ற
திருவனைதிருவீழிமிழலையுட்
குருவனையடியேனைக்குறிக்கொளே.

### ஆனந்தத்தால் கூத்தாடல்.

ஷை திருமுறை 1-ல் கோயிற்றிருநேரிசை பண்-கொல்லி.

பார்த்திருந்தடியனேனும்பரவுவன்பாடியாடி
மூர்த்தியேயென்பனுன்னைமூவரில்முதல்வனென்பன்
ஏத்துவாரிடர்கடீர்ப்பாய்தில்லைச்சிற்றம்பலத்துக்
கூத்தாவுன்கூத்துக்காண்பான்கூடநான்வந்தவாறே.

## நமஸ்காரம்பண்ணுவதற்குமுன் செய்யுந்துதி.

சுந்தரமூர்த்திசுவாமிகள் திருமுறையில்
திருப்புன்கூர்—பண்—தக்கேசி.

இயக்கர்கின்னரர்யமனொடுவருண
ரியங்குதீவளிஞாயிறுதிங்கள்
மயக்கமில்புலிவானரநாகம்
வசுக்கள்வானவர்தானவரெல்லாம்
அயர்ப்பொன்றின்றிநின்றிருவடியதனை
யர்ச்சித்தார்பெறுமாரருள்கண்டு
திகைப்பொன்றின்றிநின்றிருவடியடைந்தேன்
செழும்பொழிற்றிருப்புன்கூருளானே.

## நமஸ்காரஞ்செய்ய.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருமுறை 1-ல்
தனித்திருநேரிசை.

அங்கத்தைமண்ணுக்காக்கியார்வத்தையுனக்கேதந்து
பங்கத்தைப்போகமாற்றிப்பாவித்தேன்பரமாநின்னைச்
சங்கொத்தமேனிச்செல்வாசாதனாணாயேனுன்னை
யெங்குற்றாயென்றபோதாலிங்குற்றேனென்கண்டாயே.

ஷை திருமுறை 2-ல் தனித்திருக்குறுந்தொகை.

ஞானத்தாற்றொழுவார்சிலஞானிகள்
ஞானத்தாற்றொழுவேனுனைநானலேன்
ஞானத்தாற்றொழுவார்கடொழக்கண்டு
ஞானத்தாயுனைநானுந்தொழுவனே.

ஷை

வாழ்த்தவாயும்நினைக்கமடநெஞ்சுந்
தாழ்க்கச்சென்னியுந்தந்ததலைவனைச்
சூழ்த்தமாமலர்தூவித்துதியாதே
வீழ்த்தவாவினையேனெடுங்காலமே.

ஷ்டி திருமுறை 2-ல் திருமருகல்-திருக்குறுந்தொகை.

பெருகலாந்தவம்பேதைமைதீரலாந்
திருகலாகியசிந்தைதிருத்தலாம்
பருகலாம்பரமாயதோரானந்தம்
மருகலானடிவாழ்த்திவணங்கவே.

நமஸ்காரஞ்செய்து எழுந்திருக்கும்போது துதிக்க.

ஷ்டி திருமுறை 2-ல் திருக்கடம்பூர் திருக்குறுந்தொகை.

பொய்தொழா துபுலியுரியோன்பணி
செய்தெழாவெழுவார்பணிசெய்தெழா
வைதெழாதெழுவாரவரெல்கனீர்
கைதொழாவெழுமின்கரக்கோயிலே.

## தோத்திரஞ்செய்ய.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருமுறை 1-ல்
திருவலிவலம்-பண்-பழந்தக்கராகம்.

தாயுநீயேதந்தைநீயேசங்கரனேயடியேன்
ஆயுநின்பாலன்புசெய்வானுதரிக்கின்றதுள்ளம்
மாயமாயகாயந்தன்னுளைவர்நின்றொன்றலொட்டார்
மாயமேயென்றஞ்சுகின்றேன்வலிவலமேயவனே.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருமுறை 3-ல்
தனித்திருத்தாண்டகம்.

அப்பனீயம்மைநீயையனுநீ
யன்புடையமாமனுமாமியுநீ
யொப்புடையமாதருமொண்பொருளுநீ
யொருகுலமுஞ்சுற்றமுமோரூருநீ
துய்ப்பனவுமுய்ப்பனவுந்தோற்றுவாய்நீ
துணையாயென்னெஞ்சந்துறப்பிப்பாய்நீ
யிப்பொன்னீயிம்மணிநீயிம்முத்துநீ
யிறைவனீயேறூர்ந்தசெல்வனீயே.

௸ திருமுறை 3-ல் திருவாவடுதுறை திருத்தாண்டகம்.

திருவேயென்செல்வமேதேனேவானோர்
செழுஞ்சுடரேசெழுஞ்சுடர்நற்சோதிமிக்க
வுருவேயென்னுறவேயென்னூனேயூனி
னுள்ளமேயுள்ளத்தினுள்ளேநின்ற
கருவேயென்கற்பகமேகண்ணேகண்ணி
கருமணியேமணியாடுபாவாய்காவாய்
யருவாயவல்வினைநோயடையாவண்ண
மாவடுதண்டுறையுறையுமமரரேறே.

௸ திருமுறை 1-ல் திருக்கடவூர் திருநேரிசை.

பழியுடையாக்கைதன்னிற்பாழுக்கேநீரிறைத்து
வழியிடைவாழமாட்டேன்மாயமுந்தெளியகில்லேன்
அழிவுடைத்தாயவாழ்க்கையைவராலலைக்கப்பட்டுக்
கழியிடைத்தோணிபோன்றேன்கடவூர்வீரட்டனாரே.

௸ திருமுறை 1-ல் திருவதிகைத் திருவீரட்டானம் திருநேரிசை.

கழித்திலேன்காமவெந்நோய்காதன்மையென்னும்பாசம்
ஒழித்திலேனூன்கணோக்கியுணர்வெனுமிமைதிறந்து
விழித்திலேன்வெளிறுதோன்றவினையெனுஞ்சரக்குகொண்டேன்
அழுத்திலேனயர்ந்துபோனேனதிகைவீரட்டனாரே.

௸ திருமுறை 1-ல் திருக்கோடிகா திருநேரிசை.

சேழல்வெண்கொம்புபூண்டகிளரொளிமார்பினானே
யேழையேனேழையேனானென்செய்கேனெந்தைபெம்மான்
மாழையொண்கண்ணினார்கள்வலைதனின்மயங்குகின்றேன்
கூழையேறுடையசெல்வாகோடிகாவுடையகோவே.

௸ திருமுறை 1-ல் திருப்பாதிரிப்புலியூர் திருவிருத்தம்.

புழுவாய்ப்பிறக்கினும்புண்ணியாவுன்னடியென்மனத்தே
வழுவாதிருக்கவரந்தரவேண்டுமிவ்வையகத்தே
தொழுவார்க்கிரங்கியிருந்தருள்செய்பாதிரிப்புலியூர்ச்
செழுநீர்ப்புனற்கங்கைசெஞ்சடைமேல்வைத்த தீவண்ணனே.

ஷை திருமுறை 1-ல் கோயில் திருவிருத்தம் பண்-கொல்லி.

படைக்கலமாகவுன்னாமத்தெழுத்தஞ்செனாவிற்கொண்டேன்
இடைக்கலமல்லேனெழுபிறப்பும்முனக்காட்செய்கின்றேன்
றுடைக்கினும்போகேன்றொழுது வணங்கித்தூநீறணிந்துன்
அடைக்கலங்கண்டாயணிதில்லைச்சிற்றம்பலத்தரனே.

ஷை திருமுறை 3-ல் திருவாரூர் போற்றித்திருத்தாண்டகம்.

சங்கரனேநின்பாதம்போற்றிபோற்றி
சதாசிவனேநின்பாதம்போற்றிபோற்றி
பொங்கரவாநின்பாதம்போற்றிபோற்றி
புண்ணியனேநின்பாதம்போற்றிபோற்றி
பங்கமலத்தயனோடுமாலுங்காணா
வனலுருவாநின்பாதம்போற்றிபோற்றி
செங்கமலத்திருப்பாதம்போற்றிபோற்றி
திருமூலத்தானனேபோற்றிபோற்றி.

சுந்தரமூர்த்திசுவாமிகள் திருமுறையில்
திருவிடைமருதூர்-பண்-தக்கேசி.

கொடுக்ககிற்றிலேனொண்பொருடன்னைக்
குற்றஞ்செற்றமிவைமுதலாக்
விடுக்ககிற்றிலேன்வேட்கையுஞ்சினமும்
வேண்டிலைம்புலனென்வசமல்ல
நடுக்கமுற்றதோர்மூப்புவந்தெய்தி
நமன்றமர்நரகத்திடலஞ்சி
யிடுக்கணுற்றனனுய்வகையருளா
யிடைமருதுறையெந்தைபிரானே.

ஷை திருமுறையில் திருமழபாடி பண் நட்டராகம்.

பொன்னார்மேனியனேபுலித்தோலையரைக்கசைத்து
மின்னார்செஞ்சடைமேல்மிளிர்கொன்றையணிந்தவனே
மன்னேமாமணியேமழபாடியுள்மாணிக்கமே
யன்னேயுன்னையல்லாலினியாரைநினைக்கேனே.

ஷை திருமுறையில் திருக்கடவூர் பண்-கட்டாராகம்.

மண்ணீர்தீவெளிகால்வருபூதங்களாகிமற்றும்
பெண்ணோடாணலியாய்ப்பிறவாவுருவானவனே
கண்ணாருண்மணியேகடவூர்தனுள்வீரட்டத்தெம்
அண்ணாவென்னமுதேயெனக்கார்துணைநீயலதே.

ஷை திருமுறையில் திருவாவடுதுறை பண்-தக்கேசி.

ஒப்பிலாமுலையாளொருபாகாவுத்தமாமத்தமார்தருசடையாய்
முப்புரங்களைத்தீவளைத்தங்கேமூவருக்கருள்செய்யவல்லானே
செப்பவாணிழற்கீழிருந்தருளுஞ்செல்வனேதிருவாவடுதுறையுள்
அப்பனேயென்னையஞ்சலென்றருளா யாரெனக்குறவமரர்களேறே.

ஷை

குறைவிலாநிறைவேகுணக்குன்றே
கூத்தனே குழைக்காதுடையானே
யுறவிலேனுனையன்றிமற்றடியே
னொருபிழைபொறுத்தாலிழிவுண்டோ
சிறைவண்டார்பொழில்சூழ்திருவாரூர்ச்
செம்பொனேதிருவாவடுதுறையுள்
அறவனேயென்னையஞ்சலென்றருளா
யாரெனக்குறவமரர்களேறே.

எட்டாந்திருமுறையாகிய திருவாசகம்.

திருச்சதகம் 97-ம் பாசுரம்.

உடையநாதனேபோற்றி நின்னலாற்
பற்றுமற்றெனக்காவதொன்றினி
யுடையனோபணிபோற்றியும்பரார்
தம்பராபராபோற்றியாரினுங்
கடையனாயினேன்போற்றியென்பெருங்
கருணையாளனேபோற்றி யென்னைநின்
னடியனாக்கினாய்போற்றியாதியு
மந்தமாயினாய்போற்றியப்பனே.

அடைக்கலப்பத்து 8-ம் பாசுரம்.

மாவடுவகிரன்னகண்ணிபங்காநின்மலரடிக்கே
கூவிடுவாய்கும்பிக்கேயிடுவாய்நின்குறிப்பறியேன்
பாவிடையாடுகுழல்போற்கரந்துபரந்ததுள்ளம்
ஆகெடுவேனுடையாயடியேனுன்னடைக்கலமே.

குழைத்தபத்து 7-ம் பாசுரம்.

அன்றேயென்றனுவியுமுடலுமுடைமையெல்லாமுங்
குன்றேயனையாயென்னையாட்கொண்டபோதேகொண்டிலையோ
வின்றோரிடையூறெனக்குண்டோவெண்டோண்முக்கணெம்மானே
நன்றேசெய்வாய்பிழைசெய்வாய்நானோவிதற்குநாயகமே.

## ஒன்பதாந்திருமுறையாகிய கருவூர்த்தேவர் திருவிசைப்பா.

திருச்சாட்டியக்குடி பண்-பஞ்சமம்.

செங்கணாபோற்றிதிசைமுகாபோற்றி
சிவபுரநகருள்வீற்றிருந்த
அங்கணாபோற்றி யமரனேபோற்றி
யமரர்கடலைவனேபோற்றி
தங்களூன்மறைநூல்சகலமுங்கற்றோர்
சாட்டியக்குடியிருந்தருளும்
எங்கணாயகனேபோற்றியேழிருக்கை
யிறைவனேபோற்றியேபோற்றி.

## சேந்தனார் திருப்பல்லாண்டு.

பாலுக்குப்பாலகன்வேண்டியழுதிடப்பாற்கடலீந்தபிரான்
மாலுக்குச்சக்கரமன்றருள்செய்தவன்மன்னியதில்லைதன்னுள்
ஆலிக்குமந்தணர்வாழ்கின்றசிற்றம்பலமேயிடமாகப்
பாலித்துநட்டம்பயிலவல்லானுக்கேபல்லாண்டுகூறுதுமே.

## பத்தாந்திருமுறையாகிய திருமந்திரம்.

போற்றுகின்றேன்புகழ்ந்தும்புகழ்ஞானத்தைத்
தேற்றுகின்றேன்சிந்தைநாயகன்சேவடி
சாற்றுகின்றேனறையோசிவயோகத்தைப்
போற்றுகின்றேனெம்பிரானென்றுநானே.

## பதினோராந் திருமுறையில்
## காரைக்காலம்மையார் அற்புதத்திருவந்தாதி.

81-ம் பாசுரம்.

காலனையும்வென்றோங்கடுநரகங்கைகழன்றோம
மேலையிருவினையும்வேரறுத்தோங்—கோல
அரணாரவிந்தழியவெந்தீயம்பெய்தான்
சரணாரவிந்தங்கள்சார்ந்து.

## ௰௧ திருமுறையில் ஐயடிகள்காடவர்கோனாயனார்
## அருளிச்செய்த க்ஷேத்திரவெண்பா.

௨0-ம் பாசுரம்.

என்னெஞ்சேயுன்னை யிரந்துமுரைக்கின்றேன்
கன்னெஞ்சேசெய்வாயாபிறகாலத்தால—வன்னெஞ்சே
மாகம்பத்தானையுரித்தானைவண்கச்சி
யேகம்பத்தானையிறைஞ்சு.

## ௰௧ திருமுறையில் சேரமான் பெருமானாயனார்
## அருளிச்செய்த பொன்வண்ணத்தந்தாதி.

91-ம் பாசுரம்.

கொற்றவனேயென்றுங்கோவணத்தாயென்றுமாவனத்தால்
கற்றவனேயென்றுநஞ்சுண்டியேயென்றுமஞ்சமக்கா
பெற்றவனேயென்றும்பிஞ்ஞகனேயென்றுமதனைச்
செற்றவனேயென்றுநாளும்பரவுமென்சிந்தனையே.

## பட்டணத்துப்பிள்ளையாரருளிச்செய்த
## திருவெண்காட்டுத்திருவிசைப்பா.

பூதமுங்கரணம்பொறிகளும்புலனும்பொருந்தியகுணங்களோர்
நாதமுங்கடந்தவெளியிலேநீயுநானுமாய்நிற்குநாளென்றோ [மூன்றும்
வாதமுஞ்சமயபேதமுங்கடந்தமனோலயமின்பசாகரனை
ஏதுமொன்றறியேன் யாதுநின்செயலேயிறைவனே வெண்காட்டுறை...

யாவரோயிருந்தும்யாவரேவாழ்ந்தும்யாவரேயெமக்குறவாயும்
தேவரீரல்லாற்றிசைமுகமெனக்குத்திருவுளமறியவேயுளதோ
பாவலாரொருவன்செந்தமிழ்க்கிரங்கிப்பரவையாரூடலைமாற்ற
ஏவலாளாகியிரவெலாமுழன்றவிமை[illegible]னையேகநாயகனே

உண்டதேயுண்டுமுடித்ததேயுடுத்துமடுத்தடுத்துரைத்ததேயுரைத்து
கண்டதேகண்டுங்கேட்டதேகேட்டுங்கழிந்தனகடவுளாவெல்லாம்பழம
யீண்டதாமரைமேலன்னம்வீற்றிருக்குமவிழ்வயல்வீழிவெண்காடா
அண்டமேர்போற்றவம்பலத்தாடுமையனேயுய்யுமாறருளே.

## கோயிற்புராணம் பாயிரம்.

3-ம் பாசுரம்.

கற்பமாய்ப்பாதபமாய்க்காவிலனுபூதியதாய்
அற்புதமாமாமுதலாயானந்தநிலையவொளிப்
பொற்பினதாய்ப்பிறிவிலதாய்ப்பொருளாகியருளாகுஞ்
சிற்பரமாமம்பரமாந்திருச்சிற்றம்பலம்போற்றி.

## ஓமத்துக்குப்பின் உபயகாலபூசைபோகாங்க மூர்த்தி முதலியோர்க்குப் பராமுகங்கொடுத்துக்கூட்டி ஜெபஞ்சாத்தினபின் துதி.

திருநாவுக்கரசுசுவாமிகள் திருமுறை ௨-ல்
திருக்கடம்பந்துறை திருக்குறுந்தொகை.

பூமென்கோதையுமையொருபாகனை
யோமஞ்செய்துமுணர்மின்களுள்ளத்தாற்
காமற்காய்ந்தபிரான்கடம்பந்துறை
நாமமேத்தநந்தீவினைநாசமே.

## மூர்த்தியை எழுந்தருளப்பண்ண.

ஷை திருமுறை 1-ல் திருவகம்பம் பண்—காந்தாரம்.

கைப்போதுமலர்தூவிக்காதலித்துவானோர்கள்
முப்போதுமுடிசாய்த்துத்தொழநின்றமுதல்வனை
யப்போதுமலர்தூவியைம்புலனுமகத்தடக்கி
யெப்போதுமினியானையென்மனத்தேவைத்தேனே.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருமுறை 2-ல்

திருக்குடவாயில்-பண்-காந்தாரம்

அடியார்ந்தபைங்கழலுஞ்சிலம்பார்ப்பவங்கையிற்
செடியார்ந்தவெண்டலையொன்றேந்தியுலகம்பலிதேர்வீர்
குடியார்ந்தமாமறையோருலாயமேயதுங்குடவாயிற்
படியார்ந்தகோயில்மேலமேசாயிலாகப்பயின்றமே.

## சண்டேசுரபூசை.

திருநாவுக்கரசுசுவாமிகள் திருமுறை 1-ல்

திருக்குறுக்கை-திருநேரிசை.

தழைத்ததோராத்தியின்கீழ்த்தாபரமணலாற்கூப்பி
யழைத்தங்கேயாவின்பாலைக்கறந்துகொண்டாட்டக்கண்டு
பிழைத்ததன்றாதைதாளைப்பெருங்கொடுமழுவால்வீசக்
குழைத்ததோரமுதமீந்தார்குறுக்கைவீரட்டனாரே.

## கோயில்சாத்த.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் திருமுறை 2-ல்

திருமறைக்காடு-பண்-இந்தளம்.

சதுரம்மறைதான்றுதிசெய்துவணங்கும
மதுரம்பொழில்சூழ்மறைக்காட்டுறைமைந்தா
விதுநன்கிறைவைத்தருள்செய்கவெனக்குன்
கதவந்திருக்காப்புக்கொள்ளுங்கருத்தாலே.

திருச்சிற்றம்பலம்.

## சிவபூசைத்திரட்டு முற்றிற்று.



## பஞ்ச வில்வம்.

மெச்சியே யடியவர் வியந்து சாத்திடு
நொச்சியே நறுவிளா நுவன்ற கூவிளம்
வைச்சிடுங் கிளுவையே மாவி லிங்கையின்
பச்சிலை யென்றிவை பஞ்சவில்வமே.

சிவமயம்.

# பின்பு சாந்தி நிமித்தம்.



## அகோரமந்திரம் ஜெபித்து இயன்ற ஸ்தோத்திரம் பண்ணுக.

### பட்டணத்துப்பிள்ளையார் பாடல்.

கையொன்றுசெய்ய விழியொன்றுநாடக் கருத்தொன்றெண்ணப்
பொய்யொன்று வஞ்சகநாவொன்று பேசப்புலால்கமழு
மெய்யொன்று சாரச்செவியொன்று கேட்கவிரும்புமியான்
செய்கின்றபூசை யெவ்வாறுகொள்வாய் வினைதீர்த்தவனே. (1)

கல்லாப்பிழையுங் கருதாப்பிழையுங் கசிந்துருகி
நில்லாப்பிழையு நினையாப்பிழையு நின்னஞ்செழுத்தைச்
சொல்லாப்பிழையுந் துதியாப்பிழையுந் தொழாப்பிழையு
மெல்லாப்பிழையும் பொறுத்தருள்வாய் கச்சியேகம்பனே. (2)

சொல்லால்வருங்குற்றம் சிந்தனையால்வருந் தோடஞ்செய்த
பொல்லாதவினை பார்வையிற்பாவங்கள் புண்ணியநூல்
அல்லாதகேள்வியைக் கேட்டிடுந் தீங்குகளாயவுமற்
றெல்லாப்பிழையும் பொறுத்தருள்வாய் கச்சியேகம்பனே. (3)

கொல்லாமற்கொன்றதைத் தின்னாமற்குத்திரங்கோள்களவு
கல்லாமற் கைதவரோடிணங்காமற் கனவினும்பொய்
சொல்லாமற் சொற்களைக்கேளாமற் றோகையர்மாயையிலே
செல்லாமற் செல்வந்தருவாய் சிதம்பரதேசிகனே. (4)

நீறார்ந்தமேனியு ரோமஞ்சிலிர்த்துள நெக்குநெக்குச்
சேறாய்க்கசிந்து கசிந்தேயுருகி நின்சீரடிக்கே
மாறாத்தியானமுற் றானந்தமேற்கொண்டு மார்பிற்கண்ணீர்
ஆறாய்ப்பெருகக் கிடப்பதென்றோ கயிலாயத்தனே. (5)

நல்லாயெனக்கு மனுவொன்றுதந்தருண் ஞானமிலாப்
பொல்வினைக் கொன்றுபோடும்பொழுதியல் பூசைசெயஞ்
சொல்லார் நற்கோயினியமம் பலவகைத்தோத்திரமு
மெல்லாமுடிந்தபின் கொல்லுகண்டாய் கச்சியேகம்பனே. (6)

ஐயுந்தொடர்ந்து விழியுஞ்செருகி யறிவழிந்து
மெய்யும்பொய்யாகி விடுகின்றபோதொன்று வேண்டுவன்யான்
செய்யுந்திருவொற்றியூ ருடையீர் திருநீறுமிட்டுக்
கையுந்தொழப்பண்ணி யைந்தெழுத்தோதவுங் கற்பியுமே. (7)

நன்னாரிற்பூட்டிய சூத்திரப்பாவை நன்னார்தப்பினாற்
றன்னாலுமாடிச் சலித்திடுமோ வந்தத்தன்மையைப்போ
லுன்னாலியானுந் திரிவதல்லான் மற்றுனைப்பிரிந்தா
லென்னாலிங்காவதுண்டோ விறைவா கச்சியேகம்பனே. (8)

அஞ்சருளைப்போற்றி யைந்துபுலனைத் துறக்க
நெஞ்சேயுனக்கு நினைவுநான் சொல்லுகிறேன்
வஞ்சகத்தைநீக்கி மறுநினைவு வாராமல்
செஞ்சரணத்தானைச் சிந்தைசெய்வாய் நெஞ்சமே. (9)

திருச்சிற்றம்பலம்.

முற்றும்.

---

# புட்ப விதி.

## தாழம்பூ.

திருமுடி கண்டேனென்று திசைமுகன் பொய்யுரைப்ப
விருமடிகரியாநிற்ப விருவர்க்குஞ் சாபமெய்த
வருமடியவர்கள் கைதை மலர்சிவன்முடியிற்சாத்தார்
பெருமிடிவரினும்பொய்சொற் பிதற்றிடார் பெரியோராவார்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

# திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார்

## சரித்திரம்.

---

சந்தானாசாரியராகிய

**உமாபதி சிவாசாரியார்**

திருவாய்மலர்ந்தருளிய

**புராணசாரம்.**

காழிநகர்ச் சிவபாத விதயர் தந்த
　கவுணியர்கோனமுதுமையாள் கருதியூட்டு
மேழிசையி னமுதுண்டு தாளம் வாங்கி
　யிலங்கியநித் திலச்சிவிகை யிசையவேறி
வாழுமுப லகனகற்றிப் பந்த ரேய்ந்து
　வளர்கிழிபெற் றரவின்விட மருகற்றீர்த்து
வீழிநகர்க் காசெய்தி மறைக்கதவம் பிணித்து
　மீனவன்மே னியின்வெப்பு விடுவித் தாரே.

ஆரெரியிட் டெறித்தவே டவைமுன் னேற்றி
　யாற்றிலிடு மேடெதிர்போ யணையவேற்றி
யோரமண ரொழியாமே கழுவிலேற்றி
　யோதுதிருப் பதிகத்தா லோடமேற்றிக்
காருதவு மிடிபுத்தன் றலையி லேற்றிக்
　காயாத பனையின்முது கனிக ளேற்றி
யீரமிலா வங்கமுயி ரெய்த வேற்றி
　யிலங்குபெரு மணத்தானை யெய்தினாரே.










திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.



# திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

## திருப்பாசுரம்.

### பண்-கௌசிகம் (3-ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

1. வாழ்கவந்தணர் வானவரானினம்
வீழ்கதண்புனல்வேந்தனுமோங்குக
வாழ்கதீயதெல்லாமரனாமமே
சூழ்கவையகமுந்துயர்தீர்கவே.

2. அரியகாட்சியராய்த்தமதங்கைசே
ரெரியரேறுகந்தேறுவர்கண்டமுங்
கரியர்காடுறைவாழ்க்கையராயினும்
பெரியராரறிவாரவர்பெற்றியே.

3. வெந்தசாம்பல் விரையெனப்பூசியே
தந்தையாரொடு தாயிலர்தம்மையே
சிந்தியாவெழுவார்வினைதீர்ப்பரா
லெந்தையாரவரெவ்வகையார்கொலோ.

4. ஆட்பாலவர்க்கருளும் வண்ணமுமாதிமாண்புங்
கேட்பான்புகிலளவில்லை கிளக்கவேண்டா
கோட்பாலனவும் வினையுங்குறுகாமையெந்தை
தாட்பால்வணங்கித்தலைநின்றிவைகேட்கதக்கார்.

5. ஏதுக்களாலுமெடுத்தமொழியாலுமிக்குச்
சோதிக்கவேண்டா சுடர்விட்டுளனெங்கள் சோதி
மாதுக்கநீங்கலுறுவீர்மனம்பற்றிவாழ்மின்
சாதுக்கண்மிக்கீரிறையேவந்துசார்மின்களே.

6. ஆடும்மெனவுமருங்கூற்றமுதைத்துவேதம்
பாடும்மெனவும்புகழல்லதுபாவநீங்கக்
கேடும்பிறப்புமறுக்குமெனக்கேட்டீராகி
னாடுந்திறத்தார்க்கருளல்லதுநாட்டலாமே.

திருச்சிற்றம்பலம்.

## சரித்திரம்.

சோழவளநாட்டில் சிறப்புற்றோங்கும் சீர்காழியில் பிராமண வம்சத்தில் கவுணிய கோத்திரத்தில் பிறந்த சிவபாத விருதயரும் அவர் மனைவியாராகிய பகவதியாரும் செய்த அரியதவப்பேற்றால் பகவதியாருமைத் திருவயிற்றில் தோணியப்பர் திருவருளால் திருவாதிரை நட்சத்திரத்தில் ஆளுடையபிள்ளையா ரவதரித்தனர். இவர் மூன்றுவயதில் தம் பிதாவாகிய சிவபாதவிருதயர் நீராடச் சென்றபோ துடன்சென்றனர். தந்தையார் ஆளுடைய பிள்ளையாரைப் பொய்கைக்கரையி லுட்காரவைத்துத் தாம் தீர்த்தத்துள் முழுகி அகமருஷணமந்திரஞ் செபித்தெழுமுன் பிள்ளையார் தம் பரமபிதாவாகிய சிவபெருமானைவிட்டு நீங்கி நெடுநாளாயிற்றென்று கருதித் தோணியப்பர் வீற்றிருக்குமாலயத்தைநோக்கிக் கண்களில் நீர் பெருகும்படி அழாநிற்க, அது கண்டு தோணியப்பர் திருவுளமிரங்கித் தரும வுருவாகிய இடபவாகனத்தின்மேல் பார்வதிசமேதராய் எழுந்தருளித் திருமுலைப்பால் தருகவெனப் பார்வதியாருக்குக் கட்டளையிட்டருளினர். பார்வதியாரும் அவ்வாறே திருமுலைப்பாலோடு ஞானாமிர்தமுங் கலந்துகொடுக்க உண்டு அழுகை நீங்கியிருக்கையில், தந்தையார் ஸ்நானஞ் செய்து வந்து பார்த்து, உனக்கு பால்கொடுத்தவர் யார்? என்று பயமுறுத்தும்போது, இவர் கொடுத்தாரென்று விரலாற் சுட்டி, "தோடுடையசெவியன்" என்னுந் திருப்பதிகம் பாடிப் பரமாப்தராகிய சிவபெருமானைக் காட்டக்கண்டு அவர் ஆனந்தபரவசராயினர்.

அன்றுதொட்டு ஆளுடை பிள்ளையார் திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் என்னுந் திருநாமம்பெற்று சிவாலயத்தில் சென்று பரமகாருண்ணியராகிய சிவபெருமானைத் தரிசித்துத் தம் பிதாவாகிய சிவபாத விருதயர் தோளிற் றாங்கிவரத் திருமாளிகைக் கெழுந்தருளினர். பின்பொருநாள் திருக்கோலக்காவென்னுந் தலத்துக்குப் போய்த் திருக்கரங்களை யொத்தித் திருப்பதிகம் பாடுகையில், எம்பெருமான் கிருபைகூர்ந்து பொற்றாளங் கொடுத்தருளப்பெற்று

முன்போலத் திருமாளிகைக் கெழுந்தருளிக் காலந்தோறும் தோணியப்பர் திருமுன்னர்ச்சென்று, திருப்பதிகம் பாடித் தோத்திரஞ் செய்து வாழுநாளில், தம்முடைய தாயாகிய பகவதியார் சனன க்ஷேத்திரமாகிய திருநனி பள்ளியில் வாழும் பிராமணர்கள் வந்து தம்மூர்க் கெழுந்தருள வேண்டுமென்று பிரார்த்திக்கத் தோணியப்பர் சந்நிதியில் விடை பெற்றுக்கொண்டு அத்தலத்திற்கேயன்றி மற்றைத் தலங்களுக்குஞ்சென்று சுவாமி தரிசனம் பண்ணிக் கொண்டு மீண்டும் திருநனிபள்ளியில் எழுந்தருளியிருந்தனர். அப்பொழுது திருத்தலைச்சங் காட்டிலுள்ள பிராமணர்வந்து வணங்கித் தம்முடைய தலத்திற் கெழுந்தருள வேண்டுமென்ன, அங்குச்சென்று சிவதரிசனஞ்செய்து திருப்பதிகம் பாடியருளி, அங்கிருந்து புறப்பட்டுத் திருவலம்புரமுதலிய சிவஸ்தலங்களை வணங்கிக்கொண்டு பின்பு சீர்காழிக்குச் சென்றனர். அங்கிருந்து புறப்பட்டுத் திருமயேந்திரப்பள்ளி முதலிய ஸ்தலங்களிற் சென்று சுவாமிதரிசனஞ்செய்து திருப்பதிகம்பாடி துதித்து, மீளவுஞ் சீர்காழிக்கெழுந்தருளித் தோணியப்பரைத் தரிசனஞ்செய்து வாழும்போது திருநீலகண்டப்பெரும்பாணர் பத்தினியாருடன் வந்தது கேட்டுச் சென்று அழைத்துவந்து தோணியப்பர் ஆலயத்துக் கோபுரவாயிலுக்குச் சமீபத்தில் நிறுத்தித் தரிசனஞ் செய்வித்து, அவர்க்கோர் இடங்கொடுத்து விருந்திட்டுபசரித்தனர். திருநீலகண்டப்பெரும்பாணர் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரை நோக்கித் தேவரீர் திருவாய்மலர்ந்தருளிய திருப்பதிகங்களை அடியேன் யாழிலிசைத்து வாசிக்கக் கட்டளையிட்டருளவேண்டும்என்று விண்ணப்பஞ்செய்தனர். பிள்ளையார் திருவுளமகிழ்ச்சியோடுடன்பட்ட அந்நாள்முதல் திருநீலகண்டப் பெரும்பாணர் அவ்வாறே திருப்பதிகங்களை யாழிலிசைத்துப் பாடித் தம்மைவிட்டுப் பிரியாதிருந்தனர். ஆளுடைய பிள்ளையார் நடேசரைத் தரிசிக்கவேண்டுமென்னும் அன்பு மேன்மேலும் பெருகச் சிதம்பரத்துக் கெழுந்தருளி எழுநிலைக் கோபுரத்தைக் கண்ட அளவில் பூமியில் விழுந்து பலமுறை பணிந்தெழுந்து சந்நிதியிற்சென்று பிரதட்சிணஞ் செய்து பொன்னம்பலத்தின்கண் ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளும் சபாநாதரைத் தரிசித்துத் திருப்பதிகம்பாடித் துதித்துக் கண்ட

ளில் ஆனந்த பாஷ்பம் பெருகப் பரவசமடைந்து சற்றுத்தெளிந்து விடைபெற்றுச் சந்நிதியைவிட்டு அரிதிற்புறம்போந்து, அங்கிருந்தற்கஞ்சித் திருவேட்களத்துக் கெழுந்தருளிச் சிவதரிசனஞ்செய்து திருப்பதிக மோதித்துதித்து அத்தலத்திலேயே வீற்றிருந்து நடேசரைத் தரிசனஞ்செய்துகொண்டிருந்தனர்.

அங்கு வாழுநாளில் ஓர்நாள் தில்லைவாழந்தணர் நடேசரை அருச்சிக்கத் தக்க பேறுபெற்றோர்களேயென்னுங் கருத்தோடு சிதம்பரத்துக் கெழுந்தருளின போழ்து அவ்வந்தணர்கள் சிவகணங்களாக இருக்கக்கண்டு வணங்கி அவ்வற்புதத்தைத் திருநீலகண்டப் பெரும்பாணருக்குக் காட்டியருளிச் சிற்சபையிற்சென்று சபாநாதரைத் தரிசித்துத் திருப்பதிகம்பாடித் துதித்து விடைபெற்றுக்கொண்டு புறம்போந்து பாணர் வேண்டுகோளால் திருவெருக்கத்தம்புலியூர் முதலிய சிவஸ்தலங்கட்குச்சென்று சிவதரிசனஞ் செய்துகொண்டு ஆங்காங்குத் திருப்பதிகமோதித் துதித்துப் பின்னர் விருத்தாசலத்திற் கெழுந்தருளிச் சுவாமிதரிசனஞ் செய்து திருப்பதிகம்பாடி அங்குச் சிலநாள் வீற்றிருந்தனர். அங்கிருந்து புறப்பட்டுத் திருப்பெண்ணாகடமென்னுந் தலத்திலே தூங்கானைமாடம் என்னும் ஆலயத்துட்சென்று சிவபெருமானை வணங்கித் திருப்பதிகம்பாடித் துதித்து அங்கிருந்து புறப்பட்டுத் திருவடிவருந்த மெல்லமெல்லச் சென்று, திருமாறன் பாடியென்னுஞ் சிவஸ்தலத்திற் சேரப் பொழுதுபட்டதனால் அங்குத் திருக்கூட்டத்துடன் வீற்றிருக்கையில் திருவரத்துறையில் எழுந்தருளிய சிவபெருமான் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் சீரடிவருந்த நடந்துவந்த வருத்தம்பொறாது முத்துச்சிவிகை, முத்துக்குடை, முத்துச்சின்ன முதலியவற்றைக் கொடுத்தருள வேண்டுமென்று திருவுளங்கொண்டு அப்பதியின் கண்ணுள்ள அந்தணர்முதலிய சிவனடியார்களுக்குச் சொப்பனத்தி லெழுந்தருளிக் கட்டளையிட்டருளினர். அவர்களனைவரும் ஒருங்குகூடி ஆலயத்துட்சென்று பார்த்தபொழுது சிவபிரான் அருளியபடி இருக்கக்கண்டு மகிழ்ந்து அவற்றை எடுப்பித்துத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருமுன்பு கொண்டுபோய்வைத்துச் சுவாமி திருவாய்மலர்ந்தருளி

யதையும் விண்ணப்பஞ்செய்யக்கேட்டு அச்சிவபிரான் கட்டளையை மறுக்க அஞ்சித்தொழுது முத்துச்சிவிகையி லெழுந்தருளித் திருவாத்துறைக்குச் சமீபத்திற்சென்று சிவிகையைவிட்டிறங்கிச் சந்நிதியிற்போய் சுவாமியையவணங்கித் திருப்பதிகமோதித் துதித்துச் சிலநா ளங்கிருந்தனர். மீண்டும் சீர்காழிக்கெழுந்தருளும்போது திருப்பழுவூர்முதலிய சிவஸ்தலங்களை வணங்கித் திருப்பதிகம் பாடியருளிச் சீர்காழியிற்சென்று தோணியப்பரைத் தரிசித்து வணங்கித் திருப்பதிகமோதிக்கொண்டிருந்தனர் அங்குப் பிதாவானவர் தமக்குபநயனஞ் செய்விக்கப்பெற்று வேதாகம முதலிய வைகளனைத்தும் ஓதாதுணர்ந்து பஞ்சாட்சரப்பதிகந் திருவாய் மலர்ந்தருளி வாழுநாளில் திருநாவுக்கரசுநாயனார் எழுந்தருளுவது கேட்டு எதிர்கொண்டு சென்றபோது அவர் பூமியில் விழுந்து வணங்க "அப்பரே எழுந்திரும்" என்று தமதிரண்டு திருக்கரங்களாலும் எடுத்துபசாரத்தோடு அழைத்துக்கொண்டு சந்நிதியிற் சென்று தோணியப்பரை இருவரும் தொழுது துதித்து அங்கெழுந்தருளியிருந்தனர்.

திருநாவுக் கரசுநாயனார் தம்மோடு சிலநாளிருந்து நீங்கிய பின்னர்த் திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் காலந்தோறும் தவறுது தோணியப்பரைத் தரிசனஞ்செய்து திருமொழி மாற்றுமுதலிய சித்திரக்கவிப் பதிகங்கள் ஓதித் துதித்து வாழுநாளில், இன்னுமுள்ள மற்றைச் சிவஸ்தலங்கட்குச் சென்று சிவபெருமானைத் தரிசிக்கவேண்டுமென்று திருவுளங்கொண்டு தந்தையார்க்கறிவித்தனர் தந்தையாராகிய சிவபாதவிருதயர் பிள்ளையாரை நோக்கி வேள்விசெய்யப் பொருள் வேண்டும், ஆகையால், நானுங்கூடவருகிறே னென்னச் சம்மதித்துப் புறப்பட்டுத் திருக்கண்ணார்கோயில் முதலிய பற்பல சிவஸ்தலங்கட்குச் சென்று சிவதரிசனஞ் செய்து திருப்பதிகமோதித் துதித்துத் திருப்பாச்சிலாச்சிராமத்துக்கெழுந்தருளும் போழ்து அங்குக் கொல்லிமழவனென்னு மோரரசன் தன்புதல்விக்குற்ற முயலகநோய் எவ்வகையினுந் தீராமையால் மனவருத்தமுற்று அவன் சைவசமயப்பற்றுள்ள சந்ததியானுகையால் அக்கன்னிகையைச் சிவ சந்நிதானத்திற் கொண்டுவந்து

கிடத்திவைத்தங்கிருந்தபோது தன்னூட்டுக்குள் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் எழுந்தருளுவதைத் திருச்சின்ன வோசையாலுணர்ந்து நகரத்தை யலங்கரிக்க வுத்தரவுசெய்து தான் எதிர்கொண்டு சென்று வணங்கினன், ஆளுடைய பிள்ளையார் அவனை அழைத்துக்கொண்டு அவன் நகருக்குளெழுந்தருளிக் கோபுரவாயிலின் புறத்து முத்துச்சிவிகையை விட்டிழிந்துபணிந்து ஆலயத்துட் சென்று பிரதக்ஷணஞ்செய்து சந்நிதானத்துட் செல்லுகையில் அக்கன்னிகை பிரேதம்போற் கிடத்தலைநோக்கி, இதுஏது, என்றுவினவ, அவ்வரசன் ஆளுடைய பிள்ளையாரைத் தொழுது 'அடியேனுடைய புத்திரி, இவளுக்குண்டாய முயலக நோய் தீராமையால் சிவபெருமான் திருவுளமெப்படியோ', அப்படியாகட்டுமென்று இங்குக் கிடத்தினேன் என்றான், அங்ஙனங் கூறியது கேட்டுத் திருவுளமகிழ்ந்து கிருபைகூர்ந்து "துணிவளர் திங்கள் துலங்கி விளங்க" என்னும் திருப்பதிகமோதித் துதித்தவளவில் அக்கன்னிகை அந்நோய் நீங்கி எழுந்து தன்பிதாவினருகிற்சென்று நின்றனள். அவ்வரசன்கண்டு பரமானந்தமடைந்து தன் புதல்வியோடு தானும் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் திருவடிகளை வணங்கி நிற்கக் கண்டு திருவருள் புரிந்து பின்னர்ச் சந்நிதியிற் சென்று பணிந்து பதிகமோதித் துதித்துச் சிலநாளங்கிருந்து விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டுத் திருப்பைஞ்ஞீலி, திருவீங்கோய்மலை, திருக்கொடிமாடச் செங்குன்றூர், திருநணா முதலாகிய சில சிவஸ்தலங்கட்குச் சென்று சிவதரிசனம் பண்ணித் திருப்பதிகமோதித் துதித்து மீண்டும் திருக்கொடிமாடச் செங்குன்றூர்க்கெழுந்தருளியிருந்தனர். அங்குக் குளிர்காலமாக, அக்காலத் தங்கிருப்போர்க்கு ஆண்டுதோறும் உண்டாகும் நளிர்சுரந் தமது திருக்கூட்டத்தார்க்கும் எய்தியது நோக்கி "அவ்வினைக்கிவ்வினை" என்னும் திருநீலகண்டப்பதிகம் பாடியமாத்திரத்தில் அச்சுரநோய் தம் திருக்கூட்டத்தாரை விட்டோடியதன்றி அந்நாட்டிலுள்ளாரையும் விட்டொழிந்தது, சிலநாளங்கிருந்து பின்பு புறப்பட்டுத்திருப்பாண்டிக்கொடுமுடி, திருக்கருகாவூர் முதலிய தலங்கள் பலவற்றினுஞ்சென்று சுவாமிதரிசனம்பண்ணிப் பதிகமோதித் துதித்து

விடை பெற்றுக்கொண்டு திருவலஞ்சுழிக் கெழுந்தருளிச் சிவதரிசனஞ்செய்து பதிகமோதித் துதித்து அங்கு வீற்றிருக்குநாளில் முதிர்வேனிற்காலம் வந்தது, அங்ஙனமாகத் திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் திருச்சத்தி முற்றத் தெழுந்தருளிய சிவபெருமானைத் தரிசிக்கவேண்டுமென்னும் அன்புமிகுதியால் அங்குச்சென்று கைலாசப்பதியை தொழுது பதிகமோதித் துதித்து விடை பெற்றுக்கொண்டு திருப்பட்டீச்சரத்துக்கெழுந்தருளினார், அத்தலத்திலெழுந்தருளிய சிவபிரான் ஆஞ்ஞையினால் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்க்குத் தோன்றாதபடி பூதகணங்கள் முத்துப்பந்தர் கொண்டெய்தி இருதுவெயில் வெப்பம் தணிப்பதற்குச் சிவபெருமானால் கொடுக்கப்பட்டதென்று சொல்லுமொலியும் பந்தரும் ஆகாயத்தில் தோன்றக்கண்டு இதுவும் நம் கடவுள் ஆஞ்ஞையாமின் ஏற்றுக்கொள்ளத்தக்கதே யென்றிசைந்து மகிழ்ந்து சிவிகையைவிட்டிழிந்து பணிந்த அளவில் அம்முத்துப்பந்தலின் கால்களைப் பரிசனந் தாங்கிவர திருப்பட்டீச்சரத்துக் கெழுந்தருளி ஆலயத்திற் சென்று சிவபெருமானைத் தரிசித்துப் பதிகமோதித் துதித்து அங்குச்சிலநாள்வைகினர். பின்பு திருவாறை வடதளி முதலாகுள்ள பற்பல சிவஸ்தலங்கட்குச் சென்று சிவபெருமானைத் தொழுது பதிகமோதித் துதித்துத் திருவாவடுதுறைக்கெழுந்தருளிச் சிவதரிசனஞ்செய்து பதிகமோதித்துதித்து அங்குவீற்றிருந்தனர்.

அப்பொழுது சிவபாதவிருதயர் பிள்ளையாரை நோக்கி 'வேள்வி செய்வதற்கு ஆகுநாள் சமீபித்தது' ஆகலால் அதற்குப் பொருள் வேண்டும் என்று கூற திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் ஆலயத்துட் சென்று சிவபெருமானைத் திருப்பதிகமோதித் துதித்தவளவில் சிவாக்கினையால் ஆயிரம்பொன் னடங்கிய வொரு கிழியையோர் பூதங்கொடுபோந்து பலிபீடத்தின்கண் வைத்துத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்க்கெதிரில் நின்று "இப்பொற்கிழி எடுக்குந்தோறும் குறைவுபடாது, இதைச் சிவபெருமானார் தேவரீருக்குக் கொடுக்கும்படி கட்டளையிட்டதனால் கொண்டுவந்துவைத்தேன்" என்று சொல்ல பிள்ளையார் அதைப் பலமுறை பணிந்தெ

டுத்துச் சிரமேற்றாங்கிப் பிதாவின் கையிற் கொடுத்து "நீர் செய்யும் வேள்விக்கேயன்றிச் சீர்காழியிலுள்ள அந்தணர்செய்யும் வேள்விகளனைத்திற்கு முதவும்" என்று கொடுத்துப் போக்கித் தாம் அங்குச் சில்நாளிருந்து புரப்பட்டுத் திருக்கோழம்பம் முதலிய சிவஸ்தலங்கட்குச் சென்று சிவதரிசனஞ்செய்து தருமபுரத்துக் கெழுந்தருளினர். அப்போது திருநீலகண்டப் பெரும்பாணர் தம்முறவினர் எதிர்கொண்டு வந்து வணங்க அவர்களை நோக்கி. 'பிள்ளையார் திருவாய் மலர்ந்தருளுந் திருப்பதிகங்களை யாழிலமைத்து வாசிக்கும் அறிபம்பேறுபெற்றேன்' என்று கூறக்கேட்டு, 'நீர்யாழொடு பொருத்தி வாசிப்பதனு லப்பதிகங்களுலகமெங்கும் விளக்கமுற்றிருக்கின்றன' என்றுரைக்கப் பாணர்ச்சமுற்று உடனே சுவாமிகள் சந்நிதானத்தில் விண்ணப்பஞ்செய்து யாழிற் பொருந்தாவண்ண மோர்திருப்பதிகங் கட்டளையிட்டருளவேண்டுமென, அவ்வாறே ஆளுடையபிள்ளையார் "மாதர்மடப்பிடி" என்னுந் திருப்பதிகம் பாடியருளினர். அதைப் பாணர் யாழிலமைத்துப் பாட இசையாமையால் மனநொந்கி இந்தயாழினாலன்றோ சுவாமிகளருளிச்செய்த திருப்பதிகத்தினிசையை யாழிற் பொருத்திப்பாடுவேன் என்று சொல்ல நாவிலசைந்ததென்று அதைச் சிதைக்க வோங்கியபோது பிள்ளையார் தடுத்தருளி, பெரும்பாணரே நீர் திருப்பதிக விசையை உம்மாலியன்றமட்டும் இதி லமைத்துப் பாடும்" என்று யாழைவாங்கி வாசித்துக்காட்டிக் கொடுத்தருள, பாணர் பிள்ளையாரைத்தொழுது யாழைவாங்கிச் சிரமேற்கொண்டனர், பிறகு திருஞானசம்பந்தப் பிள்ளையார் தருமபுரத்தைவிட்டுப் புறப்பட்டுச் சில சிவஸ்தலங்கட்குச் சென்று சிவதரிசனஞ்செய்து கொண்டு திருச்சாத்தமங்கைக்கெழுந்தருளினர். அந்தத் திருப்பதியினின்று வந்து தம்மை வணங்கிய திருநீலநக்கநாயனாரோடு அயவந்தி என்னும் ஆலயத்திற் சென்று சிவதரிசனஞ் செய்துகொண்டு அந்நாயனார் திருமாளிகைக்குப் போய்த் திருவமுது செய்து அங்குச் சிலநாளிருந்து புறப்பட்டுத் திருநாகைக்காரோணமுதலிய சிவஸ்தலங்களை வணங்கிக்கொண் டெழுந்தருளும்போது

திருச்செங்காட்டங் குடியிலிருக்குஞ் சிறுத்தொண்டநாயனார் எதிர்கொண்டு வந்து வணங்கி அழைத்துக்கொண்டு போகப்போய்க் கணபதீச்சரத்திற் சிவதரிசனஞ் செய்துகொண் டங்கிருந்தார்.

இருக்கும்போது ஒருவணிகன் வழிச்செல்வோனுப் ஒரு கன்னிகையை உடன்கொண்டு போந்து சோயிலுக்குப் புறத்திலே ஒருமடத்திலே நித்திரை செய்யும்போது அவன் பாம்புகடித்திறந்தான். அதுகண்டு அக்கன்னிகை பூமியில் விழுந்து புரண்டழுது கொண்டிருப்பதைச் சிவதரிசனத்துக் கெழுந்தருளிய ஆளுடைய பிள்ளையார் கேட்டுத் திருவுளமிரங்கி அவளுக்கருள் செய்யும் பொருட்டு அடியவர்களோ டெழுந்தருளி வந்து நின்று அவளை நோக்கி "பயப்படாதே நிகழ்ந்த சமாசாரத்தைச்சொல்" என்றருளிச் செய்தார். கன்னிகை கண்ணீர் பெருகப் பிள்ளையார் திருவடியில் விழுந்து நமஸ்கரித் தெழுந்து நின்று, வைப்பூரிலிருக்கும் என்பிதாவாகிய தாமனென்பவனுக்குப் புத்திரிகள் எழுவர், அவர்களில் யான் நீங்கலாக மூத்தோர் அறுவரையும் தன் சகோதரியின் புத்திரனுகிய இவனுக்கே விவாகஞ் செய்துகொடுக்கிறேனென்று பலமுறைசொல்லித் திரவிய அபேட்சையால் பிறருக்கு விவாகஞ் செய்து விட்டான், அதுகண்டு வருத்தமுற்ற இவனுக்கே மனைவியாக வேண்டுமென்று கருதித் தாய் தந்தையர்க்குத் தெரியாது இவனுடன் புறப்பட்டு வந்தேன், இவன் இங்குப் பாம்புகடித் திறந்தான். அடியேன் ஆதரவற்றிருக்கின்றேன், தேவரீர் எழுந்தருளப் பெற்றதனால் அடியேன் சஞ்சலந்தீர்ந்தது, என்றான் ஆளுடைய பிள்ளையார் கிருபைகூர்ந்து விஷநீங்கும் பொருட்டு "சடையாயெனுமால்" என்னுந் திருப்பதிகமோதி அவனைப் பிழைப்பித்து அவனுக்கு அக்கன்னிகையை மணஞ்செய்வித்துப் போக்கி, அங்கு வீற்றிருக்குநாளில், சிறுத்தொண்ட நாயனார் வந்து பிரார்த்திக்கமீண்டும் திருச்செங்காட்டங் குடிக்கெழுந்தருள் விருப்பமுற்றுத் திருமருகற்கோயிலிற்சென்று வணங்கிச் சிவபெருமானார் தாம் திருச்செங்காட்டங் குடியிலிருக்கின்ற திருக்கோலத்தை

அவருக்கு அங்கே காட்டியருள மனமகிழ்ந்து "அங்கமும் வேத மும் ஓதுநாவர்" என்னும் திருப்பதிகம்பாடி அங்கு சிலநாளிருந்து புறப்பட்டுப் பற்பல சிவஸ்தலங்களை வணங்கிக்கொண்டு திருப்புகலூருக்குச் சமீபித்து, அப்பதியினின்று வந்து தம்மை எதிர்கொண்டு வணங்கிய முருகநாயனார் முதலிய அடியார்களோடு திருக்கோயிலுட்சென்று சிவதரிசனஞ்செய்து முருகநாயனார் திருமடத்துக் கெழுந்தருளினர். அங்கு வீற்றிருக்குநாளில் திருநாவுக்கரசு நாயனார் திருவாரூரைவணங்கித் திருப்புகலூருக் கெழுந்தருளுகின்றார் என்னும் செய்தி கேட்டு எதிர்கொண்டுவர, திருநாவுக்கரசுநாயனாரும் எதிர்கொண்டுவந்தனர். இருவரும் ஒருவரையொருவர் வணங்கிமகிழ்ந்தனர். அப்பொழுது ஆளுடைய பிள்ளையார் மருணீக்கியாரைநோக்கி 'அப்பரே' நீர் வருநாளில் திருவாரூரிலே நிகழ்ந்த சிறப்பைச்சொல்லும், என வாகீசர் திருவாதிரைச்சிறப்பைத் திருப்பதிகத்தாற் சொல்லியருளப் பிள்ளையாரதுகேட்டு "நானங்குச் சென்று சிவதரிசனஞ்செய்து மீண்டு வந்து உம்முடன் இருப்பேன்" என்று சொல்லிப் புறப்பட்டுத் திருவிற்குடி வீரட்டத்தை வணங்கித் திருவாரூரைச் சேர்ந்து புற்றிடங் கொண்டாரை வணங்கித் திருப்பதிகம்பாடி அங்கெழுந்தருளி யிருக்குநாளில், திருவலிவலம் திருக்கோவில் முதலிய சிவஸ்தலங்கட்குச் சென்று சிவதரிசனஞ் செய்து கொண்டு மீண்டும் திருவாரூரில் வந்திருந்து பிறகு திருப்புகலூர்க் கெழுந்தருளும்போது அத்தலத்தினின்று எதிர்கொண்டு வந்த திருநாவுக்கரசு நாயனார் முருக நாயனார் முதலிய திருத்தொண்டர்களோடுசென்று சிவதரிசனஞ்செய்துகொண்டு அங்கிருக்கு நாளில் திருநீலநக்க நாயனாரும் சிறுத்தொண்ட நாயனாரும் வந்துடனிருந்தனர். சிலநாள் சென்றபின்பு ஆளுடைய பிள்ளையார் திருநாவுக்கரசு நாயனாரோடு புறப்பட்டுத் திருவம்பர், திருக்கடவூர் முதலிய சிவஸ்தலங்களை வணங்கிக்கொண்டு திருவீழிமிழலையிற்சென்று சிவதரிசனஞ்செய்து அங்குவீற்றிருக்கும்போது, மழையின்மையால் பஞ்சமுளதாக உயிர்கள்வருந்

தின; சிவனடியார்களும் பசியால் மெலிந்து வாடினர். அது கண்டு பிள்ளையாரும், அப்பரும் திருநீறுதரித்த சிவனடியார்களுக்கும் இடுக்க ணுளதாமோ வெனத் திருவுளமிரங்கிச் சிவபெருமான் திருவடிகளைத் தியானித்துக்கொண்டு அன்றிரவு நித்திரைசெய்கையில் சிவபெருமான் அவர்களுக்குச் சொப்பனத்தில் எழுந்தருளிக் "காலபேதத்தால் நீங்கள் வருந்தினீர்கள். ஆயினும், உங்களை வழிபடும் அடியவர்கள் வருத்தத்தை நீக்கும்பொருட்டு இப்பஞ்ச நீங்குமட்டும் தினந்தோறும் திருக்கோயிலின் கிழக்குப் பீடத்திலும், மேற்குப்பீடத்தினும், ஒவ்வொரு காசு வைத்தருளுகின்றோம், என்று மறைந்தருளினர். பிள்ளையார் விழித்தெழுந்து மருணீக்கியாரோடு ஆலயத்திற் சென்று அங்ஙனமே யிருக்கக்கண்டு மகிழ்ந்தெடுத்துச் சிவனடியார்கட் கமுதுபடைத்து ஆனந்தமடைந்திருக்குங் காலத்தில், மழைபெய்து பஞ்சநீங்கியது. உடனே புறப்பட்டு மார்க்கமத்தியிலுள்ள சிவஸ்தலங்களை வணங்கிக்கொண்டு திருமறைக்காட்டிற் சென்று ஆலயத்துட்புகுந்து வலஞ்செய்து வேதங்கள் பூசித்துத் திருக்காப்பிட்ட அந்நாண்முதல் இந்நாள்மட்டும் அடைக்கப்பட்டேயிருக்குந் திருவாயிலுக்கு முன்போய் திருநாவுக்கரசு நாயனாரால் திறப்பித்துச் சிவதரிசனஞ்செய்து பின்னர்த் தாம் திறக்கவும் மூடவுமாயிருக்கத் திருப்பதிகம்பாடி அங்கிருந்தனர்.

அப்பொழுது பாண்டியநாட்டிலே பாண்டிய ராஜன் தான் முற்பிறப்பிற்செய்த தீவினையால் சமணர்களுடைய துர்ப்போதனைக் குட்பட்டு மெய்ச்சமயமாகிய சைவசமயத்தைக்கைவிட்டுப் பொய்ச் சமயமாகிய ஆருகதமதத்திலே பிரவேசித்தான். 'அரசனெவ்வழி அவ்வழியக்குடி' என்னும் பழமொழிப்படி குடிகளும் அவ்வாறுயின. இங்ஙனம் சமணசமயம் பெருகியும் அப்பாண்டியன் மனைவியாராகிய மங்கையர்க் கரசியாரும், அவ்வரசன் முதன் மந்திரியாராகிய குலச்சிறைநாயனாரும் ஆகிய இருவரும் சைவசமயப் பற்றுவிடாதவர்களாய் ஒழுகுநாளில் அளவிறந்த

அற்புதங்களைச் செய்துவரும் திருஞானசம்பந்தப் பிள்ளையார் வேதாரணியத்தில் எழுந்தருளியிருப்பதைக் கேள்வியுற்றுச் சிலரை ஏவ, அவர்கள் அங்குச்சென்று ஆளுடைய பிள்ளையாரைக் கண்டு வணங்கித் தாம் வந்த செய்திசொல்லக்கேட்டுப் பாண்டி நாட்டுக்கெழுந்தருளி அங்கோர்மடத்தில் வீற்றிருந்தனர். அன்றிராத்திரி படுபாவிகளாகிய சமணர்கள் திருமடத்தில் தீயிடக் கண்டு பயந்து "செய்யனே திருவாலவாய்" என்னுந் திருப்பதிகத்தை "அமணர்கொளுவுஞ் சுடர் பையவேசென்று பாண்டியற்காகவே" என்று பாடியருளவே அவ்வக்கினியின் வெப்பம் பாண்டியனையடைந்து வருத்த அவன் வருந்தும் பொழுது தாம் எழுந்தருளித் திருநீற்றுப் பதிகம்பாடியருளி, விபூதியைப் பாண்டி யனுடலில் பூசிய அளவில் அப்பிணிநீங்க அரசன் எழுந்து சமணர்களைநோக்கி "நீர்தோற்றீர்களோ" என்றனர். அவர்கள் "இவ்வொருவிஷயத்திலேயே தோல்வியும் வெற்றியும் சொல்லக்கூடுமா? எங்களிருவோருடைய சமயக்கருத்தையும் ஏட்டில் வரைந்து அக்கினியிலிட்டு வேகாமலிருப்பது யாதோ அதுவே உண்மைச் சமயமாம்" என்றுசொல்லி அவ்வாறே தங்கள் சமயக்கருத்தை ஓரேட்டிலெழுதித் தீயிலிட்டனர். திருஞான சம்பந்தமூர்த்தி நாயனாரும் "போகமார்த்த பூண் முலையாள்" என்னும் திருநள்ளாற்றுப் பதிகமெழுதிய ஏட்டை அக்தீயிலிட்டனர், அவ்வேடுக ளிரண்டில் சமணர்களிட்ட ஏடு அவ்வக்கினியால் தகிக்கப்பட்டது. ஆளுடைய பிள்ளையாரிட்ட ஏடுவேகாமல் முன்னிலும் பசுமையும் புதுமையுமாய் விளங்கிறது. அதைச்சபைமுன் எடுத்து வைத்தனர். பாண்டியன் சமணரைநோக்கி "இப்போதாவது தோற்றீர்களோ" என்னதோற்றவர்கள் "முற்றிலும் தோற்கார்கள்" முன்னே யிரண்டுதரம் வாதுசெய்தோம், இன்னும் ஒருதரம் செய்யவேண்டும், ஆதலால், முன்போல எங்களிருவோருடைய சமயவுண்மையை ஏட்டிற்றீட்டி வைகைநதியிலிட்டால் எது எதிரேறுகிறதோ அதுவே உண்மைச்சமயம், என்றமாத்திரத்தில் குலச்சிறை

நாயனார் சமீபத்தில் வந்து, மும்முறை தோற்றீர்களானால் செய்வது யாது? என்ன அவர்கள் வாய்தவறிக், கழுவேறுகிறோம், என்றனர். உடனே யாவரும் வைகைக்கரையிற் சென்றனர்; அரசன, தங்கள் தங்கள் சமய வுண்மையை வரைந்த ஏட்டை வைகையிலிடக் கடவர்கள் என்றனன். சமணர் "அத்தி நாத்தி" என்றெழுதிய ஏட்டைவைகையிலிடுதலும், அது விரைந்து கடலை நோக்கிச்சென்றது. திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார் "வாழ்க வந்தனர்" என்னுந் திருப்பதிகமபாடி ஏட்டில் வரைந்து வைகையிலிட்டனர். அத்திருவேடு எதிர்ந்து நீரைக்கிழித்துச் சென்றது. சிவபெருமானே எல்லாப் பொருளு மென்று எழுதிய திருவேட்டிலே "வேந்தனுமோங்குக" என்றருளியபடியால் அரசன் கூன் நிமிர்ந்தது, குலச்சிறை நாயனார் திருவேட்டை எடுக்கும்பொருட்டுக் குதிரை ஏறிச்சென்று பிள்ளையார் அவ்வேடு தங்கும்படி "வன்னியுமத்தமும்" என்னுந் திருப்பதிகம் பாடினதினால் திருவேடகமென்னுந் தலத்தில் தங்கநோக்கி எடுத்துவந்த அளவில சமணர்கள் தாங்கள் கூறியபடி கழுவேறினர். அரசன் முதலிய அடியவர்க ளனைவரும் திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் திருவடியில் விழுந்து வணங்கித் துதி செய்து மகிழ்ந்தனர். கழுவேறினொழிந்தின்ற மற்றையோர் விபூதி சாதனந் தரித்துச் சைவராயினர்.

அதன் பின்பு பிள்ளையார் பாண்டியன் முதலாயினரோடு சென்று சொக்கநாதரைத் தரிசித்து வணங்கி இன்னும் பாண்டிய நாட்டிலுள்ள சிவஸ்தலங்கள் பலவற்றையும் வணங்கி அவ்விடம் விட்டுச் சோழநாட்டின் கண்ணுள்ள சிவஸ்தலங்களை வணங்கிக் கொண்டு திருத்தெளிச்சேரியை யடைந்து சிவதரிசனஞ்செய்து வருகையில் பரசமயகோளரி வந்தார் என்றாதும் திருச்சின்னவோசையைப் போதி மங்கையிலிருக்கும் பௌத்தரில் புத்தநந்தி என்பவன் கேட்டு மனம் பொறாமல் அவன் பௌத்தர் கூட்டம் சூழச்சென்று தடுத்தனன். அதைக்கேட்டுத் தேவாரத்திருமுறை எழுதும் சம்பந்த சரணாலயர் பொறாமல் தேவாரத்திலே,

"புத்தர் சமண்கழுக் கையர் பொய்கொளாச்
சித்தத் தவர்க டெளிந்து தேறின
வித்தக நீறணி வார்வினைப் பகைக்
கத்திர மாதனவஞ் செழுத்துமே."

என்னுந் திருப்பாடலை யோதி "இப்புத்தனுடைய சிரம் உருண்டு விழும்படி இடியிடித்து விழக்கடவது" என்று சொல்லிய உடனே தலையிலிடிவிழுந் திறந்தனன். மற்றைப் பவுத்தர்கள் எல்லாம் அஞ்சியோடினர். மீண்டு மவர்கள் ஒருங்குகூடி தம்மில் சாரிபுத்தனைத் தலைவனாகக்கொண்டு நீங்கள் எங்களோடு மந்திரவாதமின்றித் தருக்கஞ்செய்ய வாருங்கள்" என்ன, திருஞான சம்பந்தமூர்த்திநாயனார் திருக்கூட்டத்துடன் அங்கோர் மண்டபத்திலெழுந்தருளினர். சம்பந்த சரணலயர் சுவாமிகளுத்தரவு பெற்றுச் சாரிபுத்தனோடு வாதுசெய்து அவனை வென்று அவர்களனைவரையுஞ் சைவர்களாக்கினர் பிள்ளையார் அங்கிருந்து புறப்பட்டு மற்றைச் சிவஸ்தலங்கட்குச் சென்று சிவதரிசனஞ் செய்துகொண்டு தொண்டைமண்டலத்துக்கு வந்து அங்குள்ள காஞ்சீபுரமுதலிய ஸ்தலங்களை வணங்கி ஸ்ரீ காளஸ்திரிக் கெழுந்தருளிச் சுவாமி தரிசனஞ் செய்து அங்கு வீற்றிருக்கையில், திருமயிலையில் வைசியகுலதிலகராகிய சிவநேச செட்டியாருக் குக் கபாலீசர் திருவருளால் ஒரு புத்திரியார் பிறந்து வளருநாளில் ஒருநாள் மலர்பறிக்கப் பாங்கிமாரோடு நந்தவனத்திற் சென்று பூப்பறிக்கையில் அரவந்தீண்டியிறக்க, மணிமந்திர ஔஷதங்களாலுந் தீராமை கண்டு இவளைத் திருஞானசம்பந்தப் பிள்ளையாருக்கென்று வைத்திருந்த தனால் தகனஞ்செய்த என்பையும் சாம்பரையும் அவர் வருமளவுஞ் சேமஞ்செய்து வைப்பேனென்று துணிந்து அங்ஙனமே தகனஞ்செய்து என்பையும் சாம்பரையும் ஓர் குடத்திலிட்டு வஸ்திராபரணங்களணிந்து கன்னிமாடத்தில் பஞ்சணைமேல் வைத்து முன்போல வுபசரித்துவந்தனர். இவ்வாறு செய்துகொண்டிருக்கையில் ஆளுடையபிள்ளையார் திருவொற்றியூரில் எழுந்தருளியிருப்பதைக் கேள்வியுற்றுப் பரமாநந்தமடைந்து அங்குச் சென்று சுவாமிகளைக் கண்டு வணங்கித் திருமயிலைக் கெழுந்தருளும்படி

விண்ணப்பஞ்செய்ய அப்படியே பிள்ளையார் திருமயிலைக் கெழுந்த ருளிக் கபாலீசரைத் தரிசித்து வணங்கிச் சிவநேசரை நோக்கி எலும்பும் சாம்பருமிட்ட குடத்தைக் கொண்டுவரக் கட்டளையிட்டு அவ்வங்கத்தை "மட்டிட்ட புன்னையங் கானன்மடமயிலை" என் னும் பதிகமோதிப் பெண்ணாக்கிக் கபாலீசர் சந்நிதானத்தில் விடை பெற்றுக்கொண்டு திருவான்மியூர் முதலிய சிவஸ்தலங்களை வணங் கிக்கொண்டு சீர்காழிக் கெழுந்தருளித் தோணியப்பரைத் தரிச னஞ் செய்துகொண்டிருந்தனர். அங்குச் சிவபாதவிருதயரும் அவர் சுற்றத்தாரும் பிள்ளையார் திருமுன்பு வந்து "தேவரீர் வை திகநெறியை விளக்கும்பொருட்டு ஓர் கன்னிகையைத் திருக்கலி யாணஞ்செய்தருளவேண்டும்" என்று பிரார்த்திக்க உடன்பட்டுத் திருநல்லூரிலிருக்கும் நம்பியாண்டார் நம்பி என்பவருடைய புத்தி ரியை வேதவிதிப்படி திருமணஞ்செய்து தீயை வலம் வரும்பொ ருட்டு எழுந்து அக்கினி சிவபெருமானே என்று திருவுளங்கொ ண்டு சிவாலயத்துட்சென்று "நல்லூர்ப்பெருமணம்" திருப்பதிகம் பாடியருளினர், சிவபெருமான் திருவுளமகிழ்ந்து "நீயும் உன் மனை வியும் உன்னுடைய விவாகத்தைக் காணவந்தவர்கள் யாவரும் இச்சோதிக்குள் வந்து நம்மையடையுங்கள்" என்றருளி அவ்வால யமுற்றுஞ் சோதியாகி அச்சோதிக்குளோர் வாயிலை வகுத்துக் காட்ட, திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் "காதலாகிக் கசிந்து" என்னும் நமச்சிவாயத் திருப்பதிகம்பாடியருளிக் கல்யாணத்துக்கு வந்தவர்களையெல்லாம் "இச்சோதிக்குச்செல்லுங்கள்" என்று திரு வாய்மலர்ந்தருளிப் பின்பு திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் தம் முடைய பத்தினியார் கையைப் பற்றிக்கொண்டு அச்சோதியை வலம் வந்து அதனுட் சென்று கலந்தனர், பின்பு அந்தச் சோதி மறைந்து பழையபடி ஆலயமாகக்கண்டு மண்ணுலகத்தாரும் விண் ணுலகத்தாரும் வணங்கித் தோத்திரஞ் செய்தார்கள்.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் சரித்திரம்

முற்றிற்று.



## திருநாவுக்கரசு நாயனார்.

### திருநேரிசை. (4-ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

1 நெடியமால்பிரமனோடுநீரெனும்பிலயங்கொள்ள
வடியொடு முடி யுங்காணாரருச்சுனற்கம்பும்வில்லும்
துடியுடைவேடராகித்தூயமந்திரங்கள்சொல்லிக்
கொடியொடுதேர்கொடுத்தார்குறுக்கைவீரட்டனாரே.

2 ஆத்தமாமயனுமாலுமன்றிமற்றொழிந்ததேவர் [லத்
சோத்தமெம்பெருமானென்றுதொழுதுதோத்திரங்கள்சொல
தீர்த்தமாமட்டமீமுன்சீருடையேழுநாளுங்
கூத்தராய்வீதிபோந்தார்குறுக்கைவீரட்டனாரே.

3 நீற்றினைநிறையப்பூசிநித்தலுநியமஞ்செய்து
வாற்றுநீர்பூரித்தாட்டுமந்தணனாரைக்கொல்வான்
சாற்றுநாளற்றதென்றுதருமராசற்காய்வந்த
கூற்றினைக்குமைப்பர்போலுங்குறுக்கைவீரட்டனாரே.

4 பொய்யினைத்தவிரவிட்டுப்புறமலாவடிமைசெய்ய
வையநீயருளிச்செய்யாயாதியேயாதிமூர்த்தி
வையகந்தன்னின்மிக்கமல்குசிற்றம்பலத்தே
பையநுன்னாடல்காண்பானடியனேன்வந்தவாறே.

5 மனத்தினார்திகைத்துநாளுமாண்பலாநெறிகண்மேலே
கனைப்பராலென்செய்கேனோகறையணிகண்டத்தானே
தினைத்தனைவேதங்குன்றாத்தில்லைச்சிற்றம்பலத்தே
யனைத்துநின்னிலயங்காண்பானடியனேன்வந்தவாறே.

6 நெஞ்சினைத்தூய்மைசெய்துநினைக்குமாநினைப்பியாதே
வஞ்சமேசெய்தியாலோவானவர்தலைவனேநீ
மஞ்சடைசோலைத்தில்லைமல்குசிற்றம்பலத்தே
யஞ்சொலாள்காணநின்றுவழகநீயாடுமாறே

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநாவுக்கரசு நாயனார் சரித்திரம்.

போற்றுதிருவாமூரில் வேளாண்டொன்மைப்
பொருவில் குறுக்கையர்தியர் புகழனார்பான்
மாற்றருமன் பினிற்றிலக வதியாரோது
வந்துதித்தபின்பு மருணீக்கியாருந்
தோற்றியமண்சமயமுறு துயரநீங்கத்
துணைவரருடரவந்த சூலைநோயாற்
பாற்றருநீளிடரெய்திப் பாடலிபுத்திரத்திற்
பாழியொழித்தரன திகைப்பதியில்வந்தார்,

வந்துதமக்கையாருளானீறுசாத்தி
வண்டமிழாலேநோய்தீர்ந்து வாக்கின்மன்னாய்
வெங்கலிபொடிவிடம்வேழம் வேலைநீந்தி
வியன்குலங்கொடியிடபம் விளங்கச்சாத்தி
யந்தமிலப்பூதிமக னரவுமாற்றி
யருட்காசுபெற்றுமறை யடைப்புநீக்கிப்
புந்திமகிழ்கையாற்றிற் கயிலைகண்டு
பூம்புகலூரரன்பாதம் பொருந்தினாரே.

## சரித்திரம்.

திருமுனைப்பாடி நாட்டில் சிறப்புற் றோங்கிய திருவாமூரில் வேளாளர் குலத்தில் குறுக்கையர் குடியில்தோன்றிய புகழனார் செய்த அருந்தவத்தால் அவர்மனைவியாராகிய மாதினியார் திருவயிற்றில் திலகவதியார் அவதரித்தனர். பின்னர் மருணீக்கியாரென்னும் பிள்ளைத் திருநாமமுடைய திருநாவுக்கரசுநாயனார் அவதரித்தனர், இவர்களிருவரில் மருணீக்கியார் சைவாகம

முதலிய கலைபயின்று வருநாளில் சிலமுதியோர் புகழனாரிடத்து வந்து 'கலிப்பகையா ரென்பவருக்குத் திலகவதியாரைத் திருமணஞ்செய்விக்கத் தரவேண்டும்' என்ன, அவர் அதற்கு உடன்பட்டனர். இச்செய்தியை அம்முதியோர் கலிப்பகையார்க் கறிவிக்க அவரும் மணஞ்செய்துகொள்ள விருப்பமுற்றிருக்கும் போழ்து, சோழமகாராஜன் சேனாதிபதியாகிய கலிப்பகையாரை வடதேசத்துப் பகைமன்னரோடு போர்செய்யும்படி ஏவ, அவர் சேனையுடன் சென்று பகைவரோடு நெடுநாள் உயுத்தஞ்செய்துக் கொண்டிருந்தனர். அவர் அங்ஙனமிருக்க, இங்குப் புகழனாரும் மாதினியாரும் சிவபதம் அடைந்தனர் திலகவதியாரும் மருணீக்கியாரும் தாய்தந்தையர் தேகவியோக மடைந்ததுகண்டு துன்புற்று உறவினர் தேற்றத் தெளிந்துமருணீக்கியார் தாய்தந்தைகட்குச் செய்யவேண்டுங் கர்மாதிகளைச்செய்து முடித்திருந்தனர், அங்கு அமர் செய்திருந்த கலிப்பகையார் பகைவரைவென்று புகழ் கொண்டு வீரசுவர்க்கம் எய்தியதைக் கேள்வியுற்ற திலகவதியார் உயிர் துறக்கக்கருதியபோது மருணீக்கியார் வேண்டுகோளால் அக்கருத்தை விட்டுச் சிவபெருமான் திருவடிக்கணன்புபூண்டு அந்நெறிக்கண்ணே யிடையறாது தொழுது நின்றனர். இவர் இவ்வாறிருக்க மருணீக்கியார் வீட்டுநெறியை யடையக் கருதியும் சிவபெருமான் திருவருளின்மையின் மெய்ச்சமயமாகிய சைவசமயத்தை விட்டுப் பொய்ச்சமயமாகிய சமணசமயத்தைக் கைக்கொண்டு அச்சமயநூல்களைக் கற்றுணர்ந்து அவரின்மேம்பட்டுத் தருமசேனரென்னும் பெயர்பெற்று ஒழுகுவதைத் திருவதிகையிற் சென்று சிவவேடம் பூண்டு சிவாலயத்தில் திருவலகிடுதல் திருமெழுகிடுதல் திருமாலை தொடுத்தல் முதலிய திருத்தொண்டு செய்து வாழுந் திலகவதியார் அறிந்து, தம்முடன் பிறந்தவராகிய மருணீக்கியார் பரசமயப் படுகுழியில் வீழ்ந்து கெடுவதை வீரட்டானே சுவரர் சந்நிதியில் நாள்தோறும் விண்ணப்பஞ் செய்யாநிற்க, ஒருநாள் வீரட்டானே சுவரர் திலகவதியார் சொப்பனத்தெழுந்தருளி, 'உன்னுடன் பிறந்தவனுக்குச் சூலை நோயை உண்டாக்கி அவனை நாம் ஆட்கொள்

ளுகிறோம், நீதுன்பப்பட வேண்டுவதில்லை, என்று கட்டளை யிட்டருளி அவ்வாறே அவர்க் கந்நோயை உண்டாக்கியவளவில் அவர் பொறுது தமக்குத்தெரிந்த மந்திரங்களாலும் சமணமுனிவர் மந்திரங்களாலுந்தடுக்கவும் அதுமேன்மேலு முதிர்வது கண்டு இனி யிதற்கென் செய்வோமென்று வருந்தித் திலகவதியாருக் கறிவிக்க, அவர் 'நாம் அங்குவரோம், என்றதை ஒரேவலாளனால் உணர்ந்து அவனையே துணைப்பற்றிக் கொண்டு ஒருவர்க்குந் தெரியாது இராவழிக்கொண்டு சென்று திருவதிகையென்னுஞ்சிவதலத்திற் சேர்ந்து திலகவதியாரைக்கண்டு வணங்கி தாயே? இச் சூலைநோயால் யான்படுந் துயரத்திற்கோரளவில்லை இது தீரும்படி நீர் அநுக்கிரகஞ் செய்யவேண்டும், என்று பிரார்த்தித்தனர். திலகவதியார் மனமிரங்கிச் சிவபெருமான் திருவருளைப் பலமுறை சிந்தித்துத் தொழுது சகோதராகிய மருணீக்கியாரை நோக்கி 'நீர்கடைத்தேறும பொருட்டு வீரட்டானேசுவரர் திருவருளாலுமக் கிந்நோய் நேரிட்டது, ஆதலால், அவரைத் தொழுதுதுதித்தாலன்றித் தீராதென்று திருநீரளித்து அணிந்து கொள்ளச் சொல்லிச் சுவாமி சந்நிதானத்திற் கழைத்துக்கொண்டு போகச்சென்று ஆலயத்தைப்பிரதட்சிணஞ் செய்து வணங்கிப் பரமபிதாவாகிய சிவபெருமான் கிருபையால் பதிகம் பாடவேண்டுமென்னும் பேரன்பு தம்முள்ளத்தின் கண் உதிக்க அவ்வாறே "கூற்றாயினவாறு விலக்ககிலிர்" என்னுந் திருப்பதிகம் பாடினர். அங்ஙனம் பாடிய மாத்திரத்தில் அந்நோய் நீங்கிப் பேரானந்தமடைந்து சிவபெருமான் றிருவருள் இருந்தபடியைக் கருதிப்பரவசமுற் றிருக்கும்பொழுது 'நீ இனிமையாகப் பதிகமோதிய தன்மையால் உனக்கினி நாவுக்கரசு எனவோர் பெயர்வழங்கக் கடவது' என்று அசரீரிவாக்குண்டாக அதுகேட்டு மிகுதியு மகிழ்ச்சியுற்றுப் பசுபதியைப் பலமுறை பணிந்து அன்றுதொட்டுச் சிவவேடம் பூண்டு திருத்தொண்டு செய்திருந்தனர்.

சமணர்கள் இதுதறிந்து இனி நம்முடைய சமயம்பொய்த்தது, அரச னிதுவுணர்ந்தால் அவனுஞ் சைவனாவான், ஆதலால்

அவனறிவதற்கு முன்னே நாம்போய் வேறுவகையாகத் தெரிவிக்க வேண்டுமென்று தம்முள் ஆலோசித்து அரசனிடத்துச் சென்று தருமசேனர் சைவசமய விருப்பத்தால் அதிற் சேரக்கருதிக் கபடமாகத் தமக்குச் சூலைநோய் கண்டதென்றும் அது நம்மந்திரங்களால் தீரவில்லையென்றும் கற்பித்து நம்முடைய சமயத்தை இழிவுபடுத்தித் தம்முடைய தமக்கையினிடத்திற்சென்று சைவராயினரென்று சொல்லினர். அரசன் அதுகேட்டு வெகுண்டு இங்ஙனஞ் சமயத்துரோகஞ் செய்தவனை யாது செய்யவேண்டுமென, அவர்கள் நீற்றறையிலிடவேண்டுமென்று அரசனாணையால் அவ்வண்ணமே செய்யத் திருநாவுக்கரசு சுவாமிகள், "மாசில்வீணைய மாலைமதியமும்" என்னும் திருப்பதிகம் பாடிச் சிவபெருமானைத் துதித்து அதனாற் சிறிதும் இடையூறின்றியிருக்க சமணர்கள் ஏழாநாள் நீற்றறையைத் திறந்துபார்க்கும்போது அவர் தமது திருமேனியில் யாதொரு துன்பமுமின்றி யிருக்கக்கண்டு அதிசயித்து மீண்டும் பாலில் விடங்கலந்துகொடுக்க அதையுமுண்டு உயிர்வாழ்ந்திருந்தனர். பின்னர் அவரை மிதிக்கும்படி யானையை ஏவினர். அப்போது "சுண்ணவெண்சந்தனச்சாந்து" என்னும் பதிகம் பாடியருள அவ்யானைத் திருநாவுக்கரசுநாயனாரை வணங்கித் தன்மேல் ஏறியிருந்த பாகனையுஞ் சமணரையுங் கொன்று சென்றது. பிறகு கற்றூணிற் கட்டிக் கடலிலிட்டனர். அப்பொழுது மருணீக்கியார் பரமசிவத்தை தியானித்து "சொற்றுணைவேதியன்" என்னும் பதிகம்பாடத் தொடங்கக் கட்டுகளெல்லாம் நீங்கி அக்கற்றூண் தெப்பம்போலமிதக்க அதன்மேலிருந்து திருப்பதிக முற்றும் பாடியருளித் திருப்பாதிரிப்புலியூருக் கடுத்த திருக்கெடிலநதி முகத்துவாரக்கரையிற் சேர்ந்து திருப்பாதிரிப்புலியூருக்கெழுந்தருளி அங்குச் சிவபெருமானை வணங்கித் திருப்பதிகம் பாடித் துதித்து மறுநாள் திருவதிகை வீரட்டானேசுவரரைச் சென்று வணங்கித் திருப்பதிகம்பாடிக் கைத்தொண்டு முதலிய திருத்தொண்டு செய்தொழுகுநாளில் சமணவரசனாகிய பல்லவனென்பவன் திருநாவுக்கரசு சுவாமிகளது உண்மையை உணர்ந்து தானுஞ் சைவனாகிச்

சமணர் மடம் ஆலயம் முதலியவற்றை இடித்து ஓர் சிவாலய பிரதிட்டை செய்து வாழ்ந்தனன்.

பின்பு திருநாவுக்கரசுசுவாமிகள் திருவதிகை வீரட்டானத்தினின்றும் புறப்பட்டு அருகிலுள்ள சிவாலயங்களனைத்தையுந் தரிசித்துத் திருப்பதிகம் பாடித் துதித்துத் திருத்தூங்கானைமாடத்திற்சென்று சிவபெருமானைத் தரிசித்து வணங்கிநின்று "ஐயனே" சமணசமயச் சார்பிலிருந்த இவ்வுடலைப் பொறுத்திருக்க அருவருக்கின்றேன், ஆகலால், தேவரீருடைய இலச்சினையை அடியேனுடலில் தரித்தருளவேண்டுமென "வடிவேறுதிரிசூலம்" என்னும் பதிகம் பாடித்துதிக்க அவ்வாறே சிவபெருமான திருவருளால் ஒருவர்க்குந் தெரியாமல் ஓர் பூதம் வந்து சூலக்குறியோடு இடபக்குறியையுந் தமது திருத்தோளில் பொறிக்க மகிழ்ந்து துதித்து அங்கிருந்து புறப்பட்டு மற்றுஞ் சிவஸ்தலங்களையும் வணங்கிக்கொண்டு அளவிலா அன்பு மேன்மேலும் பெருகச் சிதம்பரத்திற்சென்று சிற்சபையில் ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளும் நடேசரைத் தொழுது திருப்பதிகமோதித் துதித்து விடைபெற்றுக்கொண்டு திருஞானசம்பந்த சுவாமிகளைத் தரிசிக்கவேண்டுமென்னும் பேராசையோடு செல்லும்போது அவர் தமது திருக்கூட்டத்துடன் எதிர்வரக் கண்டு வணங்கத் திருஞானசம்பந்தசுவாமிகள் "அப்பரே எழுந்திரும்" என்று தமது திருக்கரத்தாலெடுக்க எழுந்திருந்து அவருடன் சீர்காழியிற் சென்று சிவபெருமானைத் தரிசித்துத் திருப்பதிகம் பாடித்துதித்துத் திருஞானசம்பந்த சுவாமிகள் திருமாளிகையில் திருவமுது செய்து வீற்றிருந்து சோழநாட்டின் கண்ணுள்ள சிவாலயங்களுக்குச்சென்று தரிசிக்கவேண்டுமென்னும் ஆவலோடு திருஞானசம்பந்தசுவாமிகளுடன் எழுந்தருளித் திருக்கோலக்காவிற் சென்று சிவபெருமானைத் தொழுது பதிகம்பாடி அங்கிருந்து தனித்துச்சென்று மற்றைச் சிவஸ்தலங்களையும் வணங்கிக் கொண்டு பிறகு திருச்சத்திமுற்றத்திற்சென்று சிவபெருமானைப் பலமுறைபணிந்து "கூற்றன் வரு

முன்னமே அடியேன் முடியில் தேவரீர்திருவடி சூட்டவேண்டும்” எனத்திருப்பதிகம் பாடியருள, சுவாமி “திருநல்லூர்க்குவருக” வென, அவ்வாறே யங்குச்சென்று ஆலயத்தில் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து நின்றபொழுது என்பெருமான் திருவடிசூட்ட திருப்பதிகம்பாடித் துதித்து அங்கிருந்து புறப்பட்டுத் திங்களூரிற் சென்று தம்மிடத்தன்புள்ள அப்பூதி நாயனாரைக்கண்டு மகிழ்ந்து அவரது வேண்டுகோளால் அவர் திருமனையில் திருவமுது செய்ப வுடன் பட்டமையால் அந்நாயனார் மனைவியார் திருவமுது சமைத்து மூத்த திருநாவுக்கரசென்னும் புதல்வனை நோக்கி, “நீ சென்று வாழையிலை கொய்துவருக.” என்று ஏவ, அப்புதல்வன் சென்று, வாழையிலை யறுக்கும்பொழுது சர்ப்பந்தீண்டிற்று. அவன் கொய்த இலையைக் கொண்டுவந்து தாய் கையிற் கொடுத்திறந்தனன். அவர்கள் கண்டு விஷந்தீண்டியிருக்கலாமென்று தமக்குள் குறிப்பாலறிந்து அவ்வுயிர் நீங்கிய வுடலை மறைத்துத் திருநாவுக்கரசு சுவாமிக ளிடத்துச்சென்று திருவமுதுகொள்ள எழுந்தருள வேண்டுமென்று பிரார்த்திக்க, அவரஃதுணர்ந்து தேவாரமோதிப் புத்திரனைப் பிழைப்பித்து அப்பூதி நாயனாருடன் திருவமுது செய்து அங்கிருந்து புறப்பட்டுத் திருவாரூரிற்சென்று திருக்கோயிலுட் புகுந்து வன்மீகநாதரைப் பதிகம்பாடித் துதித்துத் திருப்புகலூருக்கு வருகையில் அங்கு முன்னமே எழுந்தருளியிருந்த திருஞானசம்பந்த சுவாமிகள் கேள்வியுற்று எதிர்கொண்டுவர இருவருங்கண்டு வணங்கித் திருப்புகலூரைச்சேர்ந்து சிவதரிசனஞ்செய்து திருப்பதிகமோதி முருகநாயனார் திருமடத்தில் எழுந்தருளித் திருவமுதுசெய்து திருஞான சம்பந்த சுவாமிகள் திருவாரூர்க் கெழுந்தருள, திருநாவுக்கரசு சுவாமிகள் அங்குள்ள மற்ற சிவஸ்தலங்களை வணங்கிக்கொண்டு மீண்டும் திருப்புகலூரில் முருகநாயனார் திருமடத்தில் வீற்றிருக்கத் திருஞான சம்பந்தமூர்த்திநாயனார் அங்கெழுந்தருளினர். பின்னர் இவ்விருவர்களும் திருவீழிமிழலையிற் சென்று சிவதரிசனம் பண்ணித் தேவாரமோதித்துதித்து அங்கிருக்கும் பொழுது காலமழையின்றிப் பஞ்சமதிகரித்துச் சிவ

பெருமான் திருவுளமிரங்கித் தம்மடியாருக்குப் படிக்காசு கொடுத்தருள அதனால் இடைவிடாது வருகின்ற சிவனடியார்களியாவர்க்கும் அமுதுபடைத்துக் கொண்டிருந்து பிறகு திருமறைக்காடென்னுந் தலத்திற்சென்று தேவர் பூசித்துச் சாத்திய திருக்கதவு திறக்கும்படி "பண்ணினேர்மொழியாளுமைபங்கரோ" என்னும் திருப்பதிகமோதிப் பின்னர்ச் சோழநாட்டின்கண்ணும் நடுநாட்டின் கண்ணுமுள்ள சிவஸ்தலங்களனைத்தையுந் தரிசித்து வணங்கித் தொண்டை நாட்டிற் கெழுந்தருளி அங்குள்ள காஞ்சீபுரமுதலிய ஸ்தலங்களை வணங்கிக்கொண்டு திருக்காளத்திமலைக்கெழுந்தருளிச் சிவபெருமானைத்தரிசிக்கும் பொழுது ஸ்ரீ கைலாசம் தரிசனமாக அங்கிருந்து புறப்பட்டு ஸ்ரீமல்லிகார்ச்சுனமென்னுந் தலத்திற்சேர்ந்து சிவபெருமானைத் தரிசித்துத் திருப்பதிக மோதித்துதித்து விடைபெற்றுக்கொண்டு வடக்கு நோக்கிச்சென்று கங்கைக்கரை சேர்ந்து காசிவிசுவநாதனைத் தரிசித்து வணங்கி அங்குத் தம்பரிசனங்களை நிறுத்தித் தாம் தனியே இரவும் பகலும் இடைவிடாமல் நடந்து காடுமலைகாறுயாவுங் கடந்து பாலைவனத்திற் செல்லும் பொழுது அதன் வெப்பத்தாற் கால்கள் பரடுவரையினும் கைகள்மணிக்கட்டுவரையினுந் தேய நடக்கச் சக்தியற்றுப் பின்னர்மார்பால் தவழ்ந்தும் புரண்டும் சென்று அதற்குஞ் சக்தியின்மையால் மூர்ச்சித்துகிடக்க, சிவபெருமான் திருவுளமிரங்கி இவ்வுலகத்தின்கண்ணுள்ள ஆன்மாக்கள் உய்யும்பொருட்டுத்திருப்பதிகம் பாடியருள வேண்டுமென்னும் கருத்தால் திருக்கைலாயத்திற்குவரக் கட்டளையிட்டருளாது ஓர் பிராமண வடிவங்கொண்டு திருநாவுக்கரசு நாயனாருக்கு முன்னெழுந்தருளி நீர் இங்ஙனம் வருந்திய தென்னையென அப்பொழுது சிவபெருமான் கிருபாநோக்க வீக்ஷண்ணிய விசேஷத்தால் திருநாவுக்கரசு நாயனார் சற்றுணர்வுற்று அம்மறையவரை நோக்கித் திருக்கைலாச தரிசனஞ்செய்ய வேண்டுமென்னும் பேராசையா லிங்ஙனம் வந்தேன், என்ன அதற்கு "அவ்வந்தணர் திருக்கைலாச தரிசனம் மானிடர்களுக்குக் கிடைக்கத்தக்கதோ" என. "இவ்வுடல் எவ்வகையாலுமழிவது ஆகையால்,

கைலாச தரிசனஞ்செய்தாலொழிய மீளேன்" என்றனர். அவரது மனவுறுதியை நன்குணர்ந்த சிவபெருமான் அப்பிராமணவுருக் கரந்து அறவடிவாகிய இடபவாகனத்தின் மேல் பார்வதிசமேதராய்த்தோன்றி "திருநாவுக்கரசே! எழுந்திரு" என்றுதிருவாக்கருளிய வளவில் திருநாவுக்கரசு நாயனார் திருமேனிமுன்போலப் பழுதின்றி விளங்க உணர்வுற்றுச் சிவபெருமானை அடிமைக்குத் திருக்கைலாச தரிசனந் தந்தருளவேண்டும் என்று பலவாறாகத் தோத்திரஞ்செய்தனர். சுவாமி எழுந்தருளியபோது உண்டாகிய தடாகத்தைக் காட்டி "இதில் முழுகித் திருவையாற்றிற்சென்றால் அங்குக்கைலாசதரிசனஞ் செய்வாய்" என, அவ்வண்ணமே அத்தடாகத்தில் முழுகித் திருவையாற்றில் ஓர் தடாகக்கரையிலேறிச் சிவபெருமான் சந்நிதானத்திற் சென்று நந்திதேவர் முதலிய பிரமதகணங்களும் முனிவர்களும் இந்திராதிதேவர்களும் வந்துநெருங்கியிருக்கவும் தேவதுந்துபி முழங்கவும், நான்கு வேதங்களும் கோஷிக்கவும், பார்வதி சமேதராய் எழுந்தருளியிருக்கும் கைலாசபதியைக் கண்டு தரிசித்து வணங்கி ஆனந்த பரவசராய்த் திருப்பதிகம் பாடித் துதித்தப்பின்பு அக்காக்ஷிபோய் பழையபடி ஆலயமாயிருக்கக்கண்டு மனவருத்தமடைந்து இன்னுமுள்ள சிவஸ்தலங்களைத் தையுஞ் சென்று தரிசிக்க வேண்டுமென்னும் பேரன்பினால் திருப்பூந்துருத்தி என்னும் சிவஸ்தலத்திற்கெழுந்தருளிச் சிவதரிசனம் பண்ணித் திருப்பதிகம்பாடித் துதித்துக் கைத்தொண்டுஞ் செய்து அங்கோர் மடாலயங் கட்டுவித்து அதில் வீற்றிருந்து காலங்கள் தோறுந் தவறாது சிவதரிசனஞ் செய்துக்கொண்டிருக்கையில் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் மதுரைக்கெழுந்தருளிச் சமணரை வாதில்வென்று மீண்டும் சோழவளநாட்டிற்கு வரும்போது திருநாவுக்கரசு நாயனாரைக் காணவேண்டுமென்னும் ஆசையால் திருப்பூந்துருத்திக்கெழுந்தருள, அதைத் திருநாவுக்கரசு நாயனாருணர்ந்து ஒருவருமறியாது சென்று திருஞானசம்பந்தமூர்த்திநாயனார் எழுந்தருளிய முத்துச்சிவிகையைத் தமது அருமைத் திருத்தோளால் தாங்க, அதைத் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் அறியாமையால் "அப்பா எங்கு" அடியேன "தேவரீர் முத்துச் சிவிகை

யைத் தாங்கும் பெருவாழ்வு பெற்றுளன்" என்ன, அம்மொழி தம் திருச்செவியில் புகுமுன் திருஞானசம்பந்த மூர்த்திநாயனார் விரைவிற் சிவிகையை விட்டிறங்கித் திருநாவுக்கரசு நாயனாரைப் பணிய, அவரதற்கு முன்னமே வணங்கக்கண்ட சிவனடியார்களனைவரும் அவ்விருவர்களையும் தொழுது அடங்கா மகிழ்ச்சியா லாரவாரித்தனர். பிறகு திருஞான சம்பந்த மூர்த்தி நாயனாரும் திருநாவுக்கரசு நாயனாரும் ஆலயத்திற் கெழுந்தருளிச் சுவாமிதரிசனஞ்செய்து திருமடத்திற்போய் இருவரும் அளவளாயமர்ந்திருக்கையில் மதுரையில் நடந்த செய்திகளெல்லாவற்றையுந் திருக்கூட்டத்தார் கூறக்கேட்டு ஆனந்தமடைந்ததுமன்றிக் குலச்சிறைநாயனார் மங்கையர்க்கரசியார் ஆகிய இவர்களுடைய சிவநேசமிகுதியைத் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் திருவாய்மலர்ந்தருளக்கேட்டுப் பரவசமடைந்து உடனே தாமும் மதுரைக்கெழுந்தருளிச் சொக்கநாதரையும் அங்கயற்கண்ணம்மையையும் தரிசித்துத் திருப்பதிகம்பாடித் துதித்திருக்கையில் மந்திரியாராகிய குலச்சிறை நாயனாரும் பாண்டிய ராசராகிய நின்றசீர்நெடுமாற நாயனாரும் வந்து வணங்க மகிழ்ந்து அவர்க்கினிய வசனங்கள் சொல்லிப்போக்கி அங்கிருந்து புறப்பட்டு இடையிலுள்ள சிவஸ்தலங்களைத் தரிசித்து இராமேச்சுரத்துக்கெழுந்தருளி இராமேச்சுரரைத் தரிசித்துப் பதிகம்பாடிச் சாத்தியங்குச் சிலநாள் வரையிலிருந்து மீண்டும் சோழவளநாட்டிற் கெழுந்தருளித் திருப்புகலூரிற்சென்று சிவபெருமானைத் தரிசித்து வணங்கி அங்குழவாரத்தாற் கைத்தொண்டு செய்து வாழுநாளில் பரமகாருண்ணியராகிய சிவபெருமான் திருநாவுக்கரசு நாயனாரது பக்தி மிகுதியை உலகத்திலுள்ள ஆன்மகோடிகளுக்கறிவிக்கும் பொருட்டு அவர் உழவாரப்படையாற் செதுக்குமிடங்களிலெல்லாம் பொற்குவையும் நவமணிக்குவையுமாகச் செய்தருள அவற்றை ஓடுங்கற்களுமாக மதித்துத் திருவலகிட்டெறியப் பின்பு அவரை மயக்கும்படி அரமகளிரை ஏவ அவர்களங்ஙனமெய்தி மயக்க அதுகண்டு திருநாவுக்கரசுநாயனார் வினையைக் குறித்து "உய்யாவிங்கென்ன குறையுடையேனென்" என்னுந்திருத்தாண்டக மோதியருள, அம்மாதர்கள் இவரை மயக்குவது நம்மா

லாவது அன்றென்று கருதிப் போயினர் பின்பு திருநாவுக்கரசு நாயனார் அத்தலத்திலேயே சிவபெருமானை இடையறாது தரிசனஞ் செய்து பதிகம்பாடிச் சாத்திவாழுநாளில் ஓர்நாள் "எண்ணுகேனெ ன்சொல்லி எண்ணுகேனே" என்னுந்திருத்தாண்டக மோதிச்சிவா நந்தாதீதராய்ச் சிவபெருமான் திருவடி நீழலில் சேர்ந்தருளினர்,

திருநாவுக்கரசுநாயனார் சரித்திர
முற்றிற்று.

---

தேவாரம்

திருநேரிசை, பண்-கொல்லி (4-ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

பத்தனாய் பாடமாட்டேன் பரமனே பரமயோகி
யெத்தினாற் பத்திசெய்கே னென்னைநீ யிகழ்வேண்டா
முத்தனே முதல்வா தில்லை யம்பலத்தாடுகின்ற
வத்தாவுன்னாடல்காண்பா னடியனேன் வந்தவாறே.

கருத்தனாய்ப் பாடமாட்டேன் காம்பனதோளிபங்கா
வொருத்தரா லறியவொண்ணாத் திருவுருவுடையசோதீ
திருத்தமாந் தில்லைதன்னுட் டிகழ்ந்த சிற்றம்பலத்தே
நிருத்தநான் காணவேண்டி நேர்பட வந்தவாறே.

பார்த்திருந்தடியனேனான் பரவுவன் பாடியாடி
மூர்த்தியேயென்பனுன்னை மூவரின் முதல்வனென்ப
னேத்துவாரிடர்கடீர்ப்பாய் தில்லைச் சிற்றம்பலத்துக்
கூத்தாவுன் கூத்துக்காண்பான் கூடநான்வந்தவாறே.

பொய்யினைத் தவிரவிட்டுப் புறமலாவடிமைசெய்ய
வையநீயருளிச்செய்யா யாதியே யாதிமூர்த்தி
வையகந்தன்னின்மிக்க மல்கு சிற்றம்பலத்தே
பையநுன்னாடல் காண்பான் பரமநான்வந்தவாறே.

மனத்தினார் திகைத்துநாளு மாண்பலாநெறிகண்மேலே
கனைப்பரா லென்செய்கேனோ கறையணிகண்டத்தானே
தினைத்தனை வேதங்குன்றாத் தில்லைச்சிற்றம்பலத்தே
யனைத்துநின் னிலயங்காண்பா னடியனேன்வந்தவாறே.

# திருக்கழுக்குன்றம்.

## சுந்தரமூர்த்தி நாயனார்

பண்—நட்டபாடை (7-ம் திருமுறை.)

1. கொன்றுசெய்தகொடுமையாற்பலசொல்லவே
நின்றபாவவினைகடாம்பலநீங்கவே
சென்றுசென்றுதொழுமின்றேவர்பிரானிடங்
கன்றினோடுபிடிசூழ்தண் கழுக்குன்றமே.

2. இறங்கிச்சென்றுதொழுமினின்னிசைபாடியே
பிறங்குகொன்றைச்சடையனெங்கள்பிரானிடம்
நிறங்கள்செய்தமணிநித்திலங்கொண்டுழி
கறங்குவெள்ளையருவித்தண் கழுக்குன்றமே.

3. நீளநின்றுதொழுமினித்தலுநீதியா
லாளுநம்வினைகளாயினதீர்ந்திடத்
தோளுமெட்டுமுடையமாமணிச்சோதியான்
காளகண்டனுறையுந்தண்கழுக்குன்றமே.

4. வெளிறுதீரத்தொழுமின்வெண்பொடியாடியை
முளிறிலங்குமழுவாளன்முந்தியுறைவிடம்
பிளிறுதீயப்பெருங்கைப்பெய்மதமூன்றுடைக்
களிறினோடுபிடிசூழ்தண்கழுக்குன்றமே

5. புலைகடீரத்தொழுமின்புன்சடைப்புண்ணிய
னிலைகொள்சூலப்படையனெந்தைபிரானிடம்
முலைகளுண்டுதழுவிக்குட்டியொடுமுசுக்
கலைகள்பாயும்புறவிற்றண்கழுக்குன்றமே

6. மடமுடையவடியார்கடம்மனத்தேயுற
விடமுடையமிடறன்விண்ணவர்மேலவன்
படமுடையவரவன்றான்பயிலுமிடங்
கடமுடைப்புறவிற்றண்கழுக்குன்றமே.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சுந்தரமூர்த்தி நாயனார் சரித்திரம்.



தண்கயிலைநீக்கி நாவலூர்வாழ்
 சைவனார் சடையனார் தநயனாராய்
மண்புகழ வருட்டுறையா னோலைகாட்டி
 மணமவிலக்க வன்றொண்டா யதிகைசேர்ந்து
நண்பினுடனருள்புரிய வாரூர்மேவி
 நலங்கிளரும் பரவைதோ ணயந்துவைகித்
திண்குலவுமவிறன்மிண்டர் திறல்கண்டேத்துந்
 திருத்தொண்டத்தொகையருளாற் செப்பினாரே.

செப்பலருங் குண்டையூர் நெல்லளைழத்துத்
 திருப்புகலூர்ச்செங்கல்செழும்பொன்னாச்செய்து
தப்பின்முது குன்றர்தரும் பொருளாற்றிட்டுக்
 கடத்தெடுத்துச் சங்கிலிதோள்சார்ந்துநாத
னொப்பிறனித் தூதுவந்தா றடுகேறி
 யறுமுதலை சிறுமதலை யுமிழநல்கி
மெய்ப்பெரிய களிறேறி யருளாற்சேர
 வேந்தருடன் வடகயிலை மேவினாரே.

## சரித்திரம்.

திருக்கைலாச மலையில் பார்வதியாரோடு எழுந்தருளியிருக்கும் சிவபெருமானுடைய மெய்த்தொண்டர் அறுபத்துமூவரில் ஒருவராகிய ஆலாலசுந்தரரென்பவர் ஒருநாள் அப்பரமபதிக்கு பூமாலைதொடுத்தணிதற்பொருட்டு மலர்கொய்தற்குத் திருநந்தனவனத்திற் சென்றபோது, உமாதேவியார்க்கு மலர்மாலைசூட்டிச் சாத்

தாதறு நந்தவனத்திற் பூப்பறிக்குநின்ற அவருடைய சேடியர்களாகிய அநிந்திதை, கமலினி என்னும் பெயருடைய பெண்கள் இருவர்மேல் இச்சைகொண்டார் அவர்களும் ஆலால சுந்தரரைக் கண்டு அவர்மேல் ஆசைகொண்டார்கள் பின்பு ஒருவாறு மனத்தை மீட்டுக்கொண்டு ஆலாலசுந்தரர் சிவசந்நிதானத்துக்கும் சேடியர்கள் தாயார் சந்நிதிக்கும் சென்றனர். சர்வாந்தரியாமியாகிய கைலாசபதி ஆலாலசுந்தரரை நோக்கி "நீ பெண்கள் மேலிச்சை கொண்டமையால் தட்சிணபூமியில் மானிடதேகமெடுத்து அப்பெண்களோடு கூடியின்பமனுபவிப்பாயாக என்று திருவாய்மலர்ந்தருளக்கேட்டு, ஆலாலசுந்தரர் நடுநடுங்கிச் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து எழுந்து நின்று அஞ்சலிஹஸ்தராய் "கருணைக்கடலே" மனிதனைப் பிறந்து சமுசார சாகரத்தில் மூழ்கிச் செய்வதின்னது தவிர்வதின்னது என்றறியாது மயங்கும்பொழுது தேவரீர் என்னைத் தடுத்தாட்கொள்ளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, சிவபெருமான் அதற்குத் திருவுளமிசைந்தனர்.

அவ்வாறே ஆலாலசுந்தரர் புண்ணிய பூமியாகிய பரதகண்டத்தில் தென்தேசத்தில் திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூரில் ஆதிசைவப்பிராமண குலத்தில் சடையனாருடைய கற்புக்கிருப்பிடமாகிய இசைஞானியார் திருவயிற்றில் அவதரித்து நம்பியாரூரரென்னும் பிள்ளைத் திருநாமம்பெற்று ஒருநாள் வீதியில் சிறுதேருருட்டி விளையாடுகையில் அந்நாட்டரசராகிய நரசிங்க முனையரையர் கண்டு சடையனார் சம்மதத்தின்மேல் அப்பிள்ளையைத் தம் மாளிகைக்கு எடுத்துக்கொண்டுபோய் அபிமான புத்திரராகப் பாலித்து வளர்க்க வளர்ந்தாராயினும் பிராமண குலத்துக்குரிய ஒழுக்கமுடையராய்த் தக்க பருவத்தில் உபநயனஞ் செய்யப்பெற்று வேதாகம முதலிய சகல சாஸ்திரங்களிலும் வல்லவராய்த் திருமணஞ்செய்துகொள்ளுதற்குரிய பருவத்தையடைந்தனர். அதுகண்டு தந்தையாராகிய சடையனார் தம்மரபுக்கேற்ற புத்தூரிலுள்ள சடங்கவி சிவாசாரியாரிடத்தில் அவர்புத்திரியைத் தம்புத்திரருக்கு மணம்பேசச் சில முதியோரை அனுப்பினார், அவர்கள் சடங்கவி சிவாசாரியாரிடத்திற் சென்று பேசி அவர் உடன்பட்ட செய்தி

யைச் சடையனார்க் கறிவித்தனர். அப்பொழுது சடையனார் மனமகிழ்ந்து விவாகசுபதினமுகூர்த்தம் நிச்சயித்துத் தம்ஞாதிகள் முதலிய உறவினரையும், நட்பினர் யாவரையும் திருமணவோலைபோக்கி வரவழைத்தனர். பின்பு நம்பியாரூராகிய சுந்தரமூர்த்தி நாயனார் திருமணக்கோலம்பூண்டு குதிரையின்மேலேறிச் சகல சம்பிரமத்தோடு புத்தூரில் சடங்கவியார் வீட்டில் திருக்கல்யாணப்பந்தர்க்கு முன்சென்று குதிரையினின்றிழிந்து உள்ளேபோய் ஆசனத்திருந்தனர். அப்பொழுது சிவபெருமான் தாம் திருக்கைலாயத்தில் ஆலாலசுந்தரர்க்குத் திருவாக்களித்தபடி ஓர் வயோதிக பிராமண வடிவங்கொண்டு அந்தக்கல்யாணப்பந்தலில் எழுந்தருளி நின்று அங்குள்ளார்க்கெதிரில் நம்பியாரூரரைநோக்கி "உனக்கும் எனக்கு மொரு வழக்கிருக்கிறது" அது தீர்ந்தபிறகுதான் நீ விவாகஞ்செய்துக்கொள்ளவேண்டும், என்றனர். நம்பியாரூரர் "உமக்கும் எனக்கும் உள்ள வழக்கு யாது என்ன அவ்வையர் அங்குள்ள பிராமணர்களை நோக்கி இந்த நம்பியாரூரன் எனக்கடிமை" என்றார் அதுகேட்ட நம்பியாரூரர், இவ்வையர் சொல்லியது நன்றாயிருக்கிறது 'என்றுபழித்துச்சிரிக்க' பிராமணவேடம் பூண்டுவந்த கடவுள் உன்பாட்டன் எழுதிக்கொடுத்த முறியோலை இதோ இருக்கிறது அப்படியிருக்க நீ பரிகாசஞ்செய்தது என்ன, என்றார். நம்பியாரூரர் ஐயரைநோக்கி 'பிராமணருக்குப் பிராமணர் அடிமைப்படுதல் இன்று நீர் சொல்லக் கேட்டோம். நீ பித்தனோ, என்ன, ஐயர் 'நான் பித்தனானாலுமாகட்டும் பேயனானாலுமாகட்டும், நானதற்குச் சிறிதும் வெட்கமடையேன், நீ விருதா வார்த்தைகள் பேசவேண்டாம், அடிமைத்தொழில் செய்யவா என்றார், 'நம்பியாரூரர் ஐயரே அவ்வோலையைக் காட்டும்' என்ன ஐயர் 'நீ யிந்தவோலையைப் பார்த்து நிச்சயிக்கத் தக்கவனோ, நானிந்தச் சபையாருக்குக் காட்டி மெய்யென்று ஒப்புக்கொள்ளச் செய்வித்தபின் எனக்கடிமைத் தொழில் செய்யமாத்திரம் தக்கவன், என்றார். அதுகேட்டு நம்பியாரூரர் கோபங்கொண்டு அவர் கையிலுள்ள ஓலையைப்பறிக்க அவருக்கெதிரிற் சென்ற அளவில் அவரோடத் தாம் பின்தொடர்ந்தோடிப் பிடித்து ஓலையைப் பறித்துக் கிழித்த

ணர். சுந்தரமூர்த்தியைப் பிடித்து ஒருதரம் 'இது முறையோ எ
ன்று கூச்சலிட, சமீபத்தி னின்றவர்கள் இருவரையும் விலக்கி,
உலகத்தில எங்காளும் நடக்கிராத செய்தியைக் கொண்டு வழக்கா
டுகிற பிராமணரே! நீரெங்கே யிருக்கிறவர்? சொல்லும, என
'நான் இந்தத் திருவெண்ணெய் நல்லூரில் இருக்கிறவன், அதிருக்
கட்டும், இந்த நம்பியாரூரன் அறநெறிக்கு விரோதமாக என் கை
யில் இருந்த ஓலையைப் பலாத்காரமாய்ப் பிடுங்கிக் கிழித்ததனால்
தான் எனக்கடிமை என்பதை ஸ்திரப்படுத்தினன், என்றார். அப்
பொழுது நம்பியாரூரர் 'நீர் திருவெண்ணெய் நல்லூரில் இருப்பவ
ராயின் உம்முடைய தப்பு வழக்கை அங்கேதானே பேசித் தீர்ப்
புச் செய்யவாரும் என்ன, ஐயர் அது கேட்டுத் "திருவெண்ணெய்
நல்லூரில் உள்ள பிராமணர்களுக்கு முன் ஆதியில் எழுதிய மூல
ஓலையைக் காட்டி நீ எனக்கு முறியென்பதைச் சாதிப்பேன், என்
று தண்டூன்றிக்கொண்டு முன்னே சென்றார். நம்பியாரூரரும் மற்
றைப் பிராமணர்களும் பின்னே போயினார்கள்.

ஐயர் தமக்குப் பின்வந்த நம்பியாரூரரோடும் மற்றப் பிராம
ணரோடும் திருவெண்ணெய் நல்லூரைச் சேர்ந்து அங்குக் கூடிய
பிராமணர்களுக்கெதிரில் அவர்களை நோக்கி அறிவிற் சிறந்த பெரி
யோர்களே! இந்த நம்பியாரூரன் நீ எனக்கடிமையென்று காட்டிய
ஓலையைப் பறித்துக் கிழித்துவிட்டு உங்களிடத்தில் வந்திருக்கிறான்
என்று முறையிட்டார், அதைக் கேட்ட பிராமணர்கள் அவரைப்
பார்த்து 'பிராமணர்கள் அடிமைப்படுதல் இவ்வுலகத்தில் எக்கால
த்துமில்லையே, ஐயரே நீர் என்ன தப்புவார்த்தை சொல்லுகின்றீர்"
என்ன ஐயர் "நான் சொல்லியது பொய்யன்று, மெய்யே. இவன்
பறித்துக் கிழித்த வோலை இவனுடைய பாட்டன் தானும் தன்
உறவினரும் எனக்கடிமை யென்றெழுதிக் கொடுத்த வோலை" என்
றார். உடனே பிராமணர்கள் நம்பியாரூரரை நோக்கி, இவர் உம்
முடைய பாட்டன் எழுதிக்கொடுத்த முறியோலையைக் காட்டினால்
நீரதைப் பறித்துக் கிழிக்கலாமா? அதனால் உம்முடைய பக்ஷம்
செயித்ததோ? இவர் தம் வழக்கை யாவரும் ஒத்துக்கொள்ளும்
படி கூறினர். இனி உம்முடைய கருத்து யாது? என்ன, அதற்

ருச் சுந்தரர் "வேதாகம முதலிய யாவுங் கற்றுணர்ந்த மகான்களே, நான் ஆதிசைவனென்பதை நீங்களெல்லாமறிவீர்களே, அப்படியிருக்க இந்தப் பிராமணர் என்னைத் தமக்கடிமை என்று சாதிக்கிறாரே இது மனத்தால் நிச்சயிக்கத்தகாத மாயை என்றே நினைத்தல் வேண்டும், நானிதற்கென்ன சொல்வேன்" என்ன அதைக் கேட்ட பிராமணர் அவ்வையரை நோக்கி "நீர் இவரை உம்முடைய அடிமையென்று சொல்லுகிறதற்கு அநுபவம் லிகிதம் சாட்சி இம்மூன்றிலொன்று உம்மிடத்தில் இருக்கவேண்டுமே அதைக் காட்டும்" என்ன அப்பொழுது ஐயர் "இவன் கிழித்த ஓலை மூலவோலையாய்ப் பார்த்தெழுதிய படியோலை, மூலவோலையோ என்னிடத்திருக்கின்றது" என்றார். பிராமணர் "அவ்வோலையைக் காட்டும்" என்ன, ஐயர் "ஆரூரன் அதையும் முன்போலப் பறித்துக் கிழித்துப் போட்டால் என் செய்வேன். ஆதலால் அப்படிச் செய்யாதபடி திட்டஞ் செய்வீர்களானால் காட்டுகிறேன்" என்ன, பிராமணர் "கிழிக்கவொட்டோம், காட்டும்" என்ன, ஐயர் மூலவோலையைக் கையிலெடுத்தனர். அப்பொழுது சபையார் கட்டளையின்படி ஓர் கரணன் அவரைக் கும்பிட்டு ஓலையை வாங்கிச் சபையிலுள்ளோர் கேட்கும்படி, "திருநாவலூரிலிருக்கும் ஆதிசைவனாகிய ஆரூரனென்னும் நான் திருவெண்ணெய்நல்லூரிலிருக்கும் பித்தனுக்கு நானும் என் சந்ததியாரும் வழித்தொண்டு செய்ய உள்ளமும் புறமும் ஒப்ப உடன்பட்டெழுதிக்கொடுத்தேன். இப்படிக்கு ஆரூரன்," என்று வாசித்தான். அதிற் சாட்சி கையெழுத்திட்டவர்களும் தங்கள் கையெழுத்தென்றே ஒப்புக்கொண்டனர். அதன்பின்பு பிராமணர்கள் நம்பியாரூரரை நோக்கி, "இது உம்முடைய பாட்டன் கையெழுத்து தானோ? பாரும்" என்ன, ஐயர் அவர்களைப் பார்த்து, இச்சிறுவன் தன்னடிமையோலையில் எழுதிய தன பாட்டன் கையெழுத்தை அறியச் சக்தியுள்ளவனோ, இவன் பாட்டன் எழுதிய வேறு கைச்சாத்திருந்தால் அதை வருவித்துப் பார்த்து ஒத்திருந்தால் உங்களுக்குத் தோன்றிய தீர்ப்புச் சொல்லுங்கள் என்ற அளவில் அப்படியே அவர் பாட்டனார் கைச்சாத்தொன்று அழைப்பித்துப் பார்த்து ஒத்திருக்கக் கண்டு "இனி நீர் தப்பவழி இல்லை நீர் இந்தப்

பிராமணருக்குத் தோற்றீர். ஆதலால் அவர் கருத்தின்படி அடிமைசெய்வதே கடன்" என்றார்கள். ஆலாலசுந்தரர் "விதிமுறை இதுவாயின் நானுடன்படேனென்று சொல்லக்கூடுமோ" என்று நின்றார் அப்பொழுது பிராமணர்கள் அவ்வவையரை நோக்கி "நீர் காட்டிய முறியோலையில் எங்களூரே உம்முடைய ஊராக எழுதப்பட்டிருக்கின்றது. ஆகையால் உமக்கிங்கே தலைமுறையாக வுள்ள வீடும் ஸ்திதியும் காட்டும்" என்ன, "காட்டுகின்றேன் வாருங்கள்" என்று நம்பியாரூரரும் பிராமணர்களும் பின்தொடர்ந்துவரத் தாம் அவ்வூரிலுள்ள திருவருட்டுறை என்னுஞ் சிவாலயத்துள்ளே போயினார் பின்போன சபையார் அவரைக்காணாது திகைத்து நின்றார்கள்.

அப்பொழுது சுந்தரமூர்த்தி நாயனார் என்னை அடிமைகொண்ட பிராமணர் திருக்கோயிலுள்ளே புகுந்தது என்ன ஆச்சரியமென்று கருதி அத்தியந்தவாசையோடும் தனித்து அவரைப் பின்தொடர்ந்துபோய் கூப்பிட சிவபெருமான் அறவடிவாகிய இடபவாகனத்தின்மேல பார்வதிசமேதராய் எழுந்தருளி "நீ நமக்கு முன்னை தொண்டனாயிருந்தாய், பெண்கள்மேல் ஆசை வைத்ததனால் நம்முடைய ஆணையால் பூமியிற் பிறந்தாய் இப்பொழுது சமுசாரபந்தமானது உன்னைத் தொடாதபடி நாமே வலிய வந்து தடுத்தாட்கொண்டோம்" என்று திருவாய்மலர்ந்தருளினர். இவ்வாறெழுந்த அருமைத் திருவாக்குச் செவியில் நுழையச் சுந்தரமூர்த்தி நாயனார் பரவசப்பட்டு அடியற்ற மரம்போல் பூமியில்விழுந்து அஷ்டாங்க நமஸ்காரம் பண்ணி ஆனந்தக் கண்ணீர் பெருக எழுந்துநின்று இரண்டு கைகளையும் சிரசின்மேற் குவித்து "பொன்னம்பலத்தில் பஞ்சகிருத்தியத் திருநடனஞ் செய்தருளும் சுவாமி தேவரீர் ஒன்றுக்கும் பற்றாத என்னை வலியத் தடுத்தாண்ட அருட்பெருமையை என்னென்று சொல்லுவேன்" என்றார் அப்படி நின்ற நம்பியாரூரரை நோக்கி "நீ நம்மோடு வன்சொற் பேசி வன்றொண்டனென்னும் பெயர் பெற்றாய், நமக்கு அன்பினாற் செய்யும் அருச்சனையாவது பாடலேயாம். ஆதலால், நம்மேற் றமிழ் பாடல் பாடுக" என்று அருளிச்செய்யச் சுந்தரமூர்த்தி நாயனார் அஞ்சலியஸ்

தராய் "அடியேன் தேவரீருடைய அநந்தகல்யாண குணங்களில் எதை அறிவேன் என்னவென்று பாடுவேன்" என்ன, அதற்குச் சிவபெருமான் "நீ முன்னே நம்மைப் பித்தனென்றாய் ஆதலால் என் பெயர் பித்தனென்றே பாடுக" என்ன சுந்தரமூர்த்தி நாயனார் தம்மை அடிமைகொண்ட சிவபெருமான்மேல் "பித்தா பிறைசூடி" என்னுஞ் சொற்றொடரை முதலாகவுடைய திருப்பதிகத்தைப் பாடியருளினார் பின்பு சிவபெருமான் "நீ இன்னும் நம புகழைக் குறித்துப் பலவகையாகப் பாடுக" என்று மறைந்தருளினார். இது நிற்க புத்தூரில் சடங்கவி சிவாசாரியர் பத்திரியாரோ விவாகந்தவறினதினால் சுந்தரமூர்த்தி நாயனாரையே தியானஞ் செய்துகொண்டிருந்து சிவபதமடைந்தனர்.

பின்பு சுந்தரமூர்த்தி நாயனார் திருவெண்ணெய்நல்லூரிலிருக்கின்ற திருவருட்டுறை என்னும் ஆலயத்தி லெழுந்தருளிய பரமகாருண்ணிய மூர்த்தியாகிய சிவபெருமான் தம்மை யாட்கொண்டபின் திருநாவலூர்க்கும் திருத்துறையூர்க்கும் சென்று திருப்பதிகம் பாடிச் சிதம்பரத்திலே ஆனந்தத்தாண்டவஞ் செய்தருளும் நடேசரைத் தரிசிக்கவேண்டுமென்னும் பேராசையோடு புறப்பட்டுத் திருவதிகையென்னுந் தலத்துக்குச் சமீபத்திற்போய்த் 'திருநாவுக்கரசுநாயனார் உழவாரத்தால் கைத்தொண்டு செய்த இத்தலத்திலே நான் மிதிக்க அஞ்சுகிறேன்' என்று அதற்குட் செல்லாமல் அருகிலிருந்த சித்தவடமடத்தி லெழுந்தருளி அன்றிராத்திரி திருவதிகை வீரட்டானத்தில் வீற்றிருக்கும் சிவபிரான் திருவடிகளைத் தியானஞ் செய்துகொண்டு நித்திரை செய்யும்போது வீரட்டானேசுரர் ஓர் விருத்தப் பிராமணராகி அம்மடத்தில் நுழைந்து சுந்தரமூர்த்தி நாயனார் சிரசின்மேல் தமது திருவடியை வைத்தருளித் துயில்பவர்போ லிருந்தனர் அப்பொழுது சுந்தரமூர்த்தி நாயனார் விழித்துக்கொண்டு, "ஐயரே ஏன் உம்முடைய பாதத்தை என் சிரசின்மேல் வைத்தீர்" என்ன; ஐயர் "என் வயோதிகத்தால் திசை தெரியாது அப்படிச் செய்தேன்" என்ன, சுந்தரமூர்த்தி

நாயனார் அதற்கொத்துக்கொண்டு தம்முடைய சிரசை வேறொரு திசையில் வைத்து நித்திரை செய்தனர். சிவபிரான் அங்குஞ் சென்று சுந்தரமூர்த்தி நாயனாருடைய சிரசில் தம்முடைய பாதத்தை நீட்ட சுந்தரமூர்த்தி நாயனார் "என் சிரசில் பலமுறை கால் வைத்த நீர் யார்" என்ன, "நீ என்னை அறியாய்" என்று உரைத்து மறைந்தருளினர். அதுகண்டு சுந்தரமூர்த்தி நாயனார் தம்முடைய சிரசில் பாதத்தை வைத்தவர் சுவாமி என்றறிந்து "அடியேன் செருக்கினால் சிவபெருமானென்று அறியாமையால் என் செய்தேன்" என்று வருந்தி, வீரட்டானேசுரரை "தம்மானையறியாத சாதியாருளரே" என்னுந் திருப்பதிகம் பாடித் துதித்து அங்கிருந்து புறப்பட்டுச் சிதம்பரத்திற் சென்று கனகசபையில் ஆனந்தத் தாண்டவஞ் செய்தருளும் சபாநாதரைத் தரிசித்து அன்பு மிகுதியால் நெருப்பிலிட்ட நெய்போல் மனமுருகி ஆனந்தக் கண்ணீர் பெருகவிழுந்து நமஸ்கரித்து பேரின்பசாகரத்தில் முழுகி இரண்டு கைகளையுஞ் சிரசின்மேற் குவித்துப் பதிகம் பாடித்துதித்து நின்றனர்.

அப்பொழுது நடேசர் திருவருளால் "திருவாரூர்க்குவா" என்று எழுந்த அசரீரிவாக்கைக் கேட்டு அக்கட்டளையைச் சிரமேற்கொண்டு கனகசபையைப் பிரதட்சிணஞ்செய்து வணங்கி விடைபெற்றுக்கொண்டு புறப்பட்டுக் கொள்ளிடநதியைக்கடந்து சீர்காழிக்குச் சமீபித்து இது திருஞானசம்பந்தநாயனார் திருவவதாரஞ் செய்ததலம் ஆகையால் அதை மிதிக்கலாகாதென்று கருதி அதன் எல்லையை வணங்கி வலம் வரும்போது சிவபெருமான் தரிசனந் தந்தருள, "சாதலும் பிறத்தலுந் தவிர்த்து" என்னுந் திருப்பதிகம்பாடித் துதித்து அங்கிருந்து புறப்பட்டுத் திருக்கோலக்கா முதலிய சிவஸ்தலங்களை வணங்கிக்கொண்டு திருவாரூர்க்கெழுந்தருளி ஆலயத்துட்சென்று வன்மீகநாதரை வணங்கிப் பேரின்பக்கடலுள் மூழ்கித் திருப்பதிகம் பாடித் துதித்துநின்றார். அப்பொழுது சுந்தரமூர்த்தி நாயனார் கேட்கும்படி தியாகப்பெருமான் திருவருளால் "நாம்முனக்குத் தோழரானோம், முன்னே நாமுன்னை பாட்கொ

ண்ட விவாக காலத்தில் நீ கொண்டிருந்த மணக்கோலத்தை என்றும் பூண்டு விளையாடுவாயாக" என்று ஓர் அசரீரி வாக்கு எழுந்தது. அதுகேட்ட சுந்தரமூர்த்தி நாயனார் ஆனந்தபரவசராய்த்தொழுது துதித்து புறம்போந்து அன்றுதொட்டு அடியார் யாவரும் தம்பிரான் தோழர் என்று சொல்லிக்கொள்ளத் திருமணக்கோலம்பூண்டு நாள்தோறும் வன்மீகநாதரைத் தரிசனஞ் செய்துக்கொண்டு அங்கிருந்தனர்.

இதுநிற்க முன்னே திருக்கைலாயமலையில் இருக்கும் பார்வதியாருடைய பாங்கியரிருவரில் ஒருவராகிய கமலினி என்பவர் அத்திருவாரூரில் உருத்திர கணிகையா குலத்தில் பிறந்து பரவையார் என்னுந் திருப்பெயர்பெற்று மங்கைப் பருவமடைந்து அவரும் தோழிமாரோடு தினமும் ஆலயத்துட் சென்று சிவதரிசனஞ் செய்யப் போம்பொழுது அங்குப் பரிசனத்தோடு சிவதரிசனத்துக்கெழுந்தருளிய சுந்தரமூர்த்தி நாயனார் கண்டு ஆசைகொண்டு தாம் அவரை விவாகஞ் செய்துக்கொள்ளவேண்டுமென்று சுவாமி சந்நிதானத்தில் விண்ணப்பஞ் செய்தருளினர். சிவபெருமான் அவர் விண்ணப்பத்தைத் திருவுளங்கொண்டு பரவையாரைச் சுந்தரமூர்த்தி நாயனாருக்குத் திருமணஞ் செய்துகொடுக்கும்படி அடியார்களுக்குக் கட்டளையிட்டருள, அவர்களப்படியே சுந்தரமூர்த்தி நாயனாருக்குப் பரவையாரை விதிப்படி விவாகஞ் செய்துகொடுத்தார்கள். சுந்தரமூர்த்தி நாயனார் பரவையாரைக் கூடி வாழ்ந்திருக்கும்நாளில் ஒருநாள் சிவதரிசனத்துக் கெழுந்தருளும்போது தேவாசிரிய மண்டபத்தில் சேர்ந்திருந்த சிவனடியார்களைக்கண்டு அவர்கள்மேல் பத்திமிகுந்து 'நானிவர்களுக்கடியனாகுநாள் எந்நாள்' என்று கருதிச் சுவாமிதரிசனத்துக்குத் திருக்கோயிலுக்குட் சென்றனர். அவர் விருப்பத்தை நிறைவேற்றும்பொருட்டு தியாகப்பெருமான் அவர்க்குக் காட்சி கொடுத்தருளி 'நீ நம்மடியார்மேற் பதிகம் பாடுவாயாக' என்று திருவாய்மலர்ந்தருள, சுந்தரமூர்த்தி நாயனார் வணங்கிநின்று, சுவாமி அடியவர்கள் வரலாறு இன்னதென்றும் அவர்கள் தன்மை இன்னதென்றும் சிறிதும் அறியாதயான்

எப்படி பாடுவேன், அவர்களைப்பாடுஞ் சக்தியைத் தேவரீரே அடியேனுக்கு அருளிச்செய்யவேண்டும் என்று பிரார்த்தித்தார். சிவபெருமான் அதற்கிசைந்து தமது அருமைத்திருவாக்கால், "தில்லைவாழந்தணர்தம் மடியார்க்குமடியேன்" என்று அடி எடுத்துக் கொடுத்து மறைந்தருளினர். அதுகண்டு சுந்தரமூர்த்தி நாயனார் தேவாசிரிய மண்டபத்தை யடைந்து அவ்வடியவர் யாவர்க்குந் தனித்தனியே அடியேன் அடியேன் என்று திருத்தொண்டத்தொகையென்னுந் திருப்பதிகம் பாடி அவர்களை வணங்கினர்.

பின்பு சுந்தரமூர்த்தி நாயனார் சிலநாளங்கிருந்து அதற்குச் சமீபத்திலுள்ள திருக்கோளிலி என்னும் ஸ்தலத்துக்கெழுந்தருளி ஆலயத்துட்சென்று சிவபெருமானை வணங்கி "வேளாளராகிய குண்டையூர்க்கிழார் கொடுத்த நெற்குவியலைத் திருவாரூரிற் சேர்ப்பிக்கக் கிருபை செய்யவேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்ய, சிவாக்கினையாற் பூதங்கள் குண்டையூரிலிருந்த நென்மலையை எடுத்துச் சென்று பரவையார் திருமாளிகையிலும் மற்றிடங்களிலும் நிறைத்தன. சுந்தரமூர்த்தி நாயனார் மீண்டுந் திருவாரூர்க்குச்சென்று வன்மீகநாதரைத் தொழுது துதித்துப் பரவையார் திருமாளிகையிற் சேர்ந்து நிகழ்ந்த செய்தியைச் சொல்லிச் சிலநாளங்கிருந்து கோட்புலி நாயனார் வேண்டுகோளால் திருநாட்டியத்தான்குடிக்கெழுந்தருளியபொழுது அந்நாயனார் எதிர்கொண்டு வந்து வணங்கித் தம்முடைய வீட்டுக்கழைத்துப்போய் ஆசனத்திலிருத்தி அருச்சனை செய்து திருவமுது செய்வித்து வணங்கித் தமமுடைய புத்திரிகளாகிய சிங்கடி வனப்பகை என்னும் இருவரையும் கொண்டுவந்து வணங்குவித்துத் தாமும் வணங்கி 'அடியேன் பெற்ற இப்பெண்களை அடிமையாகக் கொண்டருளவேண்டும்' என்ன, சுந்தரமூர்த்தி நாயனார் அப்பெண்களைப் புத்திரிகளாகப் பாவித்தருளிச், சிவாலயத்துட் சென்று சிவபெருமானை வணங்கி "பூணாணவதோரரவம" என்னுந் திருப்பதிகம்பாடி அப்பதிகத்தின் திருக்கடைக்காப்பில் கோட்புலி நாயனாரைச் சிறப்பித்துச் சிங்கடியாருக்குத்

தம்மைப் பிதாவாகக் கருதினமையால் தம்மைச் 'சிங்கடியப்பன்' என்று வைத்தருளினர். பின்பு அவ்விடத்தினின்றும் எழுந்தருளித் திருவலி வலத்திற் சென்று சிவதரிசனஞ் செய்துகொண்டு மீண்டும் திருவாரூர்க்குச்சென்று வன்மீகநாதரை வணங்கிக்கொண்டு பரவையார் வீட்டிலிருந்தனர். இருக்குநாளில் பங்குனியுத்திரத்திருவிழா சமீபிக்கவும், பரவையார் திருவிழாச்செலவிற்குக் கொடுப்பதற்குப் பொருள் கொண்டுவரும்பொருட்டுத் திருப்புகலூரைச் சேர்ந்து ஆலயத்துட் சென்று சுவாமியை வணங்கிப் பதிகம்பாடிச் செங்கல்லைப் பொன்னாக்கித்தரப்பெற்று அங்கிருந்து புறப்பட்டுத் திருவாரூரையணைந்து பரவையார் வீட்டி லெழுந்தருளினர்.

அங்கிருந்து புறப்பட்டுத் திருநன்னிலம் முதலிய சிவஸ்தலங்களை வணங்கிக்கொண்டு திருமுதுகுன்றத்தைச் சேர்ந்து சிவதரிசனஞ்செய்து பதிகம் பாடியபோது சுவாமி பன்னீராயிரம் பொன் கொடுத்தருள, சுந்தரமூர்த்திநாயனார் வணங்கி நின்று, "தேவரீர் கொடுத்தருளிய பொன்னெல்லாம் திருவாரூரில் உள்ளவர் யாவரும் அதிசயிக்கும்படி அங்கே வரச்செய்யவேண்டும்" என்று பிரார்த்திக்க அப்பொழுது எம்பிரானுடைய திருவருளால் "சுந்தரமூர்த்தி? நீ இந்தப் பொன் எல்லாவற்றையும் மணிமுத்தாநதியிலிட்டுத் திருவாரூர் திருக்குளத்தி லெடுத்துக்கொள்" என்று அசரீரி வாக்கெழுந்தது. அது கேட்டுச் சுந்தரமூர்த்தி நாயனார் மச்சம்வெட்டி எடுத்துக்கொண்டு பொன்னனைத்தையும் மணிமுத்தா நதியிலிட்டு "அன்று என்னைத் தடுத்தாட்கொண்ட திருவருளை இதிலறிவேன்" என்று சிதம்பரத்துக் கெழுந்தருளக்கருதி வழிக்கொண்டு இடையிலுள்ள திருக்கடம்பூரை வணங்கித் தில்லையைச் சேர்ந்து நடேசரைத் தொழுது பதிகம்பாடித் அதித்து விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டுத் திருக்கருப் பறியலூர் முதலிய பல சிவஸ்தலங்களை வணங்கிக்கொண்டு மீண்டுந் திருவாரூர்க் கெழுந்தருளி வன்மீகநாதரைப் பணிந்து பரவையாருடன் மனமகிழ்ந்திருக்குநாளில் ஒருநாள் பரவையாரை நோக்கி "எனக்குத் திருமுதுகுன்றர் கொடுத்தருளிய பொன்னைனெல்லாம் மணிமுத்தாநதியி லிட்டுவந்தேன்,

இப்போது இத்தலத்தில் திருக்கோயிலுக்கு மேற்கிலுள்ள குளத்தில போய் அவரது திருவருளால் எடுத்துக்கொண்டு வருவோம வா" என்றனர், பரவையார் இதுஎன்ன அதிசயமென்று தமக்குள் தாமே எண்ணிக்கொண்டு கூடவர, அக்குளத்தருகிற்சென்று பரவையாரைக் கரைமேல் நிறுத்தித் தாம வன்மீகநாதரை வணங்கித் துதித்துக் குளத்திலிறங்கித் தடவிப்பார்க்கையில் பொன்னகப்படாமையால் மனம்வருந்தித் திருப்பதிகம் பாடிச் சிவபெருமான திருவருளால் வந்தெழுந்த பொற்றிரளை வாரியெடுத்து ஆட்களிற் சுமத்தி அனுப்பிவிட்டுத் தாம் திருக்கோயிலுட் சென்று வன்மீகநாதரைப் பணிந்து துதித்து வீட்டுக்குச்சென்று பரவையாரோடு மகிழ்ந்திருக்குநாளில் சிவஸ்தல யாத்திரை பண்ண விருப்பமுற்று திருநள்ளாறு முதலியவற்றை வணங்கிக்கொண்டு திருக்கருகாவூர்க்குச் சமீபத்தில வரும்பொழுது வன்றொண்டர் பசிதாக முதலியவற்றால் மெலிந்து வருகிறார் என்று சுவாமி திருவுளமிரங்கித் தண்ணீரும் கட்டமுதும் கொண்டுவந்து வெயில் வெப்பத்தைத் தணிக்கும்பொருட்டு அங்கு ஒருபக்கத்திற் ஓர் தண்ணீர்ப்பந்தரை யுண்டாக்கித் தாம் ஒரு பிராமணவேடம் பூண்டு களைத்துவருகின்ற சுந்தரமூர்த்தி நாயனாரை நோக்கி "நீர் மிகவும பசித்திருக்கின்றீர் என்னிடத்தில் பொதிசோறிருக்கின்றது, அதையுண்டு தண்ணீர் குடித்து இளைப்பாறும்" என்று சொல்லியருள, சுந்தரமூர்த்தி நாயனார் அதற்கிசைந்து கட்டமுதை வாங்கி அடியாரோடு அமுதுசெய்து தண்ணீர் அருந்தி பரிசனங்களோடு நித்திரைசெய்ய, ஐயர தண்ணீர்ப்பந்தரோடு மறைந்தருளினர். சுந்தரமூர்த்தி நாயனார் துயிலுணர்ந்து ஐயரைக் காணாமையால் ஆச்சரியமடைந்து "இத்தனையா மாற்றமறிந்திலன்" என்னுந் திருப்பதிகம் பாடித் திருக்கருகாவூரைச் சேர்ந்து சிவதரிசனஞ்செய்து அதை அகன்று வழியிடையிலுள்ள சிவஸ்தலங்களையெல்லாம வணங்கிக்கொண்டு திருக்கழுக்குன்றிற் போய்ச் சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு திருக்கச்சூருக் கெழுந்தருளி ஆலக்கோயிலுள்ளே சென்று சிவதரிசனஞ் செய்து மடத்தில் வந்து அமுதுசெய்யும் காலமாகியும் அமுதுசெய்து படைக்கும் பரிசனங்கள் வாராமையால் மிகுந்த பசியோடு

கதிப்புறத்திலிருந்தனர். அப்பொழுது சிவபெருமான் ஒரு பிராமணராகி அருகிற்சென்று "நீர் மிகப்பசியோடிருக்கின்றீர், நான் உமக்குப் பிராமணர் வீட்டில் அன்னம் யாசித்துக்கொண்டு வருகிறேன், நீர் அப்புறம் போகாமல் இங்கேயிரும்" என்று சொல்லிப் போய் அப்படியே யாசித்துக் கொண்டுவந்து கொடுக்க, சுந்தரமூர்த்தி நாயனார் தம்முடன் வந்த தொண்டர்களோடு உண்டு மகிழ்ந்தனர். உடனே அவ்வையர் மறைந்தருளினதைக் கண்டு அவர் சிவபெருமானேயென்று துணிந்து, இந்த நடுப்பகலில் திருவடி வருந்த அடியேன் பொருட்டு எழுந்தருளிய பெருங்கருணையை என்னென்று புகழ்வேன்" என்று மனமுருகித் தோத்திரஞ்செய்து, அவ்விடம் விட்டுப் புறப்பட்டுக் காஞ்சீபுரத்திற்சென்று திருவேகாம்பரத்தையடைந்து காமாட்சியம்மையாலருச்சிக்கப்பட்ட ஏகாம்பரநாதரை வணங்கி அங்கிருந்து புறப்பட்டு இடையிலுள்ள சிவஸ்தலங்களையெல்லாம் தொழுதுகொண்டு திருக்காளத்தி மலைக்குச் சென்று சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு அங்கிருந்து புறப்பட்டுத் திருவொற்றியூரிற் போய்ப் பதிகம் பாடிச் சுவாமிதரிசனம் பண்ணிக் கொண்டிருந்தனர்.

முன் திருக்கைலாசகிரியில் சுந்தரமூர்த்திநாயனார்மேல் ஆசை கொண்ட தோழிமாரிருவரில் ஒருவராகிய, "அனிந்திதையார்" என்பவர் ஞாயிறு என்னும் ஊரில் வேளாளரிற் சிறந்த ஞாயிறுகிழார் என்பவருக்குப் புத்திரியாராகத் திருவவதாரஞ் செய்து சங்கிலியாரென்னும் திருநாமம்பெற்றுத் திருக்கோயிலில் திருத்தொண்டு செய்து ஒழுகுநாளில் ஒருநாள் சுந்தரமூர்த்தி நாயனார் சங்கிலியாரைக்கண்டு ஆசைகொண்டு சுவாமி சந்நிதானத்திற் சென்று வணங்கி, சங்கிலியாரைத் தமக்குத் தந்தருளும்படி பிரார்த்தித்துக் கோயிலின் புறத்தில் ஓரிடத்தில் மனக்கவலையோடிருக்க அப்பொழுது சிவபெருமான் சுந்தரமூர்த்தி நாயனாருக்கெதிரிற் போய்ச் சங்கிலியை உனக்குத் தருகிறோம் நீ கொண்ட கவலையை ஒழிப்பாயாக" வென்று திருவாய்மலர்ந்தருளி உடனே கன்னிமாடத்திற் கண்வளரும் சங்கிலியார் சொப்பனத்திற் றோன்றிச் சங்கிலியே! நம்மிடத்து மிகுந்த பத்தியையுடைய சுந்தரன் தனக்கு மனைவியாக

உன்னைத் தரும்படி என்னைப் பிரார்த்தித்தான், நீ அதற்குடன்படவேண்டும், என்றார் அதற்குச் சங்கிலியார் "சுவாமி! அடியேன் தேவரீருடைய திருவாணையைச் சிரமேற்கொண்டேன், அவ்வாறே அவர்க்கே மனைவியாதற்குறியேன் ஆயின் அவர் திருவாரூரிலேயிருந்த சந்தோஷத்தோடு வசிக்கின்றவர் என்பதைத் தேவரீர் திருவுளங் கொண்டருளும்" என்று விண்ணப்பஞ் செய்தார். சுவாமி அதுகேட்டுப் "பெண்ணே சுந்தரன் உன்னைப்பிரியேன் என்று சபதஞ்செய்துதருவான்" என்று சொல்லிச் சுந்தரமூர்த்தி நாயனாரிடத்து வந்து "நான் உன்னைப் பிரியேன் என்று நீ அவளுக்குச் சபதஞ் செய்துகொடுத்தால்தான் அவள் உடன்படுவாள்" என்ன, "ஆயின் அவ்வாறே செய்துகொடுக்கிறேன் தேவரீர அப்பொழுது திருக்கோயிலிலிராது மகிழின்கீழ் எழுந்தருளியிருக்கவேண்டும்' என்றனர்.

அதற்குச் சிவபெருமான் இசைந்தருளி மீண்டுஞ் சங்கிலியாரிடத்திற் சென்று, சுந்தரன் உனக்குச் சபதஞ் செய்துகொடுக்க இசைந்திருக்கிறான்; அவன் ஆலயத்திற் சபதஞ் செய்யவந்தால் மகிழடியிற் செய்யும்படி கேள், என்று மறைந்தருளினார். பின்பு சங்கிலியார் திருப்பள்ளி எழுச்சிக்குப் பூமாலை தொடுக்க தோழியாரோடு திருக்கோயிலுக்குட் செல்ல, அவருக்குச் சபதஞ் செய்துகொடுக்க அதற்குமுன் வந்திருந்த சுந்தரமூர்த்தி நாயனார் அவர்க்கெதிரிற் போய்த் தமக்குச் சிவபிரான் திருவாய் மலர்ந்தருளியதைச் சொல்ல, அவர் அதற்கொன்றுஞ் சொல்லாமல நாணமுற்றுச் சேடியரோடு கோயிலுக்குட் சென்றார். 'சுந்தரமூர்த்தி நாயனார் பின்தொடர்ந்து போய்ப் பெண்ணே உன்னைப் பிரியேனென்று சபதஞ்செய்யச் சந்நிதானத்திற்கு வா 'என்ன' சங்கிலியார் கண்ட கனலைக் கேட்டறிந்த தோழிமார் 'இங்கே வேண்டுவதில்லை மகிழடியிற் சபதஞ் செய்துகொடும்' என்ன அவ்வாறே மகிழடியிற் போய்ச் சபதஞ் செய்துகொடுத்துச் சங்கிலியாரை விவாகஞ் செய்துகொண்டு அங்கு அவரோடு சிலநாள் கூடியிருந்து அதற்குமேல் திருவாரூர் வீதிவிடங்கப்பெருமானைத் தரிசனஞ் செய்யாமல் எத்

தனைநாள் நீங்கியிருப்பேன் என்று மனவருத்தமுற்று ஆலயத்திற் சென்று சுவாமி தரிசனஞ் செய்து திருவொற்றியூரெல்லையை நீங்கிய அளவில் இரண்டு கண்ணும் மறைந்தன, மறையவே சபதந்தவறினமையால் நேரிட்டதென்று வருந்தி "அழுக்கு மெய்கொடுன் றிருவடியடைந்தேன்" என்னுந் திருப்பதிகம் பாடியும் அத்துன்பம் நீங்கவில்லை; ஆயினும் திருவாரூர்க்குப் போகவேண்டுமென்னும் ஆசை மேன்மேலும் வளர்தலால் சிலர் முன்னே வழிகாட்டத் திருமுல்லைவாயிலுக்குச் சென்று சுவாமியை வணங்கி "விண்பணிந்தேத்தும் வேதியர்" என்னுந் திருப்பதிகம் பாடி, திருவெண்பாக்கத்தைச் சேர்ந்து சிவபெருமானைப் பணிந்து "திருந்தேயுள்ளீரே" என்று விண்ணப்பஞ்செய்ய, சுவாமி அவருக்கு ஊன்றுகோல கொடுத்தருளி "உளோமபோகீர்" என்றனர். பிறகு சுந்தரமூர்த்தி நாயனார் "பிழையுளன பொறுத்திடுவர்" என்னுந் திருப்பதிகம் பாடிக்கொண்டு காஞ்சீபுரத்துக் கெழுந்தருளி ஏகாம்பரநாதரை வணங்கி அவர் திருவருளால ஒரு கண் பெற்று வழிக்கிடையிலுள்ள சிவஸ்தலங்களையெல்லாம் வணங்கிக்கொண்டு திருவாரூர்க்குச் சென்று வன்மீகநாதரைத் தொழுது மற்றொரு கண்ணும் பெற்றுப் பரவையார் ஊடலை நீக்கும்பொருட்டு வீதிவிடங்கப் பெருமானை இரண்டுதரம் அவர்மனையில தூது அனுப்பி ஊடல் தணிந்தபின் அங்குச் சென்று அவரோடு கூடி நாள்தோறும் வன்மீகநாதரைத் தரிசனஞ் செய்துகொண்டிருந்தனர். இருக்கும்பொழுது சிவபெருமானைத் தூது அனுப்பிய செய்தியைத் திருப்பெருமங்கலத்திலிருக்கும் ஏயர்கோன் கலிக்காம நாயனார் கேள்வியுற்று அது தக்கது அன்றென்று தம்மேற் கோபங்கொண்டிருத்தலை அறிந்து சுவாமி சந்நிதானத்தில் விண்ணப்பஞ்செய்ய, சிவபெருமான் கலிக்காம நாயனுருக்குச் சூலைநோயை ஏவி அருளிச் சிற்போய்ச் 'சுந்தரன் வந்தாலன்றித் தீராது' என்ன, அவர் அதற்கு உடன்படாமையைக் கண்டும சுந்தரமூர்த்திநாயனாரிடத் தில் வந்து 'நீ போய்க் கலிக்காமனுடைய சூலையைத் தீர்ப்பாய்' என்ன, சுந்தரமூர்த்தி நாயனார் சூலைநோயைத் தீர்க்குமபொருட்டு வருஞ்செய்தி

கேட்டுக் கலிக்காம நாயனார் உடைவாளால் வயிற்றைப் பீறிக் கொண்டிறந்தனர். சுந்தரமூர்த்தி நாயனார் அங்குச் சென்று கலிக்காம நாயனார் இறந்திருத்தலை நோக்கி நானும் மரணமடைவேனென்று உடைவாளை யெடுத்தனர். உடனே சிவபெருமான் திருவருளால் கலிக்காம நாயனார் உயிர்த்தெழுந்து உடைவாளைப் பற்றிக்கொள்ள, அவர் விழுந்து நமஸ்கரித்தனர். கலிக்காம நாயனாரும் சுந்தரமூர்த்தி நாயனாரை வணங்கினர். பின்பு இருவரும் அன்போடு அளவளா யிருந்து மீண்டும் திருவாரூர்க்கெழுந்தருளி வன்மீகநாதனைத் தரிசனஞ் செய்துகொண்டிருந்தனர். அப்பொழுது சேரமான்பெருமாள் நாயனார் சிவபெருமானால் சுந்தரமூர்த்தி நாயனாருடைய மகிமையை அறிந்து அவரைத் தரிசிக்க விரும்பித் திருவாரூரையடைந்து அவரை வணங்க, சுந்தரமூர்த்தி நாயனார் சேரமான்பெருமாள் நாயனாரை வணங்கினர். பின்பு சுந்தரமூர்த்தி நாயனார் சேரமான்பெருமாள் நாயனாரை உடன்கொண்டு ஆலயத்திற் சென்று வன்மீகநாதரை வணங்கிப் பரவையார் வீட்டிற் கழைத்துக்கொண்டுபோய் விருந்து செய்து சிலநாளவரோடு அங்கிருந்து இன்னுமுள்ள சிவஸ்தலங்களைத் தரிசிக்க விரும்பிச் சேரமான்பெருமாள் நாயனாரும் கூடவரப் புறப்பட்டுச் சோழநாட்டிலுள்ள சிவஸ்தலங்களையெல்லாம் வணங்கிக்கொண்டு பாண்டியநாட்டிற் சென்று அங்குள்ள மதுரை முதலிய சிவஸ்தலங்களைத் தரிசனஞ் செய்துகொண்டு மீண்டும் திருவாரூர்க்குச் சென்று வன்மீகநாதனை வணங்கி அங்கிருந்து புறப்பட்டுச் சிவஸ்தலங்களை வணங்கிக்கொண்டுசெல்லுகையில் திருவையாற்றுக்குச் செல்லத் தடையாகக் காவேரி பெருகிவருவதைக் கண்டு சுந்தரமூர்த்தி நாயனார் பாடிய திருப்பதிகத்தால் அவ்வாறு வழிவிடப் பரிசனங்களோடு சென்று பஞ்சநதேசுரரைத் தரிசித்து வணங்கி மீளவும் அவ்வழியே வந்தபின்பு வெள்ளம் முன்போலப் பெருகியோடிற்று அவ்விடம்விட்டு நீங்கிக் கொங்குநாட்டிலுள்ள சிவஸ்தலங்களை வணங்கிக்கொண்டு மலைநாட்டிற் சென்றபோது சேரமான்பெருமாள் நாயனார் நகரமாகிய கொடுங்கோளூரிலிருப்பவர்கள் எதிர்கொண்டுவந்து வணங்க அவர்களுடன் திருவஞ்சைக் களமென்னுந் தலத்திற்

சென்று ஆலயத்தைப் பிரதக்ஷிணம் பண்ணித் திருப்பதிகம் பாடித் துதித்துச் சேரமான்பெருமாள் நாயனாரோடு அவர் திருமாளிகையிற் சென்று திருவமுது செய்து சிலநாளங்கிருந்து புறப்படும்போது சேரமான்பெருமாள் நாயனார் தம்முடைய பொக்கிஷத்திலுள்ள நிதியையெல்லாம் பல ஆட்களின்மேற் சுமத்தியனுப்பத் திருமுருகன் பூண்டி என்னுந் தலத்துக்குச் சமீபமாக வரும்போது சிவபெருமான் ஆஞ்ஞையால் பூதங்கள் வேடுருக்கொண்டுவந்து அப்பொருள்களையெல்லாம் பறித்துக்கொண்டுபோய்ச் சுவாமி சந்நிதானத்திற் சேர்த்தன. அதுகண்டு சுந்தரமூர்த்தி நாயனார் திருமுருகன் பூண்டியிலாலயத்துட் சென்று சுவாமியை வணங்கி 'கொடுகு வெஞ்சிலை வடுகவேடுவர்'' என்னுந் திருப்பதிகம் பாடியமாத்திரத்தில் கடவுள் திருவருளால் அந்தப் பொருளெல்லாம் கோபுரவாயிலில் குவித்திருக்கக் கண்டு சுவாமியை வணங்கி அவற்றை எடுத்துக்கொண்டு போம்படி ஆட்களை ஏவி அவ்விடத்தை நீங்கிக் கொங்குநாட்டைக் கடந்து திருவாரூரை அடைந்து அங்குச் சிவதரிசனஞ் செய்திருந்தனர்.

சிலநாள் சென்றபின் சேரமான்பெருமாள் நாயனாரைக் காண விரும்பி அங்கிருந்து புறப்பட்டுச் சோழதேசத்தைக்கடந்து கொங்குதேசத்தையடைந்து திருப்புக்கொளியூரிற் சென்று அங்கே ஒரு வீதியிலே இரண்டு வீடுகளில் ஒரு வீட்டில் மங்களவொலியும் மற்றொரு வீட்டில் அழுகையொலியுமாயிருக்கக் கண்டு அங்கிருந்த பிராமணர்களை நோக்கி 'இதென்ன' என, அவர்கள் வணங்கி 'ஒத்த வயதுள்ள இரண்டு புதல்வர்கள் குளத்தில் நீராடுகையில் ஒருவனை முதலை விழுங்கிற்று' மற்றொருவன் பிழைத்து வந்தான், இந்த வீட்டில் முழங்குமோசை பிழைத்துக்கொண்ட புதல்வனுக்கு உபநயனஞ் செய்யு மங்களவோசை அந்த வீட்டிலுண்டாமோசை இறந்த பிள்ளையைக் குறித்தழுகைக் குரலோசை; என்றனர். அதுகேட்ட சுந்தரமூர்த்தி நாயனார் திருவுளமிரங்கி அந்தக் குளக்கரையிற் சென்று அம்முதலை தான் விழுங்கிய புதல்வனை உமிழும்பொருட்டு ''உரைப்பாருரையுகந்து உள்கவல்லார்'' என்னுந் திருப்பதிகம் பாடியபோது அம்முதலை பிள்ளையைக் கரை

யில் உமிழ்ந்தது, தாய் ஓடி அப்பிள்ளையை யெடுத்துக்கொண்டு வந்து நாயகனோடு தானும் சுந்தரமூர்த்தி நாயனார் திருவடிகளில் விழுந்து நமஸ்காரஞ் செய்தாள். சுந்தரமூர்த்தி நாயனார் அப்புதல்வனை அழைத்துக்கொண்டு அவிநாசிக்குப் போய்ச் சிவதரிசனஞ் செய்து திருப்பதிகம் பாடித் திருமபி அப்புதல்வன் வீட்டிற் சென்று அவனுக்கு உபநயனஞ் செய்வித்து அதன்பின்பு மகோதையை யென்னுந் தலத்திற் சென்றிருந்தபொழுது நகரியில் ஒருநாள் சேரமான் பெருமாள் நாயனார் ஸ்நானஞ் செய்யும்போது சுந்தரமூர்த்தி நாயனார் மீண்டும் திருவஞ்சைக்களத்திற் சென்று அங்குள்ள ஆலயத்தை வலஞ்செய்து சந்நிதியில் விழுந்து நமஸ்கரித்து எழுந்து நின்று அழலிற்பட்ட மெழுகுபோல் உள்ளமுருக மயிர்க்கூச்செறியக் கண்ணீர் பெருக இரண்டு கைகளும் சிரசின்மேற் கூவியத் துதித்து அடியேனை மாயகாரியமாகிய இவ்வுலக வாழ்க்கையில் நின்று நீக்கித் தேவரீருடைய திருவடியிற் சேர்த்தருளவேண்டுமென்னுங் கருத்தோடு "தலைக்கு தலைமாலை" எனனுந் திருப்பதிகம் பாடியருள தயா சமுத்திரமாகிய சிவபெருமான் பிரமன் விஷ்ணு முதலிய தேவர்களை நோக்கி 'நீங்கள் சென்று நம்முடைய தோழனாகிய சுந்தரனை வெள்ளை யானையின்மே லேற்றிக்கொண்டுவாருங்கள்' என்று கட்டளையிட்டருள அவர்கள் அவ்வாறே சென்று சந்நிதானத்தினின்றும் எழுந்தருளுகிற சுந்தரமூர்த்திநாயனாரை எதிர்கொண்டு சிவபெருமானுடைய திருவாணையைத் தெரிவிக்க, சுவாமியை வணங்கி வெள்ளையானையின்மேலேறிச் செல்லுகையில் தம்முடைய தோழராகிய சேரமான்பெருமாள் நாயனாரை நினைத்துச் செல்ல, சேரமான்பெருமாள் நாயனார் அதையறிந்து ஓர் குதிரையின்மேலேறி அதிவிரைவாகத் திருவஞ்சைக்களத்துக்குப்போய்ச் சுந்தரமூர்த்தி நாயனார் வெள்ளையானையின்மேலேறி அந்தரமார்க்கமாய்ச் செலவதையுணர்ந்து தம்முடைய குதிரைகாதில் ஸ்ரீபஞ்சாட்சரத்தை ஓதியளவில் அக்குதிரை ஆகாயமார்க்கமாய்ப்போய்ச் சுந்தரமூர்த்தி நாயனாரேறிச்செல்லும் வெள்ளையானையை வலம் வந்து அதற்குமுன் சென்றது. சேரமான்பெருமாள் நாயனார் படைவீரர்கள் அவரைக் கண்ணுக்குத் தோன்றுமளவும் ஆகாயத்

திற் கண்டு பின் காணாமையால் மனவருத்தமுற்றுத் தம் தம் உடைவாளால் உடலைச் சேதித்து வீரயாக்கையைப் பெற்று அந்நாயனாருக்கு முற்பட்டு அவரைத் தரிசித்துக் கொண்டு சென்றனர். சேரமான்பெருமாள் நாயனார் முன்செல்லப் பின்சென்ற சுந்தரமூர்த்தி நாயனார் "தானெனைமுன்படைத்தான்" என்னுந் திருப்பதிகம் பாடிக்கொண்டு திருக்கைலாசமலையின் தெற்குவாயிலுக்கு முன் சென்றனர். அங்கு இருவரும் வாகனங்களினின் றிறங்கிச் சந்நிதானத்திற் சென்று கைலாசபதியை நமஸ்கரித்தெழுந்து அவருடைய திருவருளால் பழபடி ஆலாலசுந்தரராய் தாமுன் செய்து கொண்டிருந்த திருத்தொண்டு செய்பவரும் சேரமான் பெருமாள் நாயனார் தம் தொழில் செய்பவரும் ஆயினர்.

முன் பூமியின்கண் அவதரித்த பரவையாரும் சங்கிலியாரும் முன்போலக் கமலினியும் அனிந்திதையுமாகிப் பார்வதியாருக்குத் திருத்தொண்டு செய்திருந்தனர். சுந்தரமூர்த்தி நாயனார் தாம் வழியில் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங்களை வருணராஜனிடத்துக் கொடுத்தருள அவனதைத் திருவஞ்சைக்களத்திற் கொண்டுபோய் விளக்கினன்.

சரித்திர முற்றிற்று,

திருச்சிற்றம்பலம்.



## சுந்தரமூர்த்தி நாயனார்

பண்—பஞ்சமம் (எ—ம் திருமுறை)

திருச்சிற்றம்பலம்.

---

1 தானெனைமுன்படைத்தானதறிந்துதன்பொன்னடிக்கே
நானெனபாடலந்தோநாயினேனைப்பொருட்படுத்து
வானெனைவந்தெதிர்கொண்மத்தயானையருள்புரிந்து
ஊனுயிர்வேறுசெய்தானொடித்தான்மலையுத்தமனே.

## திருஞானசம்பந்த சுவாமிகள்.

சோழநாட்டில் சீர்காழியில் பிராமணகுலத்தில் சிவபாதவிருதயருக்கும் அவர் மனைவி பகவதியாருக்கும் திருவாதிரை நக்ஷத்திரத்தில் அவதரித்தனர். வயது 16 முத்தியடைந்தது வைகாசிமீ மூலநக்ஷத்திரம்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்.

திருமுனைப்பாடி நாட்டில் திருவாமூரில் வேளாளர் குலத்தில் புகழனாருக்கும் அவர் மனைவி மாதினியாருக்கும் அவதரித்தனர். வயது 81 முத்தியடைந்தது சித்திரைமீ சதயநக்ஷத்திரம்.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

திருமுனைப்பாடிநாட்டில் திருநாவலூரில் பிராமண குலத்தில் சடையனாருக்கும் அவர்மனைவிஇசைஞானியாருக்கும் அவதரித்தனர். வயது 18,முத்தியடைந்தது ஆடிமீ சுவாதிநக்ஷத்திரம்.

உ

திருச்சிற்றம்பலம்.

## தேவாரத் திருமுறையின் வரலாறு.

இப்பரதகண்டத்தில் பிறக்க முத்திதரும் தலமாகிய திருவாரூரின்கண் கல்வி, அறிவு, ஒழுக்கத்திலும், குருலிங்க சங்கமபத்தியிலுஞ் சிறந்த அபயகுலசேகர சோழமகாராஜன், பரமகருணாநிதியாகிய தியாகேசருடைய திருவருளினாலே வைதிக மார்க்கமுஞ், சைவமார்க்கமுந் தழைத்தோங்கச் செங்கோல் நடத்திவருங்காலத்தில் அவர் சபைக்கு எழுந்தருளிவருஞ் சிவனடி

யார்கள் மூவர் தேவாரத் திருப்பதிகங்களுள் ஒவ்வொன்று ஓதக்கேட்டு ஆனந்தபரவசராய் அத்தேவாரத் திருமுறையை எங்குந் தேடி அகப்படாமையால் மனத் துயரங்கொண்டிருந்தனர். அப்போது திருநாரையூரில் எழுந்தருளியிருக்கும் பொல்லாப்பிள்ளையாருக்கு பூஜை செய்யும் ஆதிசைவர் ஒருநாள் ஊருக்குப்போக அவர் புத்திரர் நம்பியாண்டார் நம்பி ஷை பிள்ளையாருக்கு அபிஷேக முதலியனவெல்லாஞ்செய்து நைவேத்தியத்தை அவர் திருமுன்வைத்து திருவமுது செய்யும்படி பிரார்த்தித்தார். திருவமுது செய்யாதிருப்பதைக்கண்டு மேற்படி நம்பியார் மனம் வெம்பித் தமது தலையைக் கல்லிலே மோதப் புகுந்தார். உடனே பிள்ளையார் 'நம்பீ, பொறு, பொறு' என்று தடுத்து நைவேத்திய முழுவதையுந் திருவமுது செய்தருளி அவருக்கு ஆசிரியராய் வேதமுதலிய கலைகளெல்லாவற்றையும் ஓதுவிக்க மேற்படி நம்பி மனமகிழ்ந்து நாடோறும் ஓதுவாராகி அப்பிள்ளையார்மேல் திருவிரட்டைமணிமாலை பாடியருளினார். அதுகண்ட சோழமகாராஜன் மனமகிழ்ந்து மேற்படி நம்பியை வணங்கி சமயகுரவர் மூவர்கள் அருளிச்செய்த தமிழ்வேதமாகிய தேவாரத் திருமுறையும் திருத்தொண்டர்களுடைய சரித்திரமும் பூவுலகத்தில் விளங்கவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தார். உடனே நம்பி திருவுளமகிழ்ந்து திருக்கோயிலினுள்ளே புகுந்து பிள்ளையாரை வணங்கி தேவாரத்திருமுறைகள் இருக்குமிடத்தையும் திருத்தொண்டர்களுடைய சரித்திரத்தையும் அடியேனுக்கு அருளிச்செய்தல்வேண்டுமென்று பிரார்த்திக்க பிள்ளையார் சிதம்பரத்தில் கனகசபைக்குப் புறக்கடையின் பக்கத்து அறையினுள்ளே தேவாரத்திருமுறைகள் இருக்கின்றனவென்று அருளிச்செய்து திருத்தொண்டர்களுடைய சரித்திரத்தையும் திருவாய் மலர்ந்தருளினர். மேற்படி நம்பி அதைச் சோழமகாராஜாவிடம் தெரிவித்து இருவரும் சிதம்பரமடைந்து சிவகங்கையில் ஸ்நானஞ்செய்து சபாநாயகரைத் தரிசித்து வணங்கினார்கள், ஷை நம்பி சபாநாயகர்மீது "கோயிற்றிருப்பண்ணியர் விருத்தம்" பாடியருளினார். பின்பு சோழமகாராஜன் தில்லைவாழந்தணர்களை நோக்கி மேற்படி பிள்ளையார் அருளிச் செய்ததை சொல்லி

தேவாரங்களை எடுத்தல்வேண்டுமென்றார். தில்லைவாழந்தணர்கள் அத்திருமுறைகளை வைத்தருளிய மூவரும் எழுந்தருளிவந்தால் அறை திறக்கும் என்றார்கள். சோழமகாராஜன் நடேசருக்கும் மூவருக்கும் அபிஷேகம் செய்வித்து மூவரைக் கனகசபையை வலஞ்செய்வித்துத் திருமுறைகள் இருக்கும் அறையின்னெதிரே கொணர்வித்து நிறுத்திக்கொண்டு தில்லைவாழந்தணர்களை நோக்கிச் சமயகுரவர்கள் மூவரும் எழுந்தருளி வந்துவிட்டார்கள். இனி அறை திறக்கலாமே என்றார். தில்லைவாழந்தணர்கள் சோழமகாராஜனுடைய புத்தியை வியந்து அறை திறக்க அநுமதி செய்தார்கள். சோழமகாராஜன் சமயகுரவர் மூவருடைய கையடையாளமிட்ட திருக்கதவைத் திறந்து திருமுறைகளை புறத்திலே கொணர்வித்து அவற்றுள் அளவில்லாத் திருவேடுகள் பழுதாயிருக்கக்கண்டு கண்ணீர் வாரச் சோகித்து நின்றார். அப்பொழுது எல்லோருங் கேட்கச் சிவபெருமானது திருவருளினாலே "தேவாரத் திருப்பதிகங்களிலே இக்காலத்துக்கு வேண்டுவனவற்றைமாத்திரம் வைத்துவிட்டு மற்றவைகளைச் செல்லுமண்மூடச் செய்தோம்" என்று ஓரசரீரிவாக்கு ஆகாயத்திலே தோன்றிற்று, அது கேட்டலும் சோழமகாராஜன் மனக்கவலைதீர்ந்து திருவருளை வியந்து ஆடிப்பாடி மேற்படி நம்பியை வணங்கி சுவாமி தேவாரமுதலிய அருட்பாக்களெல்லாவற்றையும் திருமுறையாக வகுத்தருளும் என்று பிரார்த்தித்தார். ஷை நம்பி அதற்குடன்பட்டு திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாரருளிச்செய்த தேவாரத் திருப்பதிகங்களை மூன்று திருமுறைகளாகவும், திருநாவுக்கரசு நாயனாரருளிச்செய்த தேவாரப்பதிகங்களை மூன்று திருமுறைகளாகவும், சுந்தரமூர்த்தி நாயனாரருளிச்செய்த தேவாரத் திருப்பதிகங்களை ஒரு திருமுறையாகவும் ஆக ஏழு திருமுறைகளாக வகுத்தருளி மாணிக்கவாசகசுவாமிகள் அருளிச்செய்த திருவாசகம் திருக்கோவையார் என்னுமிரண்டையும் எட்டாந் திருமுறையாகவும், திருமாளிகைத் தேவர் முதலிய நாயன்மார் ஒன்பதின்பர் அருளிச்செய்த திருவிசைப்பா முதலிய இருபத்தொன்பது திருப்பதிகங்களையும் ஒன்பதாந் திருமுறையாகவும், திருமூலநாயனார் அருளிச்செய்த திருமந்திரத்

தைப் பத்தாந் திருமுறையாகவும், திருவாலவாயுடையார் திருமுகப்பாசுரமுதலிய திவ்வியப் பிரபந்தங்களைப் பதினோராந் திருமுறையாகவும் வகுத்தருளினார். இங்ஙனம் திருமுறைவகுப்பு முற்றியபின்பு மேற்படி நம்பி தமக்கும் பிள்ளையார் உபதேசித்தருளிய திருத்தொண்டத்தொகையை முதனூலாகக்கொண்டு அறுபத்துமூன்று தனியடியாரும் ஒன்பது தொகையடியாருமாகிய திருத்தொண்டர்களுடைய திருத்தொண்டையும் அதனாலவர்கள் பெற்ற பேற்றையும் கலித்துறைத் திருவந்தாதியாக அருளிச் செய்தார். பின்பு திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்மீது ஆறு பிரபந்தங்களும் திருநாவுக்கரசு நாயனார் மீது திருவேகாதச மாலையும் ஆகத் தாம் பாடியருளிய பத்துத் திவ்வியப் பிரபந்தங்களையும் சோழமகாராஜனுடைய வேண்டுகோளின்படி பதினோராந் திருமுறையில் சேர்த்தருளினார். பின்பு நம்பியும் சோழமகாராஜாவுந் தேவாரப் பதிகங்களுக்குப் பண்ணடைவு பெறுமையாலே திருவெருக்கத் தம்புலியூரை யடைந்து திருக்கோயிலை வலஞ்செய்து சிவபெருமானை வணங்கி தேவாரப் பதிகங்களுக்குப் பண்ணடைவை அருளிச்செய்தல்வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அப்பொழுது எல்லோருங் கேட்க ஆகாயத்தில் "அன்பர்களே! திருநீலக்கண்டப்பெரும்பாணன் மரபிலே பிறந்த பெண்ணொருத்திக்கு பண்களை அருளிச்செய்தோம்" என்று ஓரசரீரிவாக்குத் தோன்றிற்று. உடனே நம்பியும் சோழமகாராஜாவும் அவளை அழைப்பித்து அவளிடத்தே பண்களைக் கேட்டு மனமகிழ்ந்தார்கள். அதன்பின் இவளைக் கனகசபைக்குமுன் கொண்டுபோய்த் தேவாரத்திருப்பதிகங்களுக்குப் பண்ணடைவு வகுக்கக்கடவீர்கள் என்று ஓரசரீரிவாக்கு எழுந்தது. அது கேட்டலும் மேற்படி நம்பியும் சோழமகாராஜாவும் அவ்வாறே அவளை அழைத்துக்கொண்டு சிதம்பரத்தையடைந்து கனகசபைக்குமுன் சென்று தேவாரத் திருப்பதிகங்களுக்குப் பண்ணடைவு வகுத்தார்கள்.

அபயகுலசேகர சோழமகாராஜாவானவர் பதினொரு திருமுறைகளையும் செப்பேடு செய்து தியாகேசர் சந்நிதியில் ஏற்றுவித்தனர். நம்பியாண்டார் நம்பியினாலும் திருமுறை கண்ட அபயகுலசேகர

சோழமகாராஜாவினாலும் சைவத் திருநெறித் தமிழ்த் திருமுறை பதினொன்றும் தமிழ் நாடெங்கும் பரந்தன. அதனால் உயர்வொப்பில்லாத சற்சமயமாகிய சைவசமயம் எங்குந் தழைத்தோங்கிற்று.

## ஆதியில் உள்ள தேவாரத் திருப்பதிகத் தொகை.

| | | |
|---|---|---|
| திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் | ... | 16000 |
| திருநாவுக்கரசு நாயனார் | ... ... | 49000 |
| சுந்தரமூர்த்திநாயனார் | ... ... | 37000 |
| ஆக | ... | 102000 |

## இப்போது உள்ள தேவாரத் திருப்பதிகத் தொகை.

திருஞானசம்பந்த ரருளிச் செய்த
திருப்பதிகம் பொதுவகையா லேழதாகு
மருண் ஞானத் தவமுனிவர் முப்பத்தேழா
மாரூரனம்பியொருநான்காமாக

வருஞானத் திருப்பதிக நாற்பத்தெட்டா
மற்றுமிந்தப் பதிகமொடு மறைதேவர் மூவர்
திருநாவான் மொழிந்த திருப்பதிகம் யாவு
மியம்பி லெழு நூற்றுத்தொண் ணூற்றாறன்றே.

| | ஸ்தலப் பதிகம். | பொதுப் பதிகம். | இரண்டின் றொகை. |
|---|---|---|---|
| திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் | 378 | 7 | 385 |
| திருநாவுக்கரசு நாயனார் ... | 274 | 37 | 311 |
| சுந்தரமூர்த்தி நாயனார் ... | 96 | 4 | 100 |
| | 748 | 48 | 796 |

இத்தேவாரத் திருப்பதிகங்கள் எழுநூற்றுத்தொண்ணூற்றாறும் அடங்கிய திருமுறை "அடங்கன்முறையெனப்படும்."

## நாடு முதலிய விவரம்.

| | நாடு. | நாடுகளின் முதலெழுத்து. | ஸ்தலங்கள். | பதிகங்கள். |
|---|---|---|---|---|
| 1. | சோழநாடு | சோ. | | |
| | காவேரிக்கு வடகரை | | 63 | 239 |
| | ஷை தென்கரை | | 127 | 316 |
| 2. | ஈழநாடு | ஈ. | 2 | 3 |
| 3. | பாண்டியநாடு | பா. | 14 | 34 |
| 4. | மலைநாடு | ம. | 1 | 1 |
| 5. | கொங்குநாடு | கொ. | 7 | 9 |
| 6. | நடுநாடு | ந. | 22 | 62 |
| 7. | தொண்டைநாடு | தொ. | 32 | 68 |
| 8. | துளுவநாடு | து. | 1 | 2 |
| 9. | வடநாடு | வ. | 5 | 14 |
| | | | 274 | 748 |
| | | | பொதுப்பதிகம் | 48 |
| | | | | 796 |

## நால்வர் திருநக்ஷத்திரம்.

பாடிய சம்பந்தர் வைகாசிமூலம் பயிலுமப்பர்
நீடிய சித்திரைமாதச் சதயநிறை வன்றொண்டர்
ஆடியிற் சோதிதிருவாதவூரர் நல்லாணிமகந்
தேடிய சேக்கிழார் வைகாசிப்பூசஞ் சிறந்தனரே.

## சமயகுரவர் நால்வர் வயது.

அப்பருக்கெண்பத்தொன்றருள்வாதவூரருக்குச்
செப்பியநா லெட்டினிற் றெய்வீக—மிப்புவியிற்
சுந்தரர்க்கு மூவாறு தென்ஞான சம்பந்தர்க்
கந்தம் பதினாறறி.

## சந்தானகுரவர்.

சித்திரையத்தமுமாபதியாவணித்திங்கடனில்
உத்திரஞ்சீர் கொண்மறை ஞானசம்பந்தரோதுகன்னிச்
சுத்திமெய்ப்பூரமருணந்தியைப்பசிச்சோதிதனில்
வித்தகமெய்கண்ட தேவர் சிவகதி மேவினரே.

## மூவர் வயதும், முத்தியடைந்த நக்ஷத்திரமும்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் வயது 16.
முத்தியடைந்தநாள் வைகாசிமீ மூலநக்ஷத்திரம்.
திருநாவுக்கரசு நாயனா வயது 81
முத்தியடைந்தநாள் சித்திரைமீ சதயநக்ஷத்திரம்.
சுந்தரமூர்த்திநாயனார் வயது 18
முத்தியடைந்தநாள் ஆடிமாதம் சுவாதிநக்ஷத்திரம்.

உ

திருச்சிற்றம்பலம்.

# திருப்பதிக் கோவை.

கோயிறிரு வேட்களநெல் வாயில்கழிப் பாலை
குலவுபெரு மணமயேந் திரப்பள்ளி முல்லை
வாயில்கலிக் காமூர்சாய்ப் காடுதிருப்பல்ல
வனீச்சரம்வெண் காடுவளர் திருக்காட்டுப்பள்ளி
தாயிலான் குருகாவூர் காழிகோலக்கா
தருக்கிளர்புள் ளிருக்குவே ளூர்கண்ணார் கோயின்
ஞாயிலியர் கடைமுடியே நின்றியூர் புன்கூர்
நாடியநீ டூரன்னி யூர்வேள்விக் குடியே. (1)

கருகெதிர்கொள் பாடிமணஞ் சேரிதிருக் குறுக்கை
கருப்பறிய லூர்கதியே காட்டுகுரக் குக்கா
மருவும்வாழ் கொளிபுத்தூர் மண்ணிப் படிக்கரையே
வளருமோ மாம்புலியூர் கானாட்டு முள்ளூர்
திருநாரை யூர்கடம்பூர் பந்தணைநல் லூர்பொன்
றிகழ்கஞ்ச னூர்கோடி காமங்கலக் குடியே
திருப்பனந்தா ளாப்பாடி சேய்ஞலூர் திருந்து
தேவன்குடி திருவியலூர் திருக்கொட்டை யூரே. (2)

இன்னம்பர் திருப்புறம்ப யம்விசய மங்கை
யியல்வைகா வூர்நல்வட குரங்காடு துறையே
பின்னமறு பழனமை யாறுநெய்த் தானம்
பெரும்புலியூர் மழபாடி திருப்பழுவூர் கானூர்
அன்னவன்பி லாலந்துறை மாந்துறைபாற் றுறையே
யானைக்கா பைஞ்ஞீலி பாச்சிலாச் சிராம
மன்னுமீங் கோய்மலையி னோடறுபான் மூன்றே
வடகரையிற் பதிதென்பால் வாட்போக்கியாமே. (3)

கடம்பந்துறை திருப்பராய்த்துறை கற்குடிமூக் கீச்சரங்
கருதுதிருச் சிராப்பள்ளி திருவெறும்பி யூரே
நெடுங்களமே லைக்காட்டுப் பள்ளிபாலம் பொழில்சீர்
நிகழ்திருப்பூந் துருத்திகண்டி யூர்சோற்றுத் துறைமா
லடும்வேதி குடிதென்குடித் திட்டைபுள்ள மங்கை
யணியார்சக் கரப்பள்ளியருங்கருகா வூரே
படர்பாலைத் துறைநலூர் திருவாவூ ரதனிற்
பசுபதீச் சரஞ்சத்தி முற்றம்பட் டீச்சரமே. (4)

ஆறைவட தளிதிருவ லஞ்சுழியே குடமூக்
கதனிற்கீழ்க் கோட்டங்கா ரோணநா கேச்சரங்
கூறுமிடை மருதுகுரங் காடுதுறை நீலக்
குடிவைகன் மாடக்கோயி னல்லங்கோ ழம்பம்

சாறமரா வடுதுறைதண் டுருத்திதிரு வழுந்தூர்
சகம்புகழ்மா யூரம்விளா நகர்பறிய லூரே
வீறுசெம்பொன் பள்ளிநனி பள்ளிவலம் புரமே
மியன்றலைச்சங் காடாக்கூர் விளங்குகட வூரே. (5)

திருக்கடவூர் மயானமொடு திருவேட்டக் குடியே
தெளிச்சேரி தருமபுர நள்ளாறு கோட்டா
றரைக்குமப்பர்ப் பெருந்திருக் கோயின்மா காள
முயர்மீயச் சூரிலங்கோ யிறிலதைப் பதிபூ
மருக்கமழ்பாம் புரநற்சிறு குடிவீழி மிழலை
வன்னியூர் கருவிலிமன் பேணுபெருந் துறையென்
கருத்துடைக்கு நறையூர்ச்சித் தீச்சரந் தோடரிசிற்
கரைப்புத்தூர் சிவபுரமுங் கலையநல்லூர் காணே. (6)

கருக்குடிவாஞ் சியந்திருநன் னிலத்துப்பெருங் கோயில்
கவின்கொண்டீச் சரம்பனையூர் விற்குடிதென் புகலூர்
இருக்கும்வர்த்த மானேச்சர மிராமனதீச் சரமே
யியல்பயற்றூர் செங்காட்டங் குடிமருக லிருளே
முருக்குதிருச் சாத்தமங்கை நாகைக்கா ரோண
முன்றிருச்சிக்க றிருக்கீழ் வேளூர்தே வூரே
அரிக்கரியான் பள்ளியின்முக் கூடறிரு வாரூ
ரரநெறிமூ லட்டானம் பரவையுண்மண் டளியே. (7)

மேலாகும் விளமர்கர வீரம்பெரு வேளூர்
மிளிர்தலையா லங்காடு குடவாயில் சேறை
நாலூர்ம யானங்கடு வாய்க்கரைப் புத்தூர்
நவிலுமிரும் பூளைதிரு வரதைப்பெரும் பாழி
மாலூரு மவளிவணல் லூர்பருதி நியமம்
வாழ்வெண்ணி பூவனூர் பாதாளீச் சரநீர்ச்
சேலூரு திருக்களர்சிற் றேமருசாத் தானந்
திருவிடும்பா வனத்தோடு சேர்ந்தகடிக் குளமே. (8)

தண்டலைநீ ணெறிகோட்டூர் வெண்டுறையோ டழகே
தருகொள்ளம் பூதூர்பே ரெயில்கொள்ளிக் காடு
கண்டெருதெங் கூர்நெல்லிக்கா நாட்டியத்தான் குடியே
காறாயில் கன்றாப்பூர் வலிவலங்கைச் சினந்தேதா
டண்டர்பிரான் கோளிலிதென் றிருவாய்மூர் மறைக்கா
டகத்தியான் பள்ளிகோடிக் குழகருந்தென் கரையில்
எண்டருநாற் றிருபத்தே ழிப்பாலீ ழத்தில்
இசைகோண மாமலைகே தீச்சுரமென் றிரண்டே. (9)

ஆலவா யாப்பனூர் பரங்குன்றே டகத்தோ
டருங்கொடுங்குன் றதிருப்புத் தூர்புனவா யிலிஞே
டேலுமிரா மேச்சுரமா டானைகா னப்பே
ரெழிற்றிருப்பூ வணஞ்சுழிய லின்புறுகுற் றாளம்
பாலலோ சனன்றிருநெல் வேலியொடு பாண்டி
பதினான்கு மலைநாட்டி லஞ்சைக்கள மொன்றே
சீலமிகு மவிநாசி திருமுருகன் பூண்டி
திருநணா கொடிமாடச் செங்குன்றூர் தானே. (10)

வெஞ்சமாக் கூடல்கொடு முடிகருவூர் கோங்கின்
மேவுமே ழாத்துறைவண் டேங்கானை மாடம்
எஞ்சலில் கூடலையாற் றூ ரெருக்கத்தம் புலியூ
ரிணையகலுந் தினைநகர்சோ புரமதிகை புகழே
விஞ்சுதிரு நாவலூர் முதுகுன்றந் திருநெல்
வெண்ணெய்திருக் கோவலூ ரறையணிநல் லூரே
மஞ்சுதிக ழிடையாறு வெண்ணெய் நல்லூர் துறையூர்
வடுகூர்வீ டேயருளுந் திருமாணி குழியே. (11)

தண்ணார்தண் டலைப்பாதி ரிப்புலியூர் முண்டீச்
சரம்புறவார் பனங்காட்டூர் திருவாமாத் தூரே
எண்ணாரண் ணாமலையு நடுநாட்டி லிருபத்
திரண்டாகு மிப்பாலே கம்பமேற் றளிவீண்

சண்மேனாக்கு மதிலோண காந்தன்றளி யனேக
தங்காவ தங்கச்சி நெறிக்காரைக் காடே
உண்ணாடு குரங்கணின்முட் டந்திருமா கறலோத்
தூர்வன்பார்த் தான்பனங்காட் டூர்வல்ல மாற்பேறே. (12)

ஊறலிலம் பயங்கோட்டூர் விற்கோல மாலங்கா
டுயர்பாசூர் வெண்பாக்கங் கள்ளில் காளத்தி
மாற்றிரு வொற்றியூர் வலிதாயம் பாலி
வடமுல்லை வாயில்வேற் காடுதிரு மயிலை
ஈற்றிரு வான்மியூர் கச்சூரா லக்கோயி
லிடைச்சுரங் கழுக்குன்ற மச்சிறுபாக் கம்மே
மாற்றிரு வக்கரையே யரசிலிதொல் விரும்பை [டே. (13)
மாகாளந் தொண்டைநன்னாட் டெண்ணின்முப்பா னிரண்

கோகரணந் துளுவதே யத்திலொன்றே யிப்பாற்
குலவுபருப் பதலை பருப்பதமம் பிகைதன்
பாகருறை யனேகதங்கா வதந்திருக்கே தாரம்
பசர்கொடித்தான் மலைவடக்கிற் பதியைந்தே யிவற்றோ
டாகவிரு நூற்றெழுபா னான்கென்பர் மூவ
ரருட்பதிக மிருக்குமே ரதிகமாம் வைப்புத்
தாகமுட னினைப்போர்க்குந் துதிப்போர்க்கும் வினைகள்
சாராவாம் பிறப்பகலுஞ் சத்தியமுத் தியுமே. (14)

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



## பாடல் பெற்றுள்ள ஸ்தலங்கள் 274-க்கு விவரம்.



### சோழநாட்டு ஸ்தலங்கள் 190-ல் காவேரியின் வடகரையிலுள்ள ஸ்தலங்கள் 63.

1. கோயில்-சிதம்பரம், 2. திருவேட்களம், 3 திருநெல்வாயில் சிவபுரி, 4. திருக்கழுப்பாலை, 5. திருநல்லூர்ப்பெருமணம்—ஆச்சாபுரம், 6. திருமயேந்திரப்பள்ளி, 7. திருத்தென் திருமுல்லைவாயில், 8. திருக்கலிக்காமூர்—அன்னப்பன்பேட்டை, 9. திருச்சாய்க்காடு சாயாவனம், 10 திருப்பல்லவனீச்சுரம்—காவிரிப்பூம்பட்டினம், 11. திருவெண்காடு, 12. கீழைத்திருக்காட்டுப்பள்ளி, 13. திருக்குருகாவூர், 14. சீகாழி, 15. திருக்கோலக்கா, 16. திருப்புள்ளிருக்குவேளூர்-வைத்தீசுரன்கோயில், 17. திருக்கண்ணார்கோயில் குறுமாணக்குடி, 18. திருக்கடைமுடி-கீழையூர், 19. திருநின்றியூர், 20. திருப்புன்கூர், 21. திருநீடூர், 22. திருஅன்னியூர், 23. திருவேள்விக்குடி, 24 திருஎதிர்கொள்பாடி—மேலைத்திருமணஞ்சேரி, 25. திருமணஞ்சேரி—கீழைத்திருமணஞ்சேரி, 26. திருக்குறுக்கை, 27. திருக்கருப்பறியலூர்-மேலைக்காழி, தலைஞாயிறு, 28. திருக்குரக்குக்கா, 29. திருவாளொளிபுற்றூர், 30. திருமண்ணிப்படிக்கரை இலுப்பைப்பட்டு, 31. திருவோமாம்புலியூர், 32. திருகானாட்டுமுள்ளூர், 33. திருநாரையூர், 34. திருக்கடம்பூர்-மேலைக்கடம்பூர், 35. திருப்பந்தணைநல்லூர், 36. திருக்கஞ்சனூர், 37. திருக்கோடிகா, 38. திருமங்கலக்குடி, 39. திருப்பனந்தாள், 40. திருஆப்பாடி, 41. திருச்சேய்ஞலூர், 42. திருந்துதேவன்குடி, 43. திருவியலூர், 44. திருக்கொட்டையூர், 45. திருஇன்னம்பர், 46. திருப்புறம்பயம், 47. திருவிசயமங்கை, 48. திருவைகாவூர், 49. திருவடகுரங்காடுதுறை, 50. திருப்பழனம், 51. திருவையாறு, 52. திருநெய்த்தானம், 53. திருப்பெரும்புலியூர், 54. திருமழபாடி, 55. திருப்பழுவூர், 56 திருக்கானூர், 57. திருஅன்பிலாலந்துறை திருமாலயந்துறை-அன்பில், 58. திருமாந்துறை, 59. திருப்பாற்

றுறை, 60. திருவானைக்கா-ஜம்புகேசுரம், 61. திருப்பைஞ்ஞீலி,
62. திருப்பாச்சிலாச்சிராமம்-திருவாசி, 63. திருஈங்கோய்மலை
திருவிங்கநாதமலை.



## காவேரிக்கு தென்கரையிலுள்ள ஸ்தலங்கள் 127.

1. திருவாட்போக்கி-ரத்நகிரி மாணிக்கமலை, 2. கடம்பந்துறை
கடம்பர்கோயில்-குழித்தலை, 3. திருப்பராய்த்துறை, 4. திருநற்
குடி-உய்யக்கொண்டான், 5. திருமூக்கீச்சுரம்-உறையூர், 6 திருச்
சிராப்பள்ளி, 7. திருஎறும்பியூர், 8. திருநெடுங்களம், 9. மேலைத்
திருக்காட்டுப்பள்ளி, 10. திருவாலம்பொழில், 11. திருப்பூந்துரு
த்தி, 12. திருக்கண்டியூர், 13. திருச்சோற்றுத்துறை, 14. திரு
வேதிக்குடி, 15. திருத்தென்குடித்திட்டை-திட்டை, 16. திருப்
புள்ளமங்கை, 17. திருச்சக்காப்பள்ளி-ஐயம்பேட்டை, 18. திருக்
கருகாவூர்-திருக்கரைவூர், 19. திருப்பாலைத்துறை, 20. திருநல்
லூர், 21. திருஆவூர், 22. திருச்சத்திமுத்தம், 23. திருப்பட்டீச்
சுரம், 24. திருப்பழையாறைவடதளி, 25. திருவலஞ்சுழி, 26 தி
ருக்குடமூக்கு-கும்பகோணம், 27. திருக்குடந்தைக்கீழ்க்கோட்
டம் கும்பகோணத்திலுள்ள நாகேசுரசுவாமி கோயில், 28. திருக்
குடந்தைக்காரோணம் கும்பகோணத்திலுள்ள காசிவிசுவநாதர்
கோயில், 29. திருநாகேச்சுரம், 30. திருவிடைமருதூர், 31. திரு
த்தென்குரங்காடுதுறை-ஆடுதுறை, 32. திருநீலக்குடி. தென்னல்
குடி, 33. திருவைகன்மாடக்கோயில், 34. திருநல்லம்-கோனேரி
ராயபுரம், 35. திருக்கோழம்பம், 36. திருவாவடுதுறை, 37. தி
ருத்துருத்தி-குற்றாலம், 38. திருவழுந்தூர், 39. திருமயிலாடு
துறை-மாயூரம், 40. திருவிளநகர், 41. திருப்பறியலூர்-பரசலூர்,
42. திருச்செம்பொன்பள்ளி, 43. திருநனிபள்ளி-புஞ்சை, 44. தி
ருவலம்புரம், 45. திருத்தலைச்சங்காடு, 46. திருஆக்கூர், 47. திருக்
கடவூர், 48. திருக்கடவூர்மயானம், 49. திருவேட்டக்குடி, 50. தி
ருத்தெளிச்சேரி, 51. திருத்தருமபுரம், 52. திருநள்ளாறு. 53. தி
ருக்கோட்டாறு, 54 திருஅம்பர்ப்பெருந்திருக்கோயில், 55. திரு

அம்பர்மாகாளம், 56. திருமீயச்சூர், 57. திருமீயச்சூர்-இளங்கோயில், 58. திருதிலதைப்பதி-மதிமுத்தம், 59. திருப்பாம்புரம், 60. திருச்சிறுகுடி, 61. திருவீழிமிழலை, 62. திருவன்னியூர், 63. திருக்கருவிலி, 64. திருப்பேணுபெருந்துறை-திருப்பந்துறை, 65. திருநறையூர்ச்சித்தீச்சரம், 66. திருஅரிசிற்கரைப்புத்தூர், 67. திருச்சிவபுரம், 68. திருக்கலயநல்லூர் சாக்கோட்டை, 69. திருக்கருக்குடி மருதாந்தநல்லூர், 70 திருவஞ்சியம், 71. திருநன்னிலம், 72. திருக்கொண்டீச்சரம், 73 திருப்பனையூர், 74. திருவிற்குடி, 75. திருப்புகலூர், 76. திருப்புகலூர்வர்த்தமானீச்சரம். 77. திருஇராமனதீச்சரம், 78. திருப்பயற்றூர், 79. திருச்செங்காட்டங்குடி, 80. திருமருகல், 81. திருச்சாத்தமங்கை, 82. திருநாகைக்காரோணம்-நாகப்பட்டணம், 83. திருச்சிக்கல், 84. திருக்கீழ்வேளூர், 85. திருத்தேவூர், 86. திருப்பள்ளியின்முக்கூடல்-அரியான்பள்ளி, 87. திருவாரூர், 88. திருவாரூர் அரநெறி, 89. திருவாரூர்ப்பரவையுண்மண்டளி, 90 திருவிளமர், 91. திருக்கரவீரம் கரையபுரம். 92. திருப்பெருவேளூர் காட்டூரையன்பேட்டை 93 திருத்தலையாலங்காடு, 94. திருக்குடவாயில், 95. திருச்சேறை, 96. திருநாலூர்மயானம், 97. திருக்கடுவாய்க்கரைப்புத்தூர், 98. திருஇரும்பூளை ஆலங்குடி, 99. திருஅரதைப்பெரும்பாழி அரித்துவாரமங்கலம், 100. திருஅவளிவணல்லூர், 101. திருபரிதிநியமம், 102. திருவெண்ணி, 103 திருப்பூவனூர், 104. திருப்பாதாளீச்சரம்-பாம்பணி, 105. திருக்களர், 106. திருச்சிற்றேமம், 107. திருவுசாத்தானம், 108. திருஇடும்பாவனம், 109. திருக்கடிக்குளம், 110. திருத்தண்டலைநீணெறி, 111. திருக்கோட்டூர், 112. திருவண்டுதுறை, 113. திருக்கொள்ளம்பூதூர், 114. திருப்பேரெயில், 115. திருக்கொள்ளிக்காடு, 116. திருத்தெங்கூர், 117. திருநெல்லிக்கா, 118. திருநாட்டியத்தான்குடி, 119. திருக்காறுபில்-திருக்காறைவாசல், 120. திருக்கன்றாப்பூர், 121. திருவலிவலம், 122. திருக்கைச்சினம், 123. திருக்கோளிலி, 124. திருவாய்மூர், 125. திருமறைக்காடு-வேதாரணியம், 126. திருஅகத்தியான்பள்ளி, 127. திருக்கோடி-குழகர்கோயில்.

## ஈழநாட்டு ஸ்தலங்கள் 2.



1. திருக்கோணமலை, 2. திருக்கேதீச்சரம்.



## பாண்டியநாட்டு ஸ்தலங்கள் 14.

1. திருஆலவாய்-மதுரை, 2. திருஆப்பனூர் திருஆப்புடையார்கோயில், 3. திருப்பரங்குன்றம், 4. திருவேடகம், 5. திருக்கொடுங்குன்றம்-பிரான்மலை, 6. திருப்புத்தூர், 7 திருப்புனவாயில, 8 திருஇராமேச்சுரம், 9. திருஆடானை, 10. திருக்கானப்பேர்-காளையார்கோயில், 11. திருப்பூவணம், 12. திருச்சுழியல், 13. திருக்குற்றாலம், 14. திருநெல்வேலி.



## சேரநாட்டு ஸ்தலம் 1.

1. திருஅஞ்சைக்களம்.



## கொங்குநாட்டு ஸ்தலங்கள் 7.

1. திருஅவிநாசி, 2. திருமுருகன்பூண்டி, 3. திருநணா-பவானி, 4. திருச்செங்குன்றூர்-திருச்செங்கோடு, 5. திருவெஞ்சமாக்கூடல், 6. திருப்பாண்டிக்கொடுமுடி-கொடுமுடி, 7. திருக்கருவூர்.



## நடுநாட்டு ஸ்தலங்கள் 22.

1. திருநெல்வாயில்அரத்துறை-திருவாத்துறை, 2. திருப்பெண்ணாகடம், 3. திருக்கூடலையாற்றூர், 4 திருஎருக்கத்தம்புலியூர்-இராஜேந்திரன்பட்டிணம், 5. திருத்திணைநகர், 6. திருச்சோபு

ரம்-தியாகவல்லி, 7. திருவதிகை, 8. திருநாவலூர், 9 குன்றம்-விருத்தாசலம், 10. திருநெல்வெண்ணெய், 11 வலூர், 12. திருஅறையணிநல்லூர், 13. திருஇடையா[illegible]டையற் வெண்ணெய்நல்லூர், 15. திருத்துறையூர், 16. திருவடுகூகவர்தா டார்கோயில், 17. திருமாணிகுழி, 18. திருப்பாதிருப்புலியூ 19. திருமுண்டீச்சுரம், 20. திருப்புறவார்பனங்காட்டூர் பனையபுரம், 21. திருவாமாத்தூர், 22. திருவண்ணாமலை.

## தொண்டைநாட்டு ஸ்தலங்கள் 32.

1. திருக்கச்சியேகம்பம்-காஞ்சீபுரம், 2. திருக்கச்சிமேற்றளி காஞ்சீபுரம், 3. திருஓணகாந்தன்தளி-காஞ்சீபுரம், 4. திருக்கச்சி அனேகதங்காபதம்-காஞ்சீபுரம், 5. திருக்கச்சிநெறிக்காரைக்காடு-காஞ்சீபுரம், 6. திருக்குரங்கணின்முட்டம், 7. திருமாகறல், 8. திருவோத்தூர், 9. திருப்பனங்காட்டூர்-திருப்பனங்காடு, 10. திருவல்லம், 11. திருமாற்பேறு, 12. திருவூறல்-தக்கோலம், 13. திருஇலம்பையங்கோட்டூர், 14. திருவிற்கோலம்-கூவம், 15. திருவாலங்காடு, 16. திருப்பாச்சூர், 17. திருவெண்பாக்கம், 18. திருக்கள்ளில், 19. திருக்காளத்தி, 20. திருவொற்றியூர், 21. திருவளிதாயம்-பாடி, 22. வடதிருமுல்லைவாயில், 23. திருவேற்காடு, 24. திருமயிலாப்பூர், 25. திருவான்மியூர், 26. திருக்கச்சூர், 27. திருவிடைச்சுரம், 28. திருக்கழுக்குன்றம், 29. திருஅச்சிறுபாக்கம், 30. திருவக்கரை, 31. திருஅரசிளி-ஒழுந்தியாப்பட்டு 32. திருஇரும்பைமாகாளம்,

## துளுவநாட்டு ஸ்தலம் 1.

1. கோகர்ணம்.

## வடநாட்டு ஸ்தலங்கள் 5.

1. ஸ்ரீபர்ப்பதம்-ஸ்ரீசைலம்-மல்லிகார்ச்சுனபுரம், 2. திருஇந்திரநீலபருப்பதம், 3. திருஅனேகதங்காபதம், 4. திருக்கேதாரம், 5. திருநொடித்தான்மலை-ஸ்ரீகைலாசம்,

274-ஸ்தலங்கள் முற்றிற்று.

1.



விநாயகர்.



சிவபிரான்.



சுப்பிரமணியர்.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

நேரிசை வெண்பா.

காடையற்
தவர்தா
நலாய

## விநாயகர்.

வானுலகு மண்ணுலகும் வாழமறை வாழப்
பான்மைதரு செய்யதமிழ் பார்மிசை விளங்க
ஞானமத வைந்துகர மூன்றுவிழி நால்வா
யானைமுக னைப்பரவி யஞ்சலிசெய் கிற்பாம்.

## நந்திதேவர்.

சித்தர்களிருடிகட்குச் சிரேஷ்டமா யுதித்து நித்தம்
சத்தியஞ் சாந்தமாதித் தனிப் பதினாறுபேறும்
அத்தனாலளிக்கப்பெற்றே யனுதினமவர்முன் றங்கும்
கத்தனை நந்திநானைக் கருத்தினி லிருத்தி வாழ்வாம்.

## சிவபெருமான்.

சீர்சான்றவேதச் செழும்பொருளே சிற்சொரூபப்
பேர்சான்ற வுண்மைப் பிரமமே—சேர்சான்றோர்
நாடும் பரசிவமே நாயேனுக் கன்புநின்பா
னீடும்படி நீ நிகழ்த்து.

## சத்தி.

ஈசனருளிச்சையறிவியற்றலின்ப மிலயமொடுபோகமதிகாரமாகித்
தேசருவமருவுருவமுருவமாகித் தேவியுமாய்த் தேசமொடுசெல்வ
மாகிப், பேசரியவுயிரையெல்லாம்பெற்றுநோக்கிப் பெரும்போகங்
கையளித்துப் பிறப்பினையுமொழித்திட், டாசகலுமடியருளத்துப்
பனுடனிருக்குமன்னையருட் பாதமலர் சென்னிவைப்பாம்.

## நடராஜர்.

ஐஞ்சதூர் மறையுந் தில்லைவாழந்தணரும்
1. இருமுனி புலிமுனியும் பதஞ்சலியுந் தொழுதேத்த
ஆரும் கடல்புடைசூழ் வையமெலா மீடேற
வாருமணிமன்று ளெடுத்த திருவடி போற்றி.

## சிவகாமசுந்தரி.

பரந்தெழுந்த சமண்முதலாம் பாசமயவிருணீங்கிச்
சிரந்தழுவுசைவநெறித் திருநீற்றினொளிவிளங்க
அரந்தைகெடப்புகலியர்கோ னமுதுசெயத் திருமுலைப்பால்
சுரந்தளித்த சிவகாம சுந்தரிபூங் கழல்போற்றி.

## தியாகராஜர்.

கார்பெருவுங் கருங்கூந்தற் செவ்வாய் வெண்ணகைப்பச்சைக் கன்னியோடுந், தார்கமழ்பூங்காந்தளந்தோட் குமரனொடு மணிச்சிங்காதனத்துமேவிச், சீர்புரவு வான்புலவர் நினைந்தன யாவையுநல்கிச் சிறப்பின்வைகும், வார்புனல்சூழ்வயற்கமலைத்தேவர்கள் சிந்தாமணியை மனத்துள்வைப்பாம்.

## சுப்பிரமணியர்.

வீறுடையாய் பேறுடையாய் வெற்புடையாய் விண்ணுடையாய்
நீறுடையாய் நேயமுடைநெஞ்சுடையாய்—கூறு
முதல்வாவோ ராறுமுகவா முக்கண்ணன்
புதல்வா நின்றாளம் புகல்.

## வீரபத்திரர்.

சந்திரனைத்தாளினாற் றேய்த்திட்டுச் சூரியனைத் தந்த மெல்லாஞ் சிந்தவே புடைததுமகக் கழலவியத்தக்கன்முடி தீயிற்போட்டு வந்தமுனிவோரையெல்லாம் யூபத்திற் சேர்த்தடித்து வாய்மடித்து முந்துநின்றுபின்னருளுமொருவீரபத்திரன்றாண் முடிமேல் வைப்பாம்

## அறுபத்துமூவர்.

தோடுநற வூற்றெழுகப் பசுந்தாது மலர்ந்துருக்கும் தொடையற் கொன்றை, நீடிய செஞ்சுடர்க்கற்றைச் சடைமுடியிலணிந்தவர்தா ணிழற்சே யெய்தும், பீடுபெறு தில்லைவா ழந்தணரே முதலாய பெரியோர்பாதம், கோடைநெடும் பலநீங்கப்புனைந்தவர் தாண் மலர் சிரமேற் கொண்டுவாழ்வாம்.

## அறுபத்துமூன்றுநாயன்மார்களுதயம்.

சித்திரையிலேவர் வைகாசியினிலேவர்
திகழானிதனிலேவ ராடியினிலேவர்
பொத்தியசிராவணியிலறுவர் புரட்டாசிபுகழ்
நால்வ ரைப்பசியிலறுவர் கார்த்திகையில்
வித்தாரமோரைவர் மார்கழியோரைவர்
விளங்கிய தை மதியெழுவர் மாசிதனி லேவர்
வைத்த திறற் பங்குனியி லேவ ரீராறு
மாதத்தி லிவ்வாறறுபான்மூவ ருதித்தனரே.

## 63-நாயன்மார்கள் திருநக்ஷத்திரங்கள்.

### சித்திரைமீ

பரணி சிறுத்தொண்ட நாயனார். ரோகணி மங்கயர்க்கரசு நாயனார். திருவாதிரை விறன்மிண்ட நாயனார். அஸ்தம் உமாபதி சிவாச்சாரியார். சித்திரை இசைஞானியார். சுவாதி திருக்குறிப்புத்தொண்ட நாயனார். சதயம் திருநாவுக்கரசு நாயனார்.

### வைகாசிமீ

பரணி கழற்சிங்க நாயனார். பூசம் நமிநந்தியடிகள் நாயனார். சேக்கிழார் நாயனார். ஆயிலியம் சோமாசிமாறர். மூலம் ஞானசம்பந்தர். முருகர். திருநீலகண்டயாழ்ப்பர். திருநீலநக்க நாயனார்.

### ஆனிமீ

மகம் மாணிக்கவாசகர். பூரம் அமர்நீதி நாயனார். ரேவதி கலிக்காம நாயனார்.

### ஆடிமீ

கார்த்திகை மூர்த்தி நாயனார். கார்த்திகை புகழ்ச்சோழ நாயனார். திருவாதிரை கூற்றுவ நாயனார். சித்திரை குரும்ப நாயனார். சுவாதி சுந்திரமூர்த்தி நாயனார். சுவாதி சேரமான் பெருமாள் நாயனார். கேட்டை கலிய நாயனார். கேட்டை கோட்புலி நாயனார்.

### ஆவணிமீ

பூசம் செருத்துணை நாயனார். ஆயிலியம் புகழ்த்துணை நாயனார். ஆயிலியம் அதிபத்த நாயனார். மகம் இளையான்குடிமாற நாயனார். உத்திரம் மறைஞானசம்பந்தர். அனுஷம் குலச்சிறைய நாயனார். மூலம் குங்கிலியக்கலைய நாயனார்.

### புரட்டாசிமீ

அஸ்வம் ருத்திரபசுபதி நாயனார். ரோகணம் திருநாளைப் போவார். பூசம் அருணந்திசிவாசாரியார். சதயம் நரசிங்கமுனைய நாயனார். உத்திராடம் ஏநாதி நாயனார்.

### அற்பிசிமீ

அஸ்வம் திருமூல நாயனார். பரணி நெடுமாற நாயனார். கார்த்திகை இடங்கழிய நாயனார். பூசம் சத்தி நாயனார். சுவாதி மெய்கண்டதேசர். அனுஷம் பூசலார் நாயனார். மூலம் ஐயடிகள் காடவர்.

### கார்த்திகைமீ

கார்த்திகை கணம்புல்ல நாயனார். உத்திரம் மெய்ப்பொருள் நாயனார். அஸ்தம் ஆநாய நாயனார். மூலம் மூர்க்க நாயனார். பூராடம் சிறப்புலி நாயனார்.

மார்கழிமீ

திருவாதிரை சடைய நாயனார். உத்திரம் இயற்பகை நாயனார். சுவாதி மானக்கஞ்சாற நாயனார். பூராடம் சாக்கிய நாயனார். ரேவதி வாயிலார் நாயனார்.

தைமீ

மிருகசீரிடம் கண்ணப்ப நாயனார். திருவாதிரை அரிவாட்டாய நாயனார். உத்திரம் சண்டேசுர நாயனார். விசாகம் திருநீலகண்ட நாயனார். சதயம் அப்பூதியடிகள் நாயனார். ரேவதி கலிக்கம்ப நாயனார்.

மாசிமீ

அஸ்தம் எறிபத்த நாயனார். பூராடம் காரி நாயனார். சதயம் கோட்செங்கண் நாயனார்.

பங்குனிமீ

ரோகணி சிவநேச நாயனார். திருவாதிரை கணநாத நாயனார். பூசம் முனையடுவா நாயனார். சுவாதி காரைக்காலம்மையார். சதயம் தண்டியடிகள் நாயனார்.

தட்சணாமூர்த்தி.

வேதமாகம மியாவும் விளம்புநின்
பாதமேயொருபற்றெனப் பற்றறும்
போதமேதெனும் புண்ணிய நால்வருக்
கோதுமூர்த்தியை யுள்ளத் திருத்துவாம்.

சண்டேசர்.

சிந்தைகூர்ந்து சிவனையருச்சிக்க
நிந்தைகூறுமந்நேரம் பொறுமலே
தந்தையாரிருதாளறவீசறும்
எந்தையார் திருத்தாள்பணிந்தேத்துவாம்.

## வயிரவர்.

நானிலத்திற் சிறந்திருக்கு நரர்களிலே முதல்வனரபதியேபோலும் மேனிலத்திற் பசுபதியே மேலோனென் றெடுத்துரைக்கும் வேத வாய்மை, தானிலத்திற்றடுத்தலாற் றலையரிந்து சதுர்முகன் றன் றருக்குத்தீர்த்தும், மானிலத்திற் காட்டிவரும் வயிரவனார் மலரடிகள் வணக்கஞ்செய்வாம்.

## நால்வர்துதி.

கற்பனையுலகமெல்லாங் கடந்தான் பதத்தின்மேவி
விற்பனவடியராக விளங்கு சம்பந்த ரப்பர்
பற்பலயேவலாகப் பதம்புரி சுந்தரேசர்
நற்பொருள்வாதவூரர் நறுமலர்ப்பதங்கள் போற்றி.

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

காழிநகர்ச் சிவபாதவிதயர் தந்த கவுணியர்கோ னழுதுமையாள் கருதியூட்டு, மேழிசையி னமுதுண்டு தாளம் வாங்கி யிலங்கியநித்திலச்சிவிகையிசையவேறி. வாழுமுபலகனகற்றிப்பந்தரேய்ந்து வளர்கிழிபெற்றரவின்விடமருகற்றீர்த்து, வீழிநகர்க்காசெய்தி மறைக்கவம்பிணித்துமீனவன்மேனியின்வெப்பு விடுவித்தாரே.

ஆரெரியிட்டெடுத்தவேடவைமுன்னேற்றி யாற்றிலிடு மேடெதிர்போயணையவேற்றி, யோரமணரொழியாமே கழுவிலேற்றி யோது திருப்பதிகத்தா லோடமேற்றிக், காருதவுமிடிபுத்தன் றலையிலேற்றிக் காயாதபனையின் முதுகனிகளேற்றி, யீரமிலாவங்கமுயிரெய்த வேற்றியிலங்குபெருமணத்தானையெய்தினாரே.

## திருநாவுக்கரசு நாயனார்.

போற்றுதிருவாமூரில் வேளாண்டொன்மைப் பொருவில் கொறுக்கையரதிபர் புகழனார்பான், மாற்றருமன்பினிற்றிலதவதியா மாதுவந்துதித்தபின்புமருணீக்கியாருந், தோற்றியமண்சமயமுறு துயரநீக்கத் துணைவருடாவந்த சூலைநோயாற், பாற்றருநீணிடவெய்திப் பாடலீபுரத்திற் பாழிபொழித்தானதிகைப்பதியில்வந்தார்.

வந்துதமக்கையாருளானீறுசாத்தி வண்டமிழா னோய்தீர்ந்து வாக் கின்மன்னாய், வெந்தபொடி விடம்வேழம் வேலைநீந்தி வியன்சூலங் கொடியிடபம் விளங்கச்சாத்தி, யந்தமிலப்பூதிமகனாவுமாற்றி யருட்காசுபெற்றுமறையடைப்புநீக்கிப், புந்திமகிழ்ந்தையாற்றிற் கயிலை கண்டு பூம்புகலூரான்பாதம் பொருந்தினாரே.

## சுந்தரமூர்த்தி நாயனார்.

தண்கயிலையதுநீங்கி நாவலூர்வாழ் சைவனார் சடையனார் தனைய னாய், மண்புகழவருட்டுறையா னோலைகாட்டி மணமவிலக்க வன் றொண்டாய திசைசேர்ந்து, நன்பினுட னைந்புரிய வாரூர் மேவி நலங்கிளரும் பரவைதோணயந்துவைகித், திலைத்தலவும் விறன்மிண் டர் திறல்கண்டேத்துந் திருத்தொண்டத் தொகையருளாற் செப் பினாரே.

செப்பலருங்குண்டையூர் நெல்லளைந்துத் திருப்புகலூர்ச்செங்கல் செழும்பொன்னாச்செய்து, தப்பினமுதுகுன்றார்தரும் பொருளாற் றிட்டுத் தடத்தெடுத்துச் சங்கிலிதோள் சார்ந்துநாத, னேப்பிற னித் தூதுவந்தாறுகீறியுறுமுதலை சிறு மதலையுமிழநல்கி, மெய்ப் பெரியகளிறேறியருளாற்சேர வேந்தருடன் வடகயிலை மேவினாரே

## மாணிக்கவாசக சுவாமிகள்.

அம்மறைநாதன் றோன்றி யருட்பெறக் குறித்திடாது
செம்மையற்றனவென் றுன்னிச்செழுமறைப்பிரமனான
விம்பிய வாசகத்தை விமலன்வந் தெழுதப்பெற்ற
பொம்மலர் வாதவூரர்ப் பொன்னடி வணங்குவாமால்.

## திருமால்.

அமலையாதியென் றெண்ணி யவன்பதம்
விமலமாகத் தொழுது விண்ணோருடன்
சமலநீங்கித்தனியமு தூண்டிவாழ்
கமலநாதன் கழலிணை போற்றுவாம்.

## இலக்குமி.

தண்கமலத் திருந் தீசனடிக் கமலமனக் கமலந்தன்னில் வைத்து வண்கமலக் கண்ணனை மணவாளனெனப் பெறுவான் மாதவஞ்செய் தொண்கமலாலயமெனும் பேரொளிபார்ந்த திருவாரூர்க்குகந்த ணிந்த, பெண்கமலங் கைக்கமலம் பிடித்தகொடி தனைத்தொழுது பெரிது வாழ்வாம்.

## சரஸ்வதி.

விரைப்போதன் முகப்போது பிரியாத தனிவண்டு வெண்பால் வேலைத், திரைப்போதுமமுதநிறத் தேனடைந்தோர் பவக்கடலைத் தீர்த்து முத்திக், கரைப்போதும்படியெடுக்குந் திருஞானத் தனிப் புணைவெண்கமலைசெந்தாள், மரைப்போது மனப்போது வைத்தி னிது முப்போதும் வாழ்த்தல் செய்வாம்.

## நவக்கிரகம் 9.

1 சூரியன் 2 சந்திரன் 3 செவ்வாய் 4 புதன் 5 குரு 6 சுக்கிரன் 7 சனி 8 ராகு 9 கேது.

வேயுறுதோளிபங்கன் விடமுண்டகண்டன் மிகநல்லவீணைதடவி மாசறுதிங்கள் கங்கைமுடிமேலணிந்தெனுளமே புகுந்தவதனால் ஞாயிறுதிங்கள் செவ்வாய்புதன் வியாழம்வெள்ளிசனிபாம்பிரண்டு மாசறுநல்லநல்ல வவைநல்லநல்ல வடியாரவர்க்குமிகவே. [முடனே

இரவிசங்கர னீசயு திங்கள்சே
யினியகந்தனி சைதிருமால்புதன்
குருவயன்சுரர் கோன்வெள்ளிசன்னிமன்
குலவிராகு குறிபத்திரகாளியா
மருவு சித்திர புத்திரன் கேதுவாம்
வானவர்முனி வோர்ராசி மற்றுநா
ளிமுதற்கிர கத்தாற்பரசிவ
னண்டபிண் ம் படைத்தளித்தாற்றுமே.

## சூரியபகவான் வணக்கம்.

காசினியிருளைநீக்குங் கதிரொளிபாதியெங்கும்
பூதலையுலகோர்போற்றப் புசிப்பொடு சுகத்தைநல்கும்
வாசியேழுடைய தேர்மேல் மகாகிரி வலமாய்வந்த
தேசிகாவெனைரட்சிப்பாய் செங்கதிரவனேபோற்றி.

## சந்திரபகவான் வணக்கம்.

அலைகடலதனினின்று மன்றுவந்துதித்தபோது
கலைவளர்திங்களாகிக் கடவுளரெவருமேத்துஞ்
சிலைநுதலுமையாள்பங்கன் செஞ்சடைப்பிறையாய்மேரு
மலைவலமாகவந்த மதியமே போற்றி போற்றி.

## செவ்வாய்பகவான் வணக்கம்,

வசனநற்றையாத்தோடு மன்னனர்சபையில்வார்த்தை
புசபலபராக்ரமங்கள் போர்தனில்வெற்றி யாண்மை
நிசமுடனவர்க்கு நீணிலந்தனிலளிக்குங்
குசனிலமகனெந்த செவ்வாய் குரைகழல் போற்றி போற்றி.

## புதபகவான் வணக்கம்.

மதனனூான் முதலா நான்கு மறைபுகல் கல்விஞானம்
விதமுடனவர்க்கு விஞ்சைகளருள்வோன்றிங்கள்
சுதன்கன பவுசுபாக்கியஞ் சுகம்பல கொடுக்கவல்லன்
புதன்கவிப்புலவன் சீர்மால் பொன்னடி போற்றி போற்றி.

## குருபகவான் வணக்கம்.

மறையிருக்கலைநூல்வல்லோன் வானவர்க்காசான்மந்திரி
நறைசொரிகற்பகப்பொன் னாட்டினுக்கதிபனாகி
நிறைதனஞ்சிவிகைமண்ணி னீடுபோகத்தைநல்கு
மிறைபவன் குருவியாழ மலர்ப்பாதம்போற்றி.

## சுக்கிரபகவான் வணக்கம்.

மூர்க்கவான் சூரவானவன் முதலினோர் குருவாம் வையம்
காக்கவான் மழைபெய்விக்குங் கவிமகன்கனமீவான்
தீர்க்கவானவர்கள் போற்றச் செத்தவர்தமையெழுப்பும்
பார்க்கவன் சுக்ராசாரி பாதபங்கயமேபோற்றி.

## சனிபகவான் வணக்கம்.

முனிவர்கடேவரேனும் மூர்த்திகண் முதலினோர்கள்
மனிதர்கள் சகலவாழ்வுன் மகிமையதல்லா துண்டோ
கனிவுளதெய்வநீயே கதிர்சேயோகாகமேறுஞ்
சனியனேயுனைத் துதிப்பேன் றமியனேற்கருள்செய்வாயே.

## இராகுபகவான் வணக்கம்.

வாகுசேர்நெடுமாறன் முன்னம் வானவர்க்கமுதமீயப்
போகுமக்காலையுன்றன் புணர்ப்பினாற் சிரமேயற்று
பாகுசேர்மொழியாள்பங்கன் பரன்கையில் மீண்டுபெற்ற
ராகுவேயுனைத்துதிப்பேன் ரட்சிப்பாய் ரட்சிப்பாயே.

## கேதுபகவான் வணக்கம்.

பொன்னையனுரத்திற்கொண்டோன் விலவர்தம்பொருட்டாலாழி
தன்னையேகடைந்தமுன்னந் தண்ணமுதளிக்கவுற்ற
பின்னைநின்காவாலுண்டபெட்பினிற்சிரம்பெற்றுய்ந்தா
யென்னையாள்கேதுவேயில்விருநிலம்போற்றத்தானே.

## சப்தபுரிக்ஷேத்திரம். 7

அயோத்தியா மதுராமாயா, காசி, காஞ்சி அவந்திகா
புரிதுவாராவதி சைவ, சப்தயிதே மோட்சதாயகா

அயோத்தி, வடமதுரை, மாயூரம், காசி, காஞ்சி, உச்சினி, துவாரகை.

## சப்தலிங்கலக்ஷணம். 7

1. சுயம்பு—சுயம்பு, 2 திவ்வியம்—பார்வதியால், 3 தெய்வீகம்—தேவர்களால், 4 ஆருஷம்—ரிஷிகளால், 5 ராட்க்ஷசம்—அசுரர்களால, 6 பாணம்—பாணுசூரனல், 7 மானுஷம்—மனிதர்களால்.

## திருக்கைலாயத்தில் சூதமுனிவரால் சொல்லப்பட்ட 1008-சிவக்ஷேத்திரத்தில் மகாமுக்கியமானஸ்தலங்கள்.

விருத்தம்.

அண்ணாமலை விருத்தாசலம் ஆரூர் ஆங்காசி
மண்ணுா மதுரை சீகாளத்தி சைலம்—பார்காஞ்சி
விண்ணோர்கோயில் ஆலங்காடு மருதூர் விடுகும்பம்
நண்ணோர் குடமூக்கு சேதுகேதாரங்கள் நன்சிவமே.

1. திருஅண்ணாமலை. 2 திருமுதுகுன்றம்—விருத்தாசலம். 3 திருவாரூர். 4 காசி. 5 திருஆலவாய்-மதுரை. 6 திருக்காளத்தி. 7 ஸ்ரீசைலம். 8 ஸ்ரீகாஞ்சி. 9 சிதம்பரம். 10 திருவாலங்காடு. 11 திருவிடமருதூர். 12 திருக்குடமூக்கு கும்பகோணம். 13 இராமேச்சுரம். 14 திருக்கேதாரம்.

## பஞ்சமூர்த்திகள். 5

| | | |
|---|---|---|
| 1. | பிருதிவிலிங்கம்—காஞ்சி. திருவாரூர். | பிர்மா |
| 2. | அப்புலிங்கம்—திருவானைக்கா | விஷ்ணு |
| 3. | தேய்வுலிங்கம்—திருவண்ணாமலை | ருத்ரன் |
| 4. | வாயுலிங்கம்—திருக்காளத்தி | மகேசுரன் |
| 5. | ஆகாயலிங்கம்—சிதம்பரம் | சதாசிவம் |

## சிவ ஆகமங்கள் 28.

1. காமிகம், 2. யோகசம், 3. சிந்தியம், 4. காரணம், 5. அசிதம், 6. தீப்தம், 7. சூக்குமம், 8. சகத்திரம்அஞ்சுமான், 9. சுப்பிரபேதம், 10. விசயம், 11. நிசுவாசம், 12. சுவாயம்புவம்,

13. அனலம், 14. வீரம், 15. இரௌரவம், 16. மகுடம், 17. விமலம், 18. சந்திரஞானம், 19. விம்பம், 20. பிரோற்கீதம், 21. இலளிதம், 22. சித்தம், 23. சாந்தானசருவோத்தமம், 24. சர்வோத்தம், 25. பாரமேச்சுரம், 26. கிரணம்பேதம், 27. வாதுளம்,

1 முதல் 10-வரையிலுள்ளது சதாசிவமூர்த்தியால் சொல்லப்பட்டது என்றும் 11-முதல் 28-வரையிலுள்ளது மகாருத்திரரால் சொல்லப்பட்டதென்றும் கூறியிருக்கின்றனர்.

## நவசக்தி 9.

வாமை—பிரதிவிரூபி—ஜேஷ்டை—ஜலரூபி
ரவுத்தரி—அக்கினிரூபி—காளி—வாயுரூபி
கலவிகரணி—வாயுவை அடக்குதல்
பலவிகரணி—பலத்தை கொடுத்தல்
பலப்பிரமதனி—பலத்தை அழித்தல்
சர்வபூததமணி—சர்வபூதங்களை சேட்டித்தல்
மனோன்மணி— மனோரூபி.

## கிரக தேவதைகள் 9.

சூரியன்-சிவன்-சந்திரன், ஈஸ்வரி, செவ்வாய்-சுப்பிரமணியர் புதன்-விஷ்ணு, குரு, பிர்மமா, சுக்கிரன், இந்திரன் சனி, இயமன், ராகு-காளி. கேது. சித்திரபுத்திரன்.

## ஜாதிகள் 5.

குரு, சுக்கிரன்—பிராமணர்
சூரியன், செவ்வாய்—க்ஷத்திரியர்
சந்திரன், புதன்—வைசியர்
சனி—சூத்திரர், ராகு, கேது—சங்கிரமஜாதியாம்.

## கிரக புஷ்பங்கள் 9.

சூரியன், செந்தாமரை—சந்திரன், வெள்ளலரி
செவ்வாய், சண்பகம்—புதன், வெண்காந்தள்

குரு, முல்லை—சுக்கிரன், வெண்தாமரை—சனி, கருங்குவளை இராகு, மந்தாரை—கேது, செவ்வல்லி.

## கிரகபாஷைகள் 5.

சூரியன், குரு, சுக்கிரன்—சமஸ்கிருதமும் தெலுங்கும்
சந்திரன்—தமிழ்
செவ்வாய்—மந்திரம்,
புதன்—சோதிடம்
சனி, ராகு, கேது—அன்னியபாஷை.

## சப்த தரிசனம் 7.

கோபுரம், சிகரம், துவாரம், பிராகாரம், பலிபீடம், அர்ச்சகர், சுவாமி.

## பிரதான மூர்த்திகள் 13.

சூரியன், நந்தி, துவாரபாலகர், சுவாமி, அம்மன், கணபதி, சுப்பிரமணியம், தக்ஷிணாமூர்த்தி, பிரம்மா, விஷ்ணு, சண்டேஸ்வரர், வயிரவர்-சாஸ்தா அல்லது அரிஹரபுத்திரர்.

## பரிவார தரிசனம் 12.

சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், நடேசர், பிட்க்ஷாண்டவர், சோமதாரி, கங்காளம், நவக்கிரகம், வீரபத்திரர், அறுபத்திமூவர், மகாலட்சுமி, சப்தமாதர் அல்லது கன்னிகை 7, லிங்கோற்பவம்.

சண்டேஸ்வரர், வைரவர்-சாஸ்தா இவர்களை கடைசியில் தரிசிக்கவேணும், பிறகு வேறு தரிசனம் செய்யலாகாது.

## பஞ்சகிருத்தியங்கள் 5.

சிருஷ்டி, திதி, சம்ஹாரம், திரோபாவம், அனுக்கிரகம்.

## தூபதீபகங்களாவன.

சந்தனமுஞ் சாம்பராணி தான்குங்கல் யம்பூரம்
நந்தலிலா லாம்ப லிலவங்கம்—முந்தக்
கறுப்புள்ள காலி கடுகுசெம்மரத்தூள்
சிறப்பிரவி முன்புகைதீபம்.

## ஐம்பூதங்களாவன.

வெண்பா.

பார்சேய்பிரதிவாம்பைங்கதிர்க்கோளப்பாகும்
சீர்கதிருஞ்சிவனுமேதமயேவாம்—தேர்ப்பாகன்
வாயுவாங்காரிதலைவாலரவாகாய்ந்தான்
அயிலிலையைம்பூதமாம்.

பிரதிவு, அப்பு, தேயு, வாயு, ஆகாயம்.

## பஞ்ச சத்திகள் 5.

பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி.

## இலிங்கங்கள் 9.

இஷ்டலிங்கம், பிராணலிங்கம், பாவலிங்கம், ஆசாரலிங்கம், குருலிங்கம், சிவலிங்கம், சரலிங்கம், பிரசாதலிங்கம்.

## பஞ்சகோஷம் 5.

அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம்.

## வேதங்கள் 4.

இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம்.

## சாஸ்திரங்கள் 6.

வேதாந்தம், வைசேஷிகம், பாட்டம், பிரபாகாரம், பூர்வமீம்சை, உத்தரமீம்சை.

## அஷ்டாங்கயோகங்கள் 8.

இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி.

## நடராஜர் அபிஷேகங்கள் 6.

வெண்பா.

சித்திரையி லோணமுதற் சீராணி யுத்திரமாம்
சத்துதனுவாதிரையுஞ் சார்வாகும்—பத்திவளர்
மாசிரியகன்னி மருவுசதுர்த்தசிமன்
றீசரபிஷேகத்தினயாம்.

| | | |
|---|---|---|
| சித்திரை | திருவோணம் | அபிஷேகம் |
| ஆனி | உத்திரம் | திருமஞ்சனம் |
| ஆவணி | சதுர்த்தசி | அபிஷேகம் |
| புரட்டாசி | சதுர்த்தசி | அபிஷேகம் |
| மார்கழி | திருவாதிரை | தெரிசனம் |
| மாசி | சதுர்த்தசி | அபிஷேகம் |

## முருகர் பிரதான ஸ்தலங்கள்.

திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவாவினன்குடி, கதிர்காமம், சுவாமிமலை, சென்னிமலை, திருப்போரூர், திருத்தணிகை, திருவேரகம், சோலைமலை, விராலிமலை

## அட்டவீரட்டங்கள் 8.

கட்டளைக்கலித்துறை.

பூமன்சிரங்கண்டி அந்தகன்கோவல்புரமதிகை
மாமன்பறியல்சலந்தரன்விற்குடிமாபழூர்
காமன்குறுக்கையமன்கடவூர் இந்தக்காசினியில்
தேமன்னுகொன்றையுந்திங்களுஞ்சூடிதன்சேவகமே,

| | | |
|---|---|---|
| 1. | திருக்கண்டியூர் | பிரமன் சிரங் கொய்தது |
| 2. | திருக்கோவலூர் | அந்தகாசுரசனைச்சங்கரித்தது |

| | | |
|---|---|---|
| 3. | திருஅதிகை | திரிபுரத்தை எரித்தது |
| 4. | திருப்பறியலூர் | தக்கன் சிரங் கொய்தது |
| 5. | திருவிற்குடி | சலந்தராசுரனைச் சங்கரித்தது |
| 6. | திருப்பழுவூர் | யானையை உரித்தது |
| 7. | திருக்குறுக்கை | காமனை எரித்தது |
| 8. | திருக்கடவூர் | யமனை உதைத்தது |

## சப்த ஸ்தான க்ஷேத்திரங்கள் 7.

1. திருவையாறு, 2. திருப்பழனம், 3. திருச்சோற்றுத்துறை, 4. திருவேதிக்குடி, 5. திருக்கண்டியூர், 6. திருப்பூந்துருத்தி, 7. திருநெய்த்தானம்.

## சப்தவிடங்கத்தலங்கள் 7.

நேரிசைவெண்பா.

சத்தவிடங்கத்தலங்கள்சாற்றுங்கால்நள்ளாறு
கந்தனூரூர்வாய்மூர் காறாயில்—நத்து
நாகைக்காரோணமுடன் நாடுதிருக்கோளிலியும்
ஈகைமறைக்காடாமிசை.

1. திருமால் பூசித்த சோமாஸ்கந்தரை இந்திரன் பெற்று பிறகு முசுகுந்தசக்கரவர்த்தியால் திருவாரூரில் பிரதிஷ்டை செய்யப்பட்டது. 2. திருநள்ளாறு, 3. திருநாகைக்காரோணம், 4. திருக்காறாயில், 5. திருக்கோளிலி, 6. திருவாய்மூர், 7. திருமறைக்காடு.

2 முதல் 7-வரையிலுள்ள ஸ்தலங்களில் இந்திரனால் கொடுக்கப்பட்ட உபயதியாகேசரை ஷை சக்கரவர்த்தியால் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

## பஞ்சபூத ஸ்தலங்கள் 5.

1. திருவாரூர், 2. திருவண்ணாமலை, 3. திருக்காளத்தி, 4. சிதம்பரம், 5. திருவானைக்கா.

## காசிக்குச்சமானமாகச் சொல்லப்படும் ஸ்தலங்கள் 6.

1. திருவெண்காடு, 2 திருவையாறு, 3. மாயூரம், 4. திருவிடைமருதூர், 5. திருச்சாயக்காடு, 6. திருவாஞ்சியம்.

## பஞ்ச சபைகள் 5.

| | | |
|---|---|---|
| 1. | திருவாலங்காடு | இரத்தினசபை |
| 2. | சிதம்பரம் | கனகசபை-பொன்னம்பலம். |
| 3. | மதுரை | ரஜதசபை-வெள்ளியம்பலம் |
| 4. | திருநெல்வேலி | தாமிரசபை |
| 5. | திருக்குற்றாலம் | சித்திரசபை |

## வியாக்கிரபாதருஷி பூஜித்த புலியூர் ஸ்தலங்கள் 5.

1. பெரும்பற்றப்புலியூர்—தென்புலியூர்-சிதம்பரம்
2. திருப்பாதிருப்புலியூர்—வடபுலியூர்
3. ஓமாம்புலியூர்
4. எருக்கத்தம்புலியூர்
5. பெரும்புலியூர்.

## ஆதிசேஷன் பூசித்த தலங்கள் 4.

1. திருநாகேச்சுரம், 2. திருநாகைக்காரோணம், 3. திருக்குடந்தைக்கீழ்கோட்டம் (நாகேஸ்வரசுவாமிகோயில்) 4. திருப்பாம்புரம்.

## தக்ஷண கைலாச க்ஷேத்திரங்கள் 3.

1. திருக்காளத்தி, 2. திருச்சிராப்பள்ளி, 3. திருக்கோணமலை.

## காயாரோகண ஸ்தலங்கள் 3.

1. கச்சிக்காரோணம், 2. குடந்தைக்காரோணம், 3. நாகைக்காரோணம்.

கொங்குசேர்குழ லாணிழல்வெண்ணகைக்
    கொவ்வைவாய்க்கொடி யேரிடையாளுமை
பங்குசேர்தரு மார்புடையார்
    படர்தீயுருவாய்
மங்குல்வண்ணனு மாமலரோனு
    மயங்கநீண்டவர் வான்மிசைவந்தெழு
பொங்குநீரின் மிதந்தநற்பூந்தராய்
    போற்றுதுமே. (9)

கலவமாமயி லாரியலாள்கரும்
    பன்னமென்மொழி யாள்கதிர் வாணுதற்
குலவுபூங்குழ லாளுமைகூறனை
    வேணுரையா
லலவைசொல்லுவார் தேரமணாதர்க
    ளாக்கினென்றனை நண்ணலுநல்குநற்
புலவர்தாம்புகழ் பொற்பதிப்பூந்தராய்
    போற்றுதுமே. (10)

தேம்பநுண்ணிடையாள் செழுஞ்சேலன
    கண்ணியோடண்ணல் சேர்விடந்தேனமர்
பூம்பொழிறிகழ் பொற்பதிப்பூந்தராய்
    போற்றுதுமென்
றோம்புதன்மையன் முத்தமிழ்நான்மறை
    ஞானசம்பந்த னொண்டமிழ்மாலைகொண்
டாம்படியிவை யேத்தவல்லார்க்
    கடையாவினையே. (11)

திருச்சிற்றம்பலம்.



### திருநாவுக்கரசு நாயனார்.

## ஸ்ரீ கயிலாயம். (21)

---

### திருத்தாண்டகம்.

அருச்சனை.

---

திருச்சிற்றம்பலம்.

வேற்றாகி விண்ணாகி நின்றாய்போற்றி
மீளாமேயாளென்னைக் கொண்டாய்போற்றி
யூற்றாகியுள்ளே யொளித்தாய்போற்றி
யோவாதசத்தத் தொலியேபோற்றி
யாற்றாகியங்கே யமர்ந்தாய்போற்றி
யாறங்கநால்வேத மானாய்போற்றி
காற்றாகியெங்குங் கலந்தாய்போற்றி
கயிலைமலையானே போற்றிபோற்றி. (1)

பிச்சாடல்பேயோ டுகந்தாய்போற்றி
பிறவியறுக்கும் பிரானேபோற்றி
வைச்சாடனன்று முகந்தாய்போற்றி
மருவியென்சிந்தை புகுந்தாய்போற்றி
பொய்ச்சார்புரமூன்று மெய்தாய்போற்றி
போகாதென்சிந்தை புகுந்தாய்போற்றி
கச்சாகநாக மசைத்தாய்போற்றி
கயிலைமலையானே போற்றிபோற்றி. (2)

மருவார்புரமூன்று மெய்தாய்போற்றி
மருவியென்சிந்தை புகுந்தாய்போற்றி
யுருவாகியென்னைப் படைத்தாய்போற்றி
யுள்ளாவிவாங்கி யொளித்தாய்போற்றி
திருவாகிநின்ற திறமேபோற்றி
தேசம்பரவப்படுவாய்போற்றி
கருவாகியோடு முகிலேபோற்றி
கயிலைமலையானே போற்றிபோற்றி (3)

வானத்தார்போற்று மருந்தேபோற்றி
வந்தென்றன்சிந்தை புகுந்தாய்போற்றி
யூனத்தைநீக்கு முடலேபோற்றி
யோங்கியழலாய் நிமிர்ந்தாய்போற்றி
தேனத்தைவார்த்த தெளிவேபோற்றி
தேவர்க்குந்தேவனாய் நின்றாய்போற்றி
கானத்தீயாட லுகந்தாய்போற்றி
கயிலைமலையானே போற்றிபோற்றி (4)

ஊராகிநின்ற வுலகேபோற்றி
யோங்கியழலாய் நிமிர்ந்தாய்போற்றி
போராகியெங்கும் பரந்தாய்போற்றி
போராதென்சிந்தை புகுந்தாய்போற்றி
நீராவியான நிழலேபோற்றி
நேர்வாரொருவரையு மில்லாய்போற்றி
காராகிநின்ற முகிலேபோற்றி
கயிலைமலையானே போற்றிபோற்றி (5)

சில்லுருவாய்ச்சென்று திரண்டாய்போற்றி
தேவரறியாத தேவேபோற்றி
புல்லுயிர்க்கும்பூட்சி புணர்த்தாய்போற்றி
போகாதென்சிந்தை புகுந்தாய்போற்றி
பல்லுயிராய்ப்பார்தோறு நின்றாய்போற்றி
பற்றிபுலகை விடாதாய்போற்றி
கல்லுயிராய்நின்ற கனலேபோற்றி
கயிலைமலையானே போற்றிபோற்றி.

பண்ணினிசையாகி நின்றாய்போற்றி
பாவிப்பார்பாவ மறுப்பாய்போற்றி
யெண்ணுமெழுத்துஞ் சொல்லானாய்போற்றி
யென்சிந்தைநீங்கா விறைவாபோற்றி
விண்ணுநிலனுந் தீயானாய்போற்றி
மேலவர்க்குமேலாகி நின்றாய்போற்றி
கண்ணின்மணியாகி நின்றாய்போற்றி
கயிலைமலையானே போற்றிபோற்றி. (7)

இமையாதுயிரா திருந்தாய்போற்றி
யென்சிந்தைநீங்கா விறைவாபோற்றி
யுமைபாகமாகத் தணைத்தாய்போற்றி
யூழியேழானவொருவாபோற்றி
யமையாவருநஞ் சமார்ந்தாய்போற்றி
யாதிபுராணனாய் நின்றாய்போற்றி
கமையாகிநின்ற கனலேபோற்றி
கயிலைமலையானே போற்றிபோற்றி. (8)

மூவாய்பிறவா யிறவாய்போற்றி
முன்னமேதோன்றி முளைத்தாய்போற்றி
தேவாதிதேவர் கொழுந்தே போற்றி
சென்றேறியெங்கும் பரந்தாய்போற்றி
யாவாவடியேனுக் கெல்லாம்போற்றி
யல்லலலிய வலநதேன்போற்றி
காவாய்கனகத் திரளேபோற்றி
கயிலைமலையானே போற்றிபோற்றி, (9)

நெடியவிசும்பொடு கண்ணேபோற்றி
நீளவகல முடையாய்போற்றி
யடியுமுடியு மிகலிப்போற்றி
யங்கொன்றறியாமை நின்றாய்போற்றி
கொடியவன்கூற்ற முதைத்தாய்போற்றி
கோயிலாவென்சிந்தை கொண்டாய்போற்றி
கடியவருமொடு மின்னேபோற்றி
கயிலைமலையானே போற்றிபோற்றி. (10)

உண்ணாதுறங்கா திருந்தாய்போற்றி
யோதாதேவேத முணர்ந்தாய்போற்றி
யெண்ணாவிலங்கைக்கோன் றன்னைப்போற்றி
யிறைவிரலால்வைத்துகந்த வீசாபோற்றி
பண்ணாரிசையின்சொற் கேட்டாய்போற்றி
பண்டேயென்சிந்தை புகுந்தாய்போற்றி

கண்ணாயுலகுக்கு நின்றாய்போற்றி
கயிலைமலையானே போற்றிபோற்றி. (11)

திருச்சிற்றம்பலம்.

சுந்தரமூர்த்தி நாயனார்

## திருக்கழுக்குன்றம். (22)

பண் — நட்டபாடை.

அருச்சனை.

திருச்சிற்றம்பலம்.

கொன்றுசெய்த கொடுமையாற்பலசொல்லவே
நின்றபாவ வினைகடாம்பல நீங்கவே
சென்றுசென்று தொழுமின் தேவர்பிரானிடங்
கன்றினோடுபிடி சூழ்தண் கழுக் குன்றமே. (1)

இறங்கிச்சென்று தொழுமினின்னிசைபாடியே
பிறங்குகொன்றைச் சடையனெங்கள் பிரானிட
நிறங்கள்செய்த மணிகணித்திலங் கொண்டிழி
கறங்குவெள்ளை வருவித்தண்கழுக்குன்றமே, (2)

நீளநின்று தொழுமினித்தனு நீதியா
லாளுநம்ம வினைகளலகி யழிந்திடக்
தோளுமெட்டு முடையுமாமணிச் சோதியான்
காளகண்ட னுறையுந்தண் கழுக் குன்றமே. (3)

வெளிறுதீரத் தொழுமின்வெண்பொடியாடியை
முளிறிலங்குமழு வாளன்முந்தி யுறைவிடம்
பிளிறுதீரப் பெருங்கைப்பெய்மத மூன்றுடைக்
களிறினோடுபிடி சூழ்ந்தண் கழுக்குன்றமே. (4)

புலைகடாத் தொழுமின்புன்சடைப் புண்ணிய
னிலைகொள்சூழப் படையனெந்தை பிரானிட
முலைகொளுண்டு கழுவிக்குட்டி யொடுமுகக்
கலைகள்பாயும் புறவிற்றண் கழுக் குன்றமே. (5)

மடமுடைய வடியார்தம்மனத் தேயுற
விடமுடைய மிடறன்விண்ணவர் மேலவன்
படமுடைய வரவன்றான் பயிலுமிடங்
கடமுடைய புறவிற்றண் கழுக்குன்றமே. (6)

ஊனமில்லா வடியார்தம்மனத் தேயுற
ஞானமூர்த்தி நட்டமாடி நவிலுமிடந்
தேனும்வண்டு மதுவுண்டின்னிசை பாடியே
கானமஞ்ஞை யுறையுந்தண் கழுக் குன்றமே. (7)

அந்தமில்லா வடியார்தம்மனத் தேயுற
வந்துநாளும் வணங்கிமாலொடு நான்முகன்
சிந்தைசெய்த மலர்கணித்தலுஞ் சேரவே
சந்தநாறும் புறவிற்றண்கழுக் குன்றமே. (8)

பிழைகடரத்தொழுமின் பின்சடைப்பிஞ்ஞகன்
குழைகொள்காதன் குழகன்றானுறையுமிட
மழைகள்சாலக் கலித்துநீடுயர்வேயவை
குழைகொண்முத்தஞ் சொரியுந்தண்கழுக்குன்றமே. (9)

பல்லில்வெள்ளைத் தலைபன்றான்பயி லும்மிடங்
கல்லிலவெள்ளை யருவித்தண்கழுக் குன்றினை
மல்லின்மல்குதிரடோளானவனப்பினாற்
சொல்லல்சொல்லித் தொழுவாரைத் தொழுமின்களே. (10)

திருச்சிற்றம்பலம்.

---

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

## கோளறு திருப்பதிகம். (23)

பண்—பியந்தைக்காந்தாரம்.

அடிமை.

---

திருச்சிற்றம்பலம்.

வேயுறுதோளிபங்கன் விடமுண்டகண்டன்
மிகநல்லவீணை தடவி
மாசறுதிங்கள்கங்கை முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்

றுஞ்சிருள்வன்னிகொன்றை முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
வெஞ்சினவவுணரோடு முருமிடியுமின்னு
மிகையானபூதமவையு
மஞ்சிடுநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்கு மிகவே. (5)

வாள்வரியதளதாடை வரிகோவணத்தர்
மடவாடனோடுமுடனாய்
நாண்மலர்வன்னிகொன்றை நதிசூடிவந்தெ
னுளமேபுகுந்தவதனாற்
கோளரியுழுவையோடு கொலையானைகேழல்
கொடுநாகமோடுகரடி
யாளரிநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்கு மிகவே. (6)

செப்பிளமுலைநன் மங்கையொருபாகமாக
விடையேறுசெல்வனடைவா
ரொப்பிளமதியுமப்பு முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
வெப்பொடுகுளிரும்வாத மிகையானபித்தும்
வினையானவந்துநலியா
வப்படிநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. (7)

வேள்படவிழிசெய்தன்று விடைமேலிருந்து
மடவாடனோடுமுடனாய்
வாண்மதிவன்னிகொன்றை மலர்சூடிவந்தெ
னுளமேபுகுந்தவதனா
லேழ்கடல்சூழிலங்கை யரையன்றனோடு
மிடரானவந்துநலியா
வாழ்கடனல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்கு மிகவே. (8)

பலபலவேடமாகும் பரனாரிபாகன்
பசுவேறுமெங்கள்பரமன்
சலமகளோடெருக்கு முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனால்
மலர்மிசையோனுமாலு மறையோடுதேவர்
வருகாலமானபலவு
மலைகடன்மேருநல்ல வலைவநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. (9)

கொத்தலர் குழலியோடு விசயற்குநல்கு
குணமாயவேடவிகிர்தன்
மத்தமுமதியுநாக முடிமேலணிந்தெ
னுளமேபுகுந்தவதனாற்
புத்தரொடமணைவாதி லழிவிக்குமண்ணல்
றிருநீறுசெம்மைதிடமே
யத்தகுநல்லநல்ல வவைநல்லநல்ல
வடியாரவர்க்குமிகவே. (10)

தேனமர்பொழில்கொளாலை விளைசெந்நெறுன்னி
வளர்செம்பொனெங்குநிகழ
நான்முகனாதியாய பிரமாபுரத்து
மறைஞானஞானமுனிவன்
றானுறுகோளுநாளு மடியாரைவந்து
நலியாதவண்ணமுரைசெய்
யானசொன்மாலையோது மடியார்கள்வானி
லரசாள்வராணைநமதே. (11)

திருச்சிற்றம்பலம்.

திருநாவுக்கரசு நாயனார்

## திருவாரூர்த் திருவிருத்தம். (21)

பண் - கொல்லி.

அடிமை.

திருச்சிற்றம்பலம்.

குலம்பலம்பாவரு குண்டர்முன்னேநமக்
குண்டுகொலோ
வலம்பலம்பாவரு தண்புனலாரூ
ரவிர்சடையான்
சிலம்பலம்பாவரு சேவடியான்றிரு
மூலட்டானம்
புலம்பலம்பாவரு தொண்டர்க்குத் தொண்டாம்
புண்ணியமே. (1)

மற்றிடமின்றி மனைதுறந்தல்லுணா
வல்லமணர்
சொற்றிடமென்று துரிசுபட்டேனுக்கு
முண்டுகொலோ
விற்றிடம்வாங்கி விசயனொடன்றொரு
வேடுவனாய்ப்
புற்றிடங்கொண்டான்றன் றொண்டர்க்குத் தொண்டாம்
புண்ணியமே. (2)

ஒருவடிவின்றிநின் றுண்குண்டர்முன்னமக்
குண்டுகொலோ
செருவடிவெஞ்சிலை யாற்புரமட்டவன்
சென்றடையாத்
திருவுடையான்றிரு வாரூர்த்திருமூலட்
டானன்செங்கட்
பொருவிடையானடித் தொண்டர்க்குத்தொண்டாம்
புண்ணியமே. (3)

மாசினையேறிய மேனியர் வன்கண்ணர்
மொண்ணரைவிட்
டீசனையேறினேன் தேசறுவேனுக்கு
முண்டுகொலோ
தேசனையாரூர்த் திருமூலட்டானனைச்
சிந்தைசெய்து
பூசனைப்பூசுரர் தொண்டர்க்குத்தொண்டராம்
புண்ணியமே. (4)

அருந்தும்பொழுதுரை யாடாவமணர்
திறமகன்று
வருந்திநினைந்தரனே யென்றுவாழ்த்துவேற்
குண்டுகொலோ
திருந்தியமாமதி லாரூர்திருமூலட்
டானனுக்குப்
பொருந்துந்தவமுடைத் தொண்டர்க்குத்தொண்டராம்
புண்ணியமே. (5)

வீங்கியதோள்களுந் தாள்களுமாய்நின்று
வெற்றரையே
மூங்கைகள்போலுண்ணு மூடர்முன்னேநமக்
குண்டுகொலோ
தேங்கமழ்சோலைத்தென் னாரூர்த்திருமூலட்
டானன்செய்ய
பூங்கழலானடித் தொண்டர்க்குத்தொண்டராம்
புண்ணியமே. (6)

பண்ணியசாத்திரப் பேய்கள்பறிதலைக்
குண்டரைவிட்
டெண்ணில்புகழீசன் றன்னருள்பெற்றேற்கு
முண்டுகொலோ
திண்ணியமாமதி லாரூர்திருமூலட்
டானனெங்கள்
புண்ணியன்றன்னடித் தொண்டர்க்குத்தொண்டராம்
புண்ணியமே. (7)

கரப்பர்கண்மெய்யைத் தலைபறிக்கச்சுக
   மென்னுங்குண்ட
ருரைப்பனகேளா திங் குய்யப்போந்தேனுக்கு
   முண்டுகொலோ
திருப்பொலியாரூர்த் திருமூலட்டானன்
   றிருக்கயிலைப்
பொருப்பன்விருப்பமர் தொண்டர்க்குத்தொண்டராம
   புண்ணியமே (8)

கையிலிடுசோறு நின்றுண்ணுங்காத
   லமணரைவிட்
டுய்யுநெறிகண்டிங் குய்யப்போந்தேனுக்கு
   முண்டுகொலோ
வையணிவயலாரூர்த்திருமூலட்
   டானனுக்குப்
பொய்யணிலாவடிந் தொண்டர்க்குத்தொண்டராம
   புண்ணியமே. (9)

குற்றமுடைய வமணர் திறமது
   வையகன்றிட்
டுற்றகருமஞ்செய் துய்யப்போந்தேனுக்கு
   முண்டுகொலோ
மற்பொ[illegible]கொளா னிராவண னன்றன்வலி
   [illegible]
பொ[illegible]டிந் தொண்டர்க்குத்தொண்டராம்
   [illegible]ணியமே. (10)

திருச்சிற்றம்பலம்.



சுந்தரமூர்த்திநாயனார்.

## திருத்தொண்டத்தொகை. (25)

பண்-கொல்லிக்கௌவாணம்.

அடிமை.

திருச்சிற்றம்பலம்.

தில்லைவாழந்தணர்த மடியார்க்குமடியேன்
திருநீலகண்டத்துக் குயவனார்க்கடியே
னில்லையேயென்னாத வியற்பகைக்குமடியே
னிளையான்றன்குடிமாற னடியார்க்குமடியேன்
வெல்லுமாமிகவல்ல மெய்ப்பொருளுக்கடியேன்
விரிபொழில்சூழ் குன்றையார் விறன்மிண்டர்க்கடியே
னல்லிமென் முல்லையந்தா ரமர்நீதிக்கடியே
னாரூர னாரூரி லம்மானுக்காளே. (1)

இலைமலிந்தவேனம்பி யெறிபத்தற்கடியே
னேனாதிநாதன்ற னடியார்க்குமடியேன்
கலைமலிந்தசீர்நம்பி கண்ணப்பற்கடியேன்
கடவூரிற்கலயன்ற னடியார்க்குமடியேன்
மலைமலிந்ததோள்வள்ளன் மானக்கஞ்சாற
னெஞ்சாதவாட்டாய னடியார்க்குமடியே
னலைமலிந்தபுனன்மங்கை யானாயற்கடியே
னாரூர னாரூரி லம்மானுக்காளே. (2)

மும்மையாலுலகாண்ட மூர்த்திக்குமடியேன்
முருகனுக்குமுருத்திர பசுபதிக்குமடியேன்
செம்மையேதிருநாளைப் போவார்க்குமடியேன்
றிருக்குறிப்புத்தொண்டர்தம் மடியார்க்குமடியேன்
மெய்ம்மையேதிருமேனி வழிபடாநிற்க
வெகுண்டெழுந்ததாதையை மழுவினாலெறிந்த
வம்மையானடிச்சண்டிப் பெருமானுக்கடியே
னாரூர னாரூரி லம்மானுக்காளே. (3)

திருநின்றசெம்மையே செம்மையாக்கொண்ட
திருநாவுக்கரையன்ற னடியார்க்குமடியேன்
பெருநம்பிகுலச்சிறைத னடியார்க்குமடியேன்
பெருமிழலைக்குறும்பற்கும் பேயார்க்குமடியே
னொருநம்பியப்பூதி னடியார்க்குமடியே
னொலிபுனல்சூழ்சாத்தமங்கை நீலநக்கற்கடியே
னருநம்பிநமிநந்தி யடியார்க்குமடியே
னாரூரனாரூரி லம்மானுக்காளே. (4)

வம்பறாவரிவண்டு மணநாறமலரு
மதுமலர்நற்கொன்றையா னடியலாற்பேணா
வெம்பிரான்சம்பந்த னடியார்க்குமடியே
னேயர்கோன்கலிக்காம னடியார்க்குமடியே
னம்பிரான்றிருமூல னடியார்க்குமடியே
னாட்டமிகுதண்டிக்கு மூர்க்கற்குமடியே
னம்பரான்சோமாசி மாறனுக்குமடியே
னாரூரனாரூரி லம்மானுக்காளே. (5)

வார்கொண்டவனமுலையா ளுமைபங்கன்கழலே
மறவாதுகல்லெறிந்த சாக்கியற்குமடியேன்
சீர்கொண்டபுகழ்வள்ளல் சிறப்புலிக்குமடியேன்
செங்காட்டங்குடிமேய சிறுத்தொண்டற்கடியேன்
கார்கொண்டகொடைக்கழறிற் றறிவாற்குமடியேன்
கடற்காழிக்கணநாத னடியார்க்குமடியே
னார்கொண்டவேற்கூற்றன் களந்தைக்கோனடியே
னாரூரனாரூரி லம்மானுக்காளே. (6)

பொய்யடிமையில்லாத புலவர்க்குமடியேன்
பொழிற்கருவூர்த்துஞ்சிய புகழ்ச்சோழற்கடியேன்
மெய்யடியானரசிங்க முனையரையற்கடியேன்
விரிதிரைசூழ்கடனாகை யதிபத்தர்கடியேன்
கைதடிந்தவரிசிலையான் கலிக்கம்பன்கலியன்
கழற்சத்திவரிஞ்சையர்கோ னடியார்க்குமடியே
னையடிகள்காடவர்கோ னடியார்க்குமடியே
னாரூரனாரூரி லம்மானுக்காளே. (7)

கறைக்கண்டன் கழலடியே காப்புக்கொண்டிருந்த
கணம்புல்லநம்பிக்குங் காரிக்குமடியே
னிறைக்கொண்ட சிந்தையா னெல்வேலிவென்ற
நின்றசீர்நெடுமாற னடியார்க்குமடியேன்
றுறைக்கொண்ட செம்பவள மிருளகற்றுஞ்சோதித்
தொன்மயிலைவாயிலா னடியார்க்குமடியே
னறைகொண்டவேனம்பி முனையடுவார்க்கடியே
னாரூரனாரூரி லம்மானுக்காளே. (8)

கடல்சூழ்ந்தவுலகெலாங் காக்கின்றபெருமான்
காடவர்கோன்கழற்சிங்க னடியார்க்குமடியேன்
மடல்சூழ்ந்ததார்நம்பி யிடங்கழிக்குந்தஞ்சை
மன்னவனாஞ்செருத்துணைதன் னடியார்க்குமடியேன்
புடைசூழ்ந்தபுலியதண்மே லரவாடவாடி
பொன்னடிக்கேமனம்வைத்த புகழ்த்துணைக்குமடியே
னடல்சூழ்ந்தவேனம்பி கோட்புலிக்குமடியே
னாரூரனாரூரி லம்மானுக்காளே. (9)

பத்தராய்ப்பணிவார்க ளெல்லார்க்குமடியேன்
பரமனையேபாடுவா ரடியார்க்குமடியேன்
சித்தத்தைச்சிவன்பாலே வைத்தார்க்குமடியேன்
திருவாரூர்ப்பிறந்தார்க ளெல்லார்க்குமடியேன்
முப்போதுந்திருமேனி தீண்டுவார்க்கடியேன்
முழுநீறுபூசிய முனிவர்க்குமடியே
னப்பாலுமடிச்சார்ந்த வடியார்க்குமடியே
னாரூரனாரூரி ளம்மானுக்காளே. (10)

மன்னியசீர்மறைநாவ னின்றவூர்ப்பூசல்
வரிவளையாண்மானிக்கு நேசனுக்குமடியேன்
றென்னவனாயுலகாண்ட செங்கணார்க்கடியேன்
திருநீலகண்டத்துப் பாணனார்க்கடியேன்

வென்னவனா மரனடியே யடைந்திட்ட சடைய
னிசைஞானி காதலன் றிருநாவலூர்க்கோ
னன்னவனா மாரூர னுரைத்தனகேட்டுவப்பா
ராரூரி லம்மானுக் கன்பரா வாரே. (11)

திருச்சிற்றம்பலம்.

---

அகத்திய மகாமுனிவர் திரட்டியருளிய

## தேவாரப் பதிகங்கள் 25

முற்றிற்று.

---

### திருநாவுக்கரசு நாயனார்.

திருநாவுக் கரசுவளர் திருத்தொண்டி னெறிவாழ
வருஞானத் தவமுனிவர் வாகீசர் வாய்மைதிகழ்
பெருநாமச் சீர்பரவ லுறுகின்றேன் பேருலகி
லொருநாவுக் குரைசெய்ய வொண்ணாமை யுணராதேன்.

### திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.

### தடுத்தாட்கொண்ட புராணம்.

கங்கையு மதியும் பாம்புங் கடுக்கையு முடிமேல் வைத்த
வங்கண ரோலை காட்டி யாண்டவர் தமக்கு நாடு
மங்கையர் வதன சீத மதியிரு மருங்கு மோடிச்
செங்கயல் குழைக ளோடுந் திருமுனைப் பாடி நாடு.

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 4 | 1 | எழும்பூரிலிருந்து புறப்படல். சிங்கப்பெருமாள் கோயில். | திருக்கச்சூர். | தொ. | விருந்திட்டயீசுரர். | அஞ்சனாட்சியம்மை. | அமுத தீர்த்தம். | |
| 5 | 1 | செங்கற்பட்டு. | திருவிடச்சுரம். | ,, | இடச்சுரநாதேச்சுரர். | இமையமடக் கொடியம்மை. | இந்திரதீர்த்தம். | |
| 6 | 2 | | திருக்கழுக்குன்றம் | ,, | வேதகிரீசுரர். | பெண்ணினல்லாளம்மை. | சங்குதீர்த்தம். | |
| | | செங்கற்பட்டு ஜங்ஷன் ஆரக்கோணமார்க்கம் | | | | | | |
| 7 | 1 | காஞ்சீபுரம் | திருக்கச்சி ஓணகாந்தன் தளி. | ,, | ஓணகாந்தேசுரர். | காமாக்ஷியம்மை. | விஷ்ணுதீர்த்தம். | |
| 8 | 2 | | திருவோத்தூர். | ,, | வேதநாதேசுரர். | இளமுலை நாயகி. | வேததீர்த்தம். | |
| 9 | 3 | | திருக்கச்சி அனேகதங்காபதம் | ,, | அநேகதங்காபதேசுரர். | காமாக்ஷியம்மை. | காமிதாயதீர்த்தம். | |
| 10 | 4 | | திருக்கச்சி ஏகம்பம். | ,, | ஏகாம்பர நாதர். | காமாக்ஷியம்மை. | கம்பாநதி. | மாவிருக்ஷம் |
| 11 | 5 | | திருக்குரங்கணில் முட்டம் | ,, | வாலீசுரர். | இறையார் வளையம்மை. | வாலிதீர்த்தம் | |
| 12 | 6 | | திருக்கச்சிநெறிக் காரைக்காடு. | ,, | காரைத்திருநாதேசுரர். | காமாக்ஷியம்மை. | சத்தியதீர்த்தம் | |
| 13 | 7 | | திருக்கச்சிமேற்றளி. | ,, | திருமேற்றளிநாதர் | காமாக்ஷியம்மை | விஷ்ணுதீர்த்தம் | புரசவிருக்ஷ |
| 14 | 3 | | திருவன்பார்த்தான் பனங்காட்டூர். | ,, | பனங்காட்டீசுரர். | அமிர்தவல்லியம்மை. | அமிர்ததீர்த்தம் | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 15 | 9 | | திருமாகறல். | தொ. | அடைக்கலங்காத்தநாதேசுரர். | புவனநாயகி. | அடைக்கல தீர்த்தம் | |
| 16 | 10 | | திருமாற்பேறு | ,, | மால்வணங்கீசுரர். | கருணைநாயகி. | விஷ்ணுதீர்த்தம் | |
| | | செங்கல்பட்டு ஜங்ஷன் தூத்துகுடி மார்க்கம். | | | | | | |
| 17 | 1 | அச்சிறுபாக்கம் | அச்சிறுபாக்கம் | ,, | பாக்கபுரீசர் | சுந்தரநாயகி | [illegible]தீர்த்தம் | கொன்றை விருக்ஷம் வன்னி விருக்ஷம் |
| 18 | 1 | விழுப்புரம் | திருஆமத்தூர் | ந. | அபிராமேசுரர் | முத்தாம்பிகையம்மை | பசுந்தீர்த்தம் | |
| 19 | 2 | | திருவக்கரை | தொ | சந்திரசேகரேசுரர் | [illegible]வடிவாம்பிகை | வக்கிரதீர்த்தம் | |
| 20 | 3 | | திருப்பறவாப்பனங்காட்டூர் | ,, | பனங்காட்டீசுரர் | அமிர்தவல்லியம்மை | அமிர்ததீர்த்தம் | |
| | | விழுப்புரம் ஜங்ஷன் புதுச்சேரி மார்க்கம். | | | | | | |
| 21 | 1 | கண்டமங்கலம் | திருவடுகூர் | ந. | வடுகேசுரர் | வடுவகிர்க்கண்ணம்மை | பெண்ணைநதி | |
| 22 | 1 | புதுச்சேரி | திருஅரசிலி | தொ. | அரசிலிநாதர் | பெரியநாயகி | அரசடி தீர்த்தம் | |
| 23 | 2 | | திருஇரும்பைமாகாளம் | ,, | மாகாளேஸ்வரர் | குயில்மொழியம்மை | மாகாளதீர்த்தம் | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | விழுப்புரம் ஜங்ஷன் காட்டுப்பாடி மார்க்கம். | | | | | | |
| 24 | 1 | திருக்கோவலூர் | திருக்கோவலூர் | ந. | வீரட்டேசுரர் | சிவானந்தவல்லி | பெண்ணைநதி | |
| 25 | 2 | | திரு அறையணிநல்லூர் | ,, | அரையணிநாதேசுரர் | அருள்நாயகி | பெண்ணைநதி | |
| 26 | 3 | | திருஇடையாறு | ,, | இடையாற்றீசுரர் | சிற்றிடைநாயகி | பெண்ணைநதி | |
| 27 | 1 | திருவண்ணாமலை | திருவண்ணாமலை | ,, | அருணாசலேசுரர் | உண்ணாமுலையம்மை | பிரமதீர்த்தம் | |
| | | விழுப்புரம் ஜங்ஷன் தூத்துக்குடி மார்க்கம். | | | | | | |
| 28 | 1 | பண்ணுருட்டி. | திருவதிகை | ,, | வீரட்டேசுரர் | திரிபுரசுந்தரி | சக்கரதீர்த்தம் | சரக்கொன்றை விருக்ஷம் |
| 29 | 2 | | திருநெல்வெண்ணை | ,, | வெண்ணையப்பர் | நீலமலர்கண்ணம்மை | பெண்ணைநதி | |
| 30 | 3 | | திருவெண்ணைநல்லூர் | ,, | தடுத்தாட்கொண்டஈசுரர் | வேற்கண்ணியம்மை | பெண்ணைநதி | |
| 31 | 4 | | திருத்துறையூர் | ,, | பசுபதீசுரர் | பூங்கோதைநாயகி | பெண்ணைநதி | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 32 | 5 | | திருமுண்டீச்சுரம் | ந. | முண்டீசுரர் | கானார்குழலியம்மை | கண்ணுவ தீர்த்தம் | |
| 33 | 6 | | திருநாவலூர் | ,, | திருநாவலேசுரர் | சுந்தரநாயகியம்மை | சிவகங்கை | நாவல் விருக்ஷம் |
| 34 | 1 | திருப்பாபுலியூர் | திருப்பாதிருப்புலியூர் | ,, | தோன்றாத்துணையீசுரர் | பெரியநாயகியம்மை | கெடிலநதி | பாதிரி விருக்ஷம் |
| 35 | 2 | | திருமாணிக்குழி | ,, | மாணிக்கவரதேசுரர் | மாணிக்கவல்லியம்மை | பெண்ணைநதி | கொன்றை விருக்ஷம் |
| 36 | 1 | ஆலப்பாக்கம் | திருத்தினைநகர் | ,, | திருநீசுரர் | ஒப்பிலாநாயகி | மணிமுத்தாநதி | கொன்றை விருக்ஷம் |
| 37 | 2 | | திருச்சோழபுரம் | ,, | சோபுரநாதேசுரர் | சோபுரநாயகி | பாமதீர்த்தம் | |
| 33 | 1 | சிதம்பரம் | திருக்கோயில் | சோ. | சபாநாயகர் திருமூலநாதர் | சிவகாமியம்மை | சிவகங்கை-புலிமடு | திருப்புலீ ரதீத் |
| 39 | 2 | | திருஎருக்கத்தம்புலியூர் | ந. | நீலகண்டேசுரர் | நீலமலர்க்கண்ணம்மை | மணிமுத்தாநதி | வெள்ளெருக்கு விருக்ஷம் |
| 40 | 3 | | திருவேட்களம் | சோ. | பாசுபதேசுரர் | நல்லநாயகி | நாகதீர்த்தம் | |
| 41 | 4 | | திருக்கழிப்பாலை | ,, | பால்வண்ணநாதேசுரர் | வேதநாயகி | வான்மீகதீர்த்தம் | |
| 42 | 5 | | திருநறையூர் | ,, | சித்தநாதேசுரர் | அழகாம்பிகை | காருண்ணிய தீர்த்தம் | புன்னை விருக்ஷம் |
| 43 | 6 | | திருநெல்வாயல் | ,, | உச்சிநாதேசுரர் | கனகாம்பிகை | கனக தீர்த்தம் சிவபுரி | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 44 | 7 | | திருநெல்வாயிலரத்துறை | ந. | அரத்துறைநாதர் | ஆநந்தநாயகி | நெடிலநதி | |
| 45 | 8 | | திருப்பெண்ணாடகம் | ந | சுடர்க்கொழுந்தீசுரர் | கடந்தைநாயகி | நெடிலநதி தீர்த்தம் | |
| 46 | 9 | | திருக்காணாட்டுமுள்ளூர் | சோ | பதஞ்சலிநாதேசுரர் | கோல்வளைக்கையம்மை | சிவதீர்த்தம் | |
| 47 | 10 | | திருக்கூடலையாற்றூர் | ந. | நெறிகாட்டுநாயகர் | புரிகுழலாம்பிகை | மணிமுத்தாநதி | |
| 48 | 11 | | திருஓமாம்புலியூர் | சோ | துயர்தீர்த்தநாதர் | பூங்கொடிநாயகி | கொள்ளிடதீர்த்தம் | |
| 49 | 12 | | திருக்கடம்பூர் | ,, | அமிர்தகடேசுரர் | சோதிமின்னம்மை | அமுததீர்த்தம் | |
| 50 | 13 | | திருமுதுகுன்றம்-விருத்தாசலம் | ந. | பழமலைநாதர் | பெரியநாயகி | மணிமுத்தாநதி | வன்னி விருக்ஷம் |
| 51 | 1 | கொள்ளிடம் | திருநல்லூர்பெருமணம் | சோ. | சிவலோகத்தியாகேசர் | நங்கையுமையம்மை | கொள்ளிடநதி தீர்த்தம் | |
| 52 | 2 | | திருமயேந்திரப்பள்ளி | ,, | திருமேனியழகர் | வடிவாம்பிகை | கொள்ளிடநதி தீர்த்தம் | |
| 53 | 1 | ஆனதாண்டவபுரம் | திருநின்றியூர் | ,, | மகாலக்ஷ்மீசுரர் | உலகநாயகி | மகாலட்சுமி தீர்த்தம் | |
| 54 | 2 | | திருநீடூர் | ,, | அருட்சோமநாதேசுரர் | வேயுறுதோளியம்மை | சிவதீர்த்தம் | |
| 55 | 3 | | திருஅன்னியூர் | ,, | ஆபத்சகாயேசுரர் | பெரியநாயகியம்மை | வருணதீர்த்தம் | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 56 | 4 | | திருக்குறுக்கை | சோ. | வீரட்டேசுரர் | ஞானம்பிகை | சிவகங்கைதீர்த்தம் | |
| 57 | 5 | | திருக்கடைமுடி | ,, | கடைமுடிநாதேசுரர் | அபிராமியம்மை | கருணைதீர்த்தம் | |
| 58 | 1 | சீயாழி | ஸ்ரீகாழி-பிரமபுரம் | ,, | பிரமபுரீசுரர், தோணியப்பர் சட்டைநாதர் | திருநிலைநாயகி | பிரம்மதீர்த்தம் | |
| 59 | 2 | | திருப்பல்லவனேச்சுரம் | ,, | பல்லவனேசுரர் | சௌந்தரநாயகி | காவிரிநதி | |
| 60 | 3 | | திருவெண்காடு | ,, | சுவேதாரணியேசுரர் | பிரம்மவித்தியாநாயகி | முக்குளதீர்த்தம் | |
| 61 | 4 | | திருக்கடவூர் | ,, | அமிர்தகடேசுரர் | அபிராமியம்மை | சிவகங்கைதீர்த்தம் | வில்வ விருக்ஷம் |
| 62 | 5 | | திருக்கடவூர்மயானம் | ,, | பிரமபுரீசுரர் | மலர்க்குழல்மின்னையம்மை | காசிதீர்த்தம் | |
| 63 | 6 | | திருவலம்புரம் | ,, | வலம்புரிநாதேசுரர் | வடுவகிர்க்கண்ணம்மை | காவிரிநதிதீர்த்தம் | |
| 64 | 7 | | திருத்தலைச்சங்காடு | ,, | சங்குநாதேசுரர் | சௌந்திரநாயகியம்மை | காவிரிதீர்த்தம் | வில்வ விருக்ஷம் |
| 65 | 8 | | திருக்கீழைத்திருக்காட்டுப்பள்ளி | ,, | ஆரணியசுந்தரேசுரர் | அகிலாண்டநாயகி | காவிரிநதிதீர்த்தம் | |
| 66 | 9 | | திருக்குருகாவூர் | ,, | வெள்ளிடைச்சுரர் | காவியங்கண்ணியம்மை | திருக்குளதீர்த்தம் | |
| 67 | 10 | | திருக்கோலக்கா | ,, | சத்தபுரீசுரர் | ஓசைகொடுத்தநாயகி | சூரியதீர்த்தம் | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 68 | 11 | | திருச்சாய்க்காடு சாயாவனம் | சோ. | சாயாவனேசுரர் | குயிலினுநன்மொழியம்மை | சங்குமுகதீர்த்தம் | |
| 69 | 12 | | திருத்தென்முல்லைவாயல் | ,, | முல்லைவனநாதர் | கோதையம்மை | இந்திரதீர்த்தம் | |
| 70 | 13 | | திருக்கலிக்காமூர் | ,, | சுந்தரேசுரர் | அழகுவனமுலையம்மை | சிவதீர்த்தம் | |
| 71 | 1 | வைத்தீஸ்வரன் கோயில | திருப்புன்கூர் | ,, | சிவலோகநாதர் | சொக்கநாயகியம்மை | சிவகங்கைதீர்த்தம் | |
| 72 | 2 | | திருப்புள்ளிருக்கும்வேளூர் | ,, | வைத்திநாதேசுரர் | தையல்நாயகியம்மை | வேமபுவிருக்ஷம் | |
| 73 | 3 | | திருவாவொளிபுற்றூர் | ,, | மாணிக்கவண்ணேசுரர் | வண்டார்பூங்குழலம்மை | பிரமதீர்த்தம் | வாகை விருக்ஷம் |
| 74 | 4 | | திருக்கண்ணார்கோயில் | ,, | கண்ணாயிரேசுரர் | முருகுவளர்கோதையம்மை | மணிகர்ணிகைதீர்த்தம் | |
| 75 | 5 | | திருக்குருக்குக்கா | ,, | கொந்தளேசுரர் | கொந்தளநாயகி | அனுமதீர்த்தம் | |
| 76 | 6 | | திருக்கருப்பறியலூர் | ,, | வீரட்டேசுரர் | இளங்கொடியம்மை | சந்திரபுஷ்கரணி | |
| 77 | 7 | | திருமண்ணிப்படிக்கரை | ,, | நீலகண்டேசுரர் | அமிர்தகரவல்லியம்மை | அமிர்ததீர்த்தம் | |
| 78 | 1 | மாயவரம் | திருமயிலாடுதுறை | ,, | மாயூரநாதேசுரர் | அபயாம்பிகை | காவிரிநதி | மா விருக்ஷம் |
| 79 | 2 | | திருஆக்கூர் | ,, | சுயம்புநாதேசுரர் | வாள்நெடுங்கண்ணியம்மை | ஆநந்தபுட்கரணி | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 80 | 3 | | திருவழுந்தூர் | சோ. | வேதபுரீசுரர் | சௌந்தராம்பிகை | வேததீர்த்தம் |
| 81 | 4 | | திருநனிபள்ளி | ,, | நற்றுணையப்பர் | பர்வதராஜபுத்திரி | காவிரிநதிதீர்த்தம் |
| [illegible] | 5 | | திருவிளநகர் | ,, | துறைகாட்டும்வள்ளலார் | வேயுறுதோளியம்மை | மெய்ஞ்ஞானதீர்த்தம் |
| [illegible] | 6 | | திருச்செம்பொன்பள்ளி | ,, | சொர்ணபுரீசுரர் | சுகந்தவனநாயகியம்மை | இந்திரதீர்த்தம் |
| 84 | 7 | | திருப்பறியலூர் | ,, | வீரட்டேசுரர் | இளங்கொடியம்மை | சிவகங்கைதீர்த்தம் |
| | | மாயவரம் ஜங்ஷன் அரந்தாங்கி மார்க்கம் பேரளம் ஜங்ஷன் | | | | | |
| 85 | 1 | பேரளம் | திருப்பாம்புரம் | ,, | பாம்புரேசுரர் | வண்டார்பூங்குழலியம்மை | ஆதிசேஷதீர்த்தம் |
| 86 | 2 | | திருமீயச்சூர் | ,, | முயற்சிநாதேசுரர் | சௌந்தரநாயகி | அற்புததீர்த்தம் |
| 87 | 3 | | திருமீயச்சூர் இளங்கோயில் | ,, | சகலபுவனேசுரர் | மேகலாம்பிகையம்மை | சரஸ்வதி தீர்த்தம் |
| 88 | 4 | | திருச்சிறுகுடி | ,, | மங்களேசுரர் | மங்களநாயகி | மங்களதீர்த்தம் |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | பேரளம் ஜங்ஷன் காரைக்கால் மார்க்கம். | | | | | | |
| 89 | 1 | அய்யகரத்தூர் | திருக்கோட்டாறு | சோ. | ஐராவதீசுரர் | வண்டமர்பூங்குழலம்மை | சூரியதீர்த்தம் | |
| 90 | 2 | | திருச்சாத்தமங்கை | ,, | அயவந்தீசுரர் | மலர்க்கண்ணம்மை | அற்புதசிவகங்கைதீர்த்தம் | |
| 91 | 1 | திருநள்ளாறு | திருநள்ளாறு | ,, | தர்ப்பாரண்யேசுரர் | போகமார்த்தபூண்முலையம்மை | நளதீர்த்தம் | |
| 92 | 2 | | திருத்தருமபுரம் | ,, | யாழ்மூரிநாதேசுரர் | சதாமதுராம்பிகை | கதலிதீர்த்தம் | |
| 93 | 1 | காரைக்கால் | திருத்தெளிச்சேரி | ,, | பார்வதீசுரர் | சத்தியம்மை | பார்வதிதீர்த்தம் | வன்னி விருக்ஷம் |
| 94 | 2 | | திருவேட்டக்குடி | ,, | திருமேனியழகேசுரர் | சாந்தநாயகி | அழகுதீர்த்தம் | |
| | | பேரளம் ஜங்ஷன் அரந்தாங்கி மார்க்கம். | | | | | | |
| 95 | 1 | பூந்தோட்டம் | திருஅப்பர்பெருந்திருக்கோயில் | ,, | பிரமபுரீசுரர் | பூங்குழலம்மை | பிரமதீர்த்தம் | |
| 96 | 2 | | திருஅயபர்மாகாளம் | ,, | காளகண்டேசுரர் | பக்ஷநாயகி | மாகாளதீர்த்தம் | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 97 | 3 | | திருத்திலதைப்பதி | சோ. | முத்தீசுரர் | பொற்கொடியம்மை | சோமதீர்த்தம் | |
| 98 | 4 | | திருவீழிமிழலை | ,, | வீழியழகேசுரர் | சுந்தரகுஜாம்பிகையம்மை | அரிதீர்த்தம் | வீழிவிருக்ஷம் |
| 99 | 5 | | திருவன்னியூர் | ,, | அக்கினிசுரர் | பார்வதியம்மை | அக்கினிதீர்த்தம் | |
| 100 | 1 | நன்னிலம் | திருநன்னிலம் | ,, | மதுவனேசுரர் | மதுவனநாயகி | சூரியகாந்த தீர்த்தம் | |
| 101 | 2 | | திருஇராமனதீச்சுரம் | ,, | இராமநாதீசுரர் | கருவார்குழலியம்மை | இராமதீர்த்தம் | |
| 102 | 3 | | திருவாஞ்சியம் | ,, | வாஞ்சிலிங்கேசுரர் | மங்களநாயகி | நகவாந்த தீர்த்தம் | |
| 103 | 4 | | திருப்புகலூர் | ,, | அக்கினிசுரர் | கருந்தார்குழலியம்மை | அக்கினிதீர்த்தம் | |
| 104 | 5 | | திருமருகல் | ,, | மாணிக்கவண்ணேசுரர் | வண்டுவார்குழலியம்மை | மாணிக்க தீர்த்தம் | வன்னி விருக்ஷம் |
| 105 | 6 | | திருச்சங்காட்டாங்குடி | ,, | கணபதீச்சுரர் | திருச்சுகுநாயகியம்மை | கணபதிதீர்த்தம் | |
| 106 | 7 | | திருப்புகலூர் வர்த்தமானீச்சுரம் | ,, | வர்த்தமானேசுரர் | கருந்தார்குழலியம்மை | திருக்குள தீர்த்தம் | |
| 107 | 8 | | திருக்கொண்டீச்சுரம் | ,, | பசுபதீசுரர் | சாந்தநாயகி | பசுதீர்த்தம் | |
| 108 | 1 | வெட்டாறு | திருப்பயற்றூர் | ,, | திருப்பயற்றீசுரர் | காவியங்கண்ணியம்மை | கருணாதீர்த்தம் | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 109 | 2 | | திருப்பள்ளியின்முக்கூடல் | சோ. | முக்கோணநாதேசுரர் | மைமேவுகண்ணியம்மை | முச்கூடல் தீர்த்தம் | |
| 110 | 3 | | திருவிற்குடி | ,, | வீரட்டானேசுரர் | மைவார்குழலியம்மை | சக்கரதீர்த்தம் | |
| 111 | 1 | திருவாலூர் | திருஆரூர் | ,, | வன்மீகநாதர் | அல்லியங்கோதை | கமலாய தீர்த்தம் | |
| 112 | 2 | | திருஆரூர் அரநெறி | ,, | அகிலேசுரர் | புவனேசுரி | அற்புதக்கூவமுதலியதீர்த்தம் | |
| 113 | 3 | | திருஆரூர்பரவையுண்மண்டளி | ,, | பரவையுண்மண்டலேசுரர் | பஞ்சின்மெல்லடியம்மை | வருணபுட்கரணிமுதலியதீர்த்தம் | |
| 114 | 4 | | திருவாய்மூர் | ,, | வாய்மூர்நாதேசுரர் | பாலினுநன்மொழியம்மை | சண்டமாருத தீர்த்தம் | வன்னி விருக்ஷம் |
| 115 | 5 | | திருக்காறாயில் | ,, | கண்ணாயிரநாதேசுரர் | கைலாயநாயகி | இந்திரதீர்த்தம் | |
| 116 | 6 | | திருப்பனையூர் | ,, | சௌந்தரியநாதர் | பெரியநாயகி | மகாலட்சுமி தீர்த்தம் | |
| 117 | 7 | | திருவிளமர் | ,, | பதஞ்சலிமனோகரேசுரர் | யாழினுமென்மொழியம்மை | முத்திதீர்த்தம் | |
| 118 | 8 | | திருக்கரவீரம் | ,, | கரவீரேசுரர் | பிரத்தியக்ஷமின்னம்மை | அனவரத தீர்த்தம் | |
| 119 | 9 | | திருப்பெருவேளூர் | ,, | பிரியாயீசுரர் | மின்னனையாளம்மை | சத்திதீர்த்தம் | |
| 120 | 10 | | திருவலிவலம் | ,, | மனத்துணைநாதேசுரர் | வாளையங்கண்ணியம்மை | காரணகங்கை தீர்த்தம் | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 121 | 1 | திருநாட்டியத் தான்குடி | திருக்கன்றுப்பூர் | சோ. | நடுதறியப்பர் | மாதுமையம்மை | பிரசன்ன தீர்த்தம் |
| 22 | 2 | | திருநாட்டியத்தான் குடி | ,, | ரத்தினகிரீசுரர் | மலைமங்கையம்மை | மகாதீர்த்தம் |
| 23 | 1 | திருநெல்லிக்கா வல் | திருநெல்லிக்கா | ,, | நெல்லிவனநாதே சுரர் | மங்களநாயகி யம்மை | அற்புததீர்த்தம் |
| 24 | 2 | | திருக்கைச்சினம் | ,, | கைச்சினநாதே சுரர் | வெள்வளையம்மை | திருக்குள தீர்த்தம் |
| 25 | 3 | | திருத்தெங்கூர் | ,, | வெள்ளிமலைநாதே சுரர் | பெரியநாயகி யம்மை | கருணாகர தீர்த்தம் |
| 26 | 1 | பொன்னிறை | திருக்கொள்ளிக்காடு | ,, | அக்கினீசுரர் | பஞ்சினுமெல்லடி யம்மை | திருக்கொள்ளி ர்த்தம் |
| 27 | 1 | திருத்தராப் பூண்டி | திருக்களர் | ,, | களர்முலைநாதே சுரர் | அழகேசுரியம்மை | திருக்குள தீர்த்தம் |
| 28 | 2 | | திருச்சிற்றேமம் | ,, | பொன்வைத்த நாதேசுரர் | அகிலாண்ட நாயகியம்மை | அகிலாண்ட தீர்த்தம் |
| 29 | 3 | | திருத்தண்டலை நீணெறி | ,, | நீணெறிநாதேசுரர் | ஞானாம்பிகை | சிவகங்கை தீர்த்தம் |
| 30 | 4 | | திருஇடும்பாவனம் | ,, | சற்குணநாதேசுரர் | மங்களநாயகி | சுமுகபுட்கரணி தீர்த்தம் |
| 31 | 5 | | திருக்கடிக்குளம் | ,, | கற்பகேசுரர் | சௌந்தரநாயகி | விநாயகர்கண்ட தீர்த்தம் |
| 32 | 1 | முத்துப்பேட் டை | திருஉசாத்தானம் | ,, | மந்திரபுரேசுரர் | பெரியநாயகி யம்மை | சுக்கிரீவதீர்த்தம் |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | * | மாயவரம் ஜங்ஷன் தூத்துக்குடி மார்க்கம் | | | | | | |
| 133 | 1 | குத்தாலம் | திருஎதிர்கொள்பாடி | ,, | ஐராவதேசுரர் | மலர்க்குழல்மாதம்மை | அயிராவ தீர்த்தம் | |
| 134 | 2 | | திருவேள்விக்குடி | ,, | கலியாணசுந்தரேசுரர் | பரிமளசுகந்தநாயகி | கல்யாண தீர்த்தம் | |
| 135 | 3 | | திருமணஞ்சேரி | ,, | அருள்வள்ளநாயகேசுரர் | யாழின்மொழியம்மை | திருமண தீர்த்தம் | |
| 136 | 4 | | திருத்துருத்தி | ,, | வேதேசுரர் | முகிழாம்பிகை | காவிரிநதி தீர்த்தம் | குற்றால் விருக்ஷம் |
| 137 | 1 | நரசிங்கப்பேட்டை | திருஆவடுதுறை | ,, | மாசிலாமணிசுரர் | ஒப்பிலாமுலையம்மை | சிவகங்கை தீர்த்தம் | |
| 138 | 2 | | திருக்கோழம்பம் | ,, | கோகிலேசுரர் | சௌந்தரநாயகியம்மை | கோகிலதீர்த்தம் | |
| 139 | 1 | ஆடுதுறை | திருநிலகண்மாடக் கோயில் | ,, | வைகல்நாதேசுரர் | வைகலாம்பிகை | சூரியதீர்த்தம் | |
| 140 | 1 | திருவடமருதூர் | திருவிடமருதூர் | ,, | மருதப்பட்டேசுரர் | பெருநலமாமுலைநாயகி | திருக்குள தீர்த்தம் | |
| 141 | 2 | | திருமங்கலக்குடி | ,, | பிராணவாதேசுரர் | மங்களநாயகி | காவிரிநதி தீர்த்தம் | கோங்கிலவு விருக்ஷம் |
| 142 | 3 | | திருநல்லம் | ,, | உமாமகேசுரர் | மங்களநாயகி | சத்திதீர்த்தம் | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 143 | 4 | | திருநீலக்குடி | சோ. | நீலகண்டேசுரர் | உமையம்மை | காவிரிநதி தீர்த்தம் | |
| 144 | 5 | | திருப்பந்தணைநல்லூர் | ,, | பெரியாண்டேசுரர் | திரிபுரசுந்தரியம்மை | பசுதீர்த்தம் | கொன்றை விருக்ஷம் |
| 145 | 6 | | திருநாகேச்சுரம் | ,, | செண்பகாரணியேசுரர் | குன்றமுலைநாயகி | இந்திரதீர்த்தம் | |
| 146 | 7 | | திருக்கஞ்சனூர் | ,, | அக்கினீசுரர் | கற்பகநாயகி | அக்கினிதீர்த்தம் | புரசுவிருக்ஷம் |
| 147 | 8 | | திருத்தென்குரங்காடுதுறை | ,, | ஆபத்சகாயேசுரர் | பவளக்கொடியம்மை | காவிரிநதி தீர்த்தம் | |
| 148 | 1 | கும்பகோணம் | திருக்குடமூக்கு | ,, | கும்பேசுரர் | மங்களநாயகி | காவிரிநதி தீர்த்தம் | |
| 149 | 2 | | திருஅரிசிற்கரைபுத்தூர் | ,, | படிக்காசளித்தஈசுரர் | அழகாம்பிகை | அரிசில்நதி தீர்த்தம் | |
| 150 | 3 | | திருநறையூர்சித்தீஸ்வரம் | ,, | சித்தநாதேசுரர் | அழகாம்பிகை | தேன்சித்தி தீர்த்தம் | |
| 151 | 4 | | திருஆப்பாடி | ,, | பாலுகந்தயீசுரர் | பெரியநாயகியம்மை | மண்ணியாறு | ஆத்தி விருக்ஷம் |
| 152 | 5 | | திருப்பணந்தாள் | ,, | சடையப்பேசுரர் | பெரியநாயகியம்மை | சிவகங்கை தீர்த்தம் | பனைவிருக்ஷம் |
| 153 | 6 | | திருஆலூர் | ,, | பசுபதீசுரர் | மங்களநாயகி | பசுத்தீர்த்தம் | |
| 154 | 7 | | திருஇன்னம்பர் | ,, | எழுத்தறிநாதேசுரர் | கொழுந்தார்பூங்குழலம்மை | ஐராவததீர்த்தம் | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 155 | 8 | திருக்கருக்குடி | சோ. | சற்குணலிங்கேசுரர் | சர்வாலங்கிருதமின்னம்மை | வபதீர்த்தம் | |
| 156 | 9 | திருக்கலயநல்லூர் | ,, | அமிர்தகலேசுரர் | அமிர்தவல்லி | அமிர்ததீர்த்தம் | |
| 157 | 10 | திருக்கருவிளி | ,, | சற்குணநாதேசுரர் | சர்வாங்கநாயகி | சற்குணதீர்த்தம் | |
| 158 | 11 | திருப்பழையாறைவடதளி | ,, | சோமேஸ்வரர் | சோமகலாநாயகி | விசுவதீர்த்தம் | |
| 159 | 12 | திருவியலூர் | ,, | யோகாநந்தேசுரர் | சௌந்தரநாயகி | சடாயுதீர்த்தம் | |
| 160 | 13 | திருந்துதேவன்குடி | ,, | கற்கடேசுரர் | அருமருந்தம்மை | மங்கயதீர்த்தம் | |
| 161 | 14 | திருக்குடந்தைக்கீழ்க்கோட்டம் | ,, | நாகேசுரசுவாமி | பெரியநாயகியம்மை | சூரியபுஷ்கரணி தீர்த்தம் | |
| 162 | 15 | திருப்புறம்பயம் | ,, | சாக்ஷிநாதேசுரர் | கரும்பன்னசொல்லம்மை | கூபதீர்த்தம் | புன்னை விருக்ஷம் |
| 163 | 16 | திருச்சத்திமுற்றம் | ,, | சிவக்கொழுந்தீசுரர் | பெரியநாயகியம்மை | சத்திதீர்த்தம் | |
| 164 | 17 | திருப்பட்டீச்சுரம் | ,, | பட்டீசுரர் | பால்வளைநாயகியம்மை | சிவகங்கை தீர்த்தம் | |
| 165 | 18 | திருநாலூர்மயானம் | ,, | பலாசவனேசுரர் | பெரியாம்பிகை | பாலவடி தீர்த்தம் | |
| 166 | 19 | திருவைகாவூர் | ,, | வில்வவனேசுரர் | வளைக்கைநாயகியம்மை | வில்வதீர்த்தம் | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 167 | 20 | | திருப்பேணுப்பெருந்துறை | சோ. | சிவாநந்தேசுரர் | மலையரசியம்மை | ஆநந்ததீர்த்தம் |
| 168 | 21 | | திருவலஞ்சுழி | ,, | கற்பகநாதேசுரர் | பெரியநாயகி | காவிரிநதி தீர்த்தம் |
| 169 | 22 | | திருவிஜயமங்கை | ,, | விஜயநாதேசுரர் | மங்கைநாயகி | அர்ச்சுன தீர்த்தம் |
| 170 | 23 | | திருநல்லக்கோட்டையூர் | ,, | கோடீசுரர் | பந்தாடுநாயகி யம்மை | |
| 171 | 24 | | திருச்சிவபுரம் | ,, | சிவபுரநாதர் | சிங்காரவல்லி | பிரமதீர்த்தம் |
| 172 | 25 | | திருச்சேயஞ்ஞலூர் | ,, | சத்தியகிரீசுரர் | சகிதேவியம்மை | மண்ணிநதி தீர்த்தம் |
| 173 | 26 | | திருச்சேளா | ,, | செந்நெறியப்பர் | ஞானவல்லியம்மை | மநோகர தீர்த்தம் |
| 174 | 27 | | திருக்குடநகைத்கா ரோணம | ,, | காசிவிசுவநாதர் | காசிவிசாலாக்ஷி | சந்திரதீர்த்தம் |
| 175 | 1 | சுந்தரபெருமாள் கோவில் | திருநல்லூர் | ,, | பெரியாண்டேசுரர் | திரிபுரசுந்தரி யம்மை | சுந்தரதீர்த்தம் |
| 176 | 1 | பாபநாசம் | திருப்பாலைத்துறை | ,, | பாலைவனநாதேச்சுரர் | தவளவெண்ணகை யம்மை | பிரமதீர்த்தம் |
| 177 | 1 | அய்யம்பேட்டை | திருச்சக்கரபள்ளி | ,, | ஆலந்துறையீசுரர் | அல்லிபங்கோதை | காவிரிநதி தீர்த்தம் |
| 178 | 2 | | திருப்புள்ளமங்கை | ,, | ஆலந்தரித்தபிசுரர் | அல்லிபங்கோதை | காவிரிநதி [illegible] |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 179 | 3 | | திருக்கருகாவூர் | சோ. | முல்லைவனேசுரர் | கரும்பனையாளம்மை | அற்புததீர்த்தம் |
| 180 | 4 | | திருவடகுரங்காடுதுறை | ,, | குலைவணங்கீசுரர் | அழகுசடைமுடியம்மை | வாலிதீர்த்தம் |
| 181 | 1 | திட்டை | திருத்தென்குடிதிட்டை | ,, | பசுபதீசுரர் | உலகநாயகியம்மை | சக்கரதீர்த்தம் |
| 182 | 1 | தஞ்சாவூர் | திருஆலம்பொழில் | ,, | ஆத்மநாதேசுரர் | ஞானாம்பிகை | காவிரிநதிதீர்த்தம் |
| 183 | 2 | | திருக்கண்டியூர் | ,, | வீரட்டானேசுரர் | மங்களநாயகி | காவிரிநதிதீர்த்தம் |
| 184 | 3 | | திருப்பூந்துருத்தி | ,, | புஷ்பவனநாதேசுரர் | அழகாலமர்ந்தநாயகி | காசிகங்கைதீர்த்தம் |
| 185 | 4 | | திருவையாறு | ,, | செம்பொற்சோதீசுரர் | அறம்வளர்த்தநாயகி | சூரியதீர்த்தம் |
| 186 | 5 | | திருநெய்த்தானம் | ,, | நெய்யாடியப்பர் | பாலாம்பிகையம்மை | காவிரிநதிதீர்த்தம் |
| 187 | 6 | | திருப்பழனம் | ,, | ஆபத்சகாயேசுரர் | பெரியநாயகியம்மை | காவிரிநதிதீர்த்தம் |
| 188 | 7 | | திருப்பழூவூர் | ,, | வடமூலநாதேசுரர் | அருந்தவநாயகியம்மை | கொள்ளிடநதிதீர்த்தம் |
| 189 | 8 | | திருப்பெரும்புலியூர் | ,, | வியாக்ரபுரீசுரர் | சௌந்தரநாயகி | வியாக்கிரதீர்த்தம் |
| 190 | 9 | | திருமழப்பாடி | ,, | வஜ்ரஸ்தம்பேசுரர் | அழகாம்பிகை | கொள்ளிடநதிதீர்த்தம் |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 191 | 10 | | திருவேதிக்குடி | சோ. | வேதபுரீசுரர் | மங்கயர்க்கரசி | காவிரிநதிதீர்த்தம் |
| 192 | 11 | தஞ்சாவூர் ஜங்ஷன் நாகூர் மார்க்கம் | திருச்சோற்றுத்துறை | ,, | தொலையாச்செல்வேசுரர் | ஒப்பிலாம்பிகையம்மை | ஷ |
| 193 | 1 | சாலீமங்களம் | திருஆரதைப்பெரும்பாழி | ,, | பாதாளேசுரர் | அலங்காரநாயகி | பாதாளதீர்த்தம் |
| 194 | 2 | | திருஅவளிவநல்லூர் | ,, | சாக்ஷிநாயகேசுரர் | சௌந்தநாயகி | பிரசன்னதீர்த்தம் |
| 195 | 3 | | திருப்பரிதிநியமம் | ,, | பராயத்துறைநாதேசுரர் | பொன்மயிலாம்பிகையம்மை | பாஸ்கரதீர்த்தம் |
| 196 | 1 | அம்மாபேட்டை | திருவெண்ணி | ,, | இட்சுபுரீசுரர் | அழகியநாயகி | சிவகங்கைதீர்த்தம் |
| 197 | 1 | நீடாமங்கலம் | திருஇரும்பூளை | ,, | காசி ஆரணியேசுரர் | ஏலவார்குழலியம்மை | காசிதீர்த்தம் |
| 198 | 2 | | திருக்கடுவாய்க்கரைபுத்தூர் | ,, | சொர்ணபுரீசுரர் | சிவாம்பிகை | சொர்ணதீர்த்தம் |
| 199 | 3 | | திருப்பாதாளீச்சுரம் | ,, | சர்ப்பபுரீசுரர் | அமிர்தநாயகி | நாகதீர்த்தம் |
| 200 | 4 | | திருப்பூவனூர் | ,, | புஷ்பவனேசுரர் | கற்பகவல்லியம்மை | கற்பகதீர்த்தம் |
| 201 | 5 | | திருவெண்டுறை | ,, | வெண்டுறைநாதேஸ்வரர் | வேல்நெடுங்கண்ணியம்மை | தாளதீர்த்தம் |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 202 | 6 | | திருக்கொள்ளம்பூதூர் | சோ. | வில்வவனேசுரர் | சௌந்தராம்பிகை | முடமுருட்டி நதிதீர்த்தம் | வில்வ விருக்ஷம் |
| 203 | 7 | | திருக்கோட்டூர் | ,, | கொழுந்தீசுரர் | மதுரவசனாம்பிகை | அமிர்ததீர்த்தம் | |
| 204 | 1 | கொரடாச்சேரி | திருக்குடவாயல் | ,, | கோணேசுரர் | பெரியநாயகியம்மை | திருக்குட தீர்த்தம் | |
| 205 | 2 | | திருத்தலையாலங்காடு | ,, | ஆடவல்லயீசுரர் | திருமடந்தையம்மை | சொர்ண தீர்த்தம் | |
| 206 | 1 | குளிக்கரை | திருப்பேரயில் | ,, | ஜெகதீஸ்வரர் | ஜெகந்நாயகி | வணதீர்த்தம் | |
| 207 | 1 | கிவலூர் | திருக்கோளிலி | ,, | கோளிலிநாதேசுரர் | வண்டமர்பூங்குழலம்மை | திருக்குவளை தீர்த்தம் | |
| 208 | 2 | | திருத்தேவூர் | ,, | வேதபுரீசுரர் | மதுரபாஷணியம்மை | பிரகஸ்பதி தீர்த்தம் | வாழை விருக்ஷம். |
| 209 | 1 | சிக்கல் | திருக்கீழ்வேளூர் | ,, | அக்ஷயலிங்கேசுரர் | வனமுலைநாயகியம்மை | சிவஞான தீர்த்தம் | இலந்தை விருக்ஷம். |
| 210 | 2 | | திருச்சிக்கல் | ,, | வெண்ணெயிலிங்கேசுரர் | வேல்நெடுங்கண்ணியம்மை | நவநீத தீர்த்தம் | குடைசம்பல் விருக்ஷம் |
| 211 | 1 | நாகப்பட்டணம் | திருநாகைக்காரோணம் | ,, | காயாரோகணேசுரர் | நீலாயதாக்ஷியம்மை | தேவதீர்த்தம் | மாவிருக்ஷம் |
| 212 | 2 | | திருமறைக்காடு வேதாரணியம் | ,, | வேதாரண்யேசுரர் | யாழைப் பழித்த மொழியம்மை | வேததீர்த்தம் | வன்னி விருக்ஷம் |
| 213 | 3 | | திரு அகத்தியாம்பள்ளி | ,, | அகத்தீசுரர் | பாகம்பிரியாநாயகி | அகஸ்திய தீர்த்தம் | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 14 | 4 | | திருக்கோடிக்கா | சோ. | கோடிக்காயீசுரர் | வடிவாம்பிகையம்மை | காவிரிநதிதீர்த்தம் | |
| [illegible] | [illegible] | [illegible] ஊர் ஜில்லா [illegible] துக்குடி [illegible] | [illegible] கோடி | ,, | அமிர்தகடேசுரர் | மையார்தடங்கண்ணியம்மை | அமிர்ததீர்த்தம் | |
| 16 | [illegible] | [illegible] | மேலைத்திருக்காட்டுப்பள்ளி | ,, | தீயாடியப்பர் | வார்கொண்டமுலையம்மை | சூரியதீர்த்தம் | |
| 17 | 2 | | திருக்கானூர் | ,, | செம்மேனிநாதேசுரர் | சிவயோகநாயகி | வேததீர்த்தம் | |
| 18 | 3 | | திருஅன்பிலாந்துறை | ,, | சத்திபவாகேசுரர் | சௌந்தரநாயகி | கொள்ளிடநதிதீர்த்தம் | |
| 19 | | திருவெறும்பூர் | திருஎறும்பியூர் | ,, | எறும்பீசுரர் | நறுங்குழல்நாயகி | அற்புததீர்த்தம் | |
| 20 | 2 | | திருநெடுங்களம் | ,, | நித்தியசுந்தரேசுரர் | ஒப்பிலாநாயகியம்மை | சுந்தரதீர்த்தம் | |
| 21 | 1 | அம்மை[illegible] ஊர் | திருக்கொடுங்குன்றம் | பா. | கொடுங்கொன்றீசுரர் | குயிலமிர்தநாயகியம்மை | சிவகங்கைதீர்த்தம் | |
| 22 | 2 | | திருப்புத்தூர் | ,, | புத்தூரீசுரர் | சிவகாமியம்மை | அற்புத கங்கை தீர்த்தம் | |
| 23 | 1 | சோளவந்தான் | திருவேடகம் | ,, | ஏடகநாதேசுரர் | சுகுந்த குந்தளாம்பாள் | வைகைநதிதீர்த்தம் | |
| 24 | | மதுரை | திருஆலவாய் | ,, | சொக்கநாதர் | மீனாக்ஷியம்மை | பொற்றாமரை | கடம்பவிருக்ஷம். |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 225 | | மதுரை ஜங்ஷன் இராமேஸ்வரம் மார்க்கம். | திரு ஆப்பனூர் | பா. | ஆப்பனூரீசுரர் | அம்பிகையம்மை | இடபதீர்த்தம் |
| 226 | 1 | திருப்பூவணம் | திருப்பூவணம் | ,, | பூவணநாதேசுரர் | மின்னனையாளம்மை | வைகைநதிதீர்த்தம் |
| 227 | 2 | | திருச்சுழியல் | ,, | திருமேனிநாதேசுரர் | துணைமாலையம்மை | பிரளயதீர்த்தம் |
| 228 | 1 | மானாமதுரை | திருப்புனவாயில் | ,, | பழம்பதிநாதேசுரர் | கருணைநாயகியம்மை | கங்காதீர்த்தம் |
| 229 | 1 | ராமநாதபுரம் | திருக்கானகப்பேர்காளையார்கோவில் | ,, | காளையீசுரர் | சொர்ணவல்லி | யானைமடு புட்பவன தீர்த்தம் |
| 230 | 2 | | திரு ஆடானை | ,, | ஆடானைநாதர் | சிநேகவல்லி | இரத்நதீர்த்தம் |
| 231 | 1 | இராமேஸ்வரம் | இராமேச்சுரம் | ,, | இராமநாதேசுரர் | பர்வதவர்த்தனியம்மை | தனுஷ்கோடிதீர்த்தம் |
| | | மதுரை ஜங்ஷன் தூத்துக்குடி மார்க்கம். | | | | | |
| 232 | 1 | திருப்பரங்குன்றம் | திருப்பரங்குன்றம் | ,, | பரங்கிரிநாதேசுரர் | ஆவுடைநாயகி | சரவணதீர்த்தம் |
| | | தூத்துக்குடியிலிறங்கி ஸ்டீமரில் யேறி இலங்கைக்குப் போகவேண்டும் | | | | | |
| 233 | 1 | இலங்கை. | திருக்கேதீச்சுரம் | ஈ | கேதீசுரர் | கௌரியம்மை | புஞ்சோலைதீர்த்தம் |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 234 | 2 | | திருக்கோணமலை | * | கோணேசுரர் | மாதுமையாளம்மை | மகாவலி தீர்த்தம் | |
| | | மணியாச்சி ஜங்ஷன் கொல்லம் மார்க்கம். | | | | | | |
| 235 | 1 | திருநெல்வேலி | திருநெல்வேலி | பா | நெல்லையப்பர் | காந்திமதியம்மை | சிந்துபூந்துறை தீர்த்தம் | வேய்விருக்ஷம் |
| 236 | 1 | தென்காசி | திருக்குற்றாலம் | ,, | குறும்பலாயீசுரர் | குழல்வாய்மொழியம்மை | வடவருவி சிவமதுகங்கை | குறும்பலாவிருக்ஷம் |
| | | மணியாச்சி ஜங்ஷன் திருச்சிராப்பள்ளி ஜங்ஷன் ஈரோடு மார்க்கம். | | | | | | |
| 237 | 1 | திருச்சிராப்பள்ளி கோட்டை | திருச்சிராப்பள்ளி | சோ | தாயுமானேசுரர் | மட்டுவார்குழலம்மை | காவிரிநதி தீர்த்தம் | |
| 238 | 2 | | திருவானைக்கா | ,, | ஜம்புகேசுரர் | அகிலாண்டநாயகி | காவிரிநதி தீர்த்தம் | ஜம்புநாவல் விருக்ஷம் |
| 239 | 3 | | திருமாந்துறை | ,, | ஆம்ரவனேசுரர் | அழகாலுயர்ந்தம்மை | சாயநதி தீர்த்தம் | மாவிருக்ஷம் |
| 240 | 4 | | திருமூக்கீச்சுரம் உறையூர் | ,, | பஞ்சவர்ணேசுரர் | காந்திமதியம்மை | பஞ்சவர்ண தீர்த்தம் | |
| 241 | 5 | | திருப்பைஞ்ஞீலி | ,, | நீலகண்டேசுரர் | விசாலாக்ஷியம்மை | சிவகங்கைதீர்த்தம் | |
| 242 | 6 | | திருப்பாற்றுறை | ,, | மூலநாதேசுரர் | மேகலாம்பிகை | திருக்குள தீர்த்தம் | |
| 243 | 7 | | திருக்கற்குடி | ,, | சற்குணலிங்கேசுரர் | சர்வாலங்கிருதமின்னம்மை | முத்தீர்த்தம் | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | சோரனூர் ஜங் | ஷன் ஈரணாகுளம்மார்க்கம் | | | | |
| 254 | 1 | இருஞாலக்கடை சோரனூர் ஜங் | திருவஞ்சிக்களம் ஷன் மதிராஸ்மார்க்கம் | ம | அஞ்சைக்களத்தீசுரர் | உமையம்மை | அலைவாய் தீர்த்தம் |
| 255 | 1 | சங்ககிரிதுர்க்கம் | திருக்கொடிமாடச் செங்குன்றூர் | கொ | அர்த்தநாரீசுரர் | பாகம்பிரியாளம்மை | பிரமதீர்த்தம் |
| 256 | 1 | திருவல்லம் | திருவல்லம் | தொ | வல்லநாதேசுரர் | வல்லாம்பிகையம்மை | கவுரிதீர்த்தம் |
| 257 | 1 | அரக்கோணம் | திருவூரல் தக்கோலம் | ,, | உமாபதீசுரர் | உமையம்மை | பார்வதிதீர்த்தம் |
| | | அரக்கோணம் | ஜங்ஷன் பாம்பேமார்க்கம் | | | | |
| 258 | 1 | ரேணுகுண்டா காளஸ்திரி | திருக்காளத்தி | தொ | காளத்தியீசுரர் | ஞானப்பூங்கோதை | பொன்முகரிநதி தீர்த்தம் |
| 259 | 1 | புனா | கோகர்ணம் | து | மகாபலநாதர் | கோகர்ணநாயகி | சிவகங்கை தீர்த்தம் |
| 260 | 1 | | இந்திரநீலப்பருப்பதம் | வ | நீலாசலநாதர் | நீலாம்பிகை | இந்திரதீர்த்தம் |
| 261 | 1 | | அநேகதங்காபதம் | ,, | அருண்மன்னேசுரர் | மனோன்மணியம்மை | சந்திரதீர்த்தம் |
| 262 | 1 | | திருக்கயிலாயம் | ,, | ஸ்ரீகைலாயநாதர் | பார்வதியம்மை | மகாசிவதீர்த்தம் |
| 263 | | பெனாரீஸ் | காசி | ,, | விஸ்வநாதேச்சுரர் | விசாலாட்சியம்மை | கங்காநதி தீர்த்தம் |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 264 | 1 | | திருக்கேதாரம் | வ | கேதாரேசுரர் - இமயமலை | கேதாரகௌரியம்மை | காரதகுண்ட தீர்த்தம் | |
| 265 | 1 | நந்திபால் | திருப்பருப்பதம் | ,, | பருப்பதநாதர் | பருப்பதநாயகி ஸ்ரீசைலம் | பருப்பத தீர்த்தம் | |
| | | அரக்கோணம் | ஜங்ஷன் மதிரால் மார்க்கம் | | | | | |
| 266 | 1 | திருவாலங்காடு | திரு ஆலங்காடு | தெ | ஊர்த்ததாண்டவேசுரர் | வண்டார்குழலியம்மை | முத்திதீர்த்தம் | பலாவிருக்ஷம் |
| 267 | 1 | கடம்பத்தூர் | திருவிற்கோலம் கூவம் | ,, | திரிபுராந்தகேசுரர் | திரிபுராந்தகியம்மை | கூவதீர்த்தம் | |
| 268 | 2 | | திருஇலம்பையங்கோட்டூர் | ,, | சந்திரசேகரேசுரர் | கோடேந்துமுலையம்மை | சந்திரதீர்த்தம் | |
| 269 | 1 | திருவள்ளூர் | திருப்பாச்சூர் | ,, | பாசூர்நாதேசுரர் | பசுபதிநாயகியம்மை | சோமதீர்த்தம் | |
| 270 | 2 | | திருவெண்பாக்கம் | ,, | வெண்பாக்கநாதேசுரர் | கனிவாய்மொழியம்மை | வெண்பாக்க தீர்த்தம் | |
| 271 | 1 | ஆவடி | வடமுல்லைவாயல் | ,, | மாசிலாமணீசுரர் | கொடியிடைநாயகி | சக்கரதீர்த்தம் | |
| 272 | 2 | | திருவேற்காடு | ,, | வேற்காட்டீசுரர் | வேற்கண்ணியம்மை | வேலாயுத தீர்த்தம் | |
| 273 | 1 | வில்லிவாக்கம் | திருவலிதாயம் | ,, | வலிதாயநாதர் | தாயம்மை | அநுமதீர்த்தம் | |
| 274 | 1 | பொன்னேரி | திருக்கள்ளில் | ,, | சிவாநந்தேசுரர் | ஆனந்தவல்லியம்மை | திருநந்தி தீர்த்தம் | |

### நிலப்பூ வகை. வேறு.

பட்டு நாயுருவிபூளை பச்சைசெவ்வந்திதும்பை
வெட்டிவேர்மருக்கொழுந்து கரந்தையேவிஷ்ணுகாந்தி
மட்டவிழ்துழாய்செங்கீரை மத்தைசெம்பரத்தைவங்க
மிட்டகொக்கிறகுநிச்சம் வலம்புரியிணைநிலப்பூ. (5)

### துளபமெடுக்கலாகாதநாள்.

இரவொடுகாலைமாலை யிரவியேவெள்ளிசெவ்வாய்
பரவுமட்டமியீராறு பதின்முன்றுபர்வமோணாக்
கிரவியமாதத்தாதி வியதிபாதமபராணத்தின்
மருவியதுளபங்கொய்யின் மால்சிரங்கொய்தலொக்கும். (6)

### வில்வமெடுக்கலாகாதநாள். வேறு.

திவமுறு மாதமுன் சதுர்த்தி யட்டமி
நவமியே சதுர்த்தசி நவின்ற நல்லுவா
வவமறு சோமவா ரந்து மன்பர்கள்
சிவனருச் சனைசெயும் வில்வந் தீண்டார். (7)

### துளபமும் வில்வமு மித்தனை மாதத்துக் காகுமெனல்

வேறு.

கூறுநாளி லெடுத்திடு கூவிள
மாறுமாதம்வைத் தர்ச்சனை செய்பலா
நாறும் வெள்ளி நிறத்த நறுந்துழா
யேறுமர்ச்சனை யீராறு திங்களே. (8)

### துளபத்துக்கும் வில்வத்துக்கும் புறனடை.

சரிலை கீழுற விருந்து பூத்திடுஞ்
சீரிய துழாய்மலர் தினமுங் கொய்யலா
மூரிடும் புழுக்கடி யொன்று மேயலாற்
பாரினி லெவையலாம் பழுதில் வில்வமே. (9)

### இன்ன இன்ன பத்திர புஷ்பங்களிலே நிர்மாலியமு மாகுமெனல்.

செழித்திடுந் துளபமுஞ் சிறந்த வில்வமும்
வழுத்துபொன் மத்தமு மலரு நீலமு
மழுத்துசெம் பொன்மல ரதனைப் போலவே
கழித்தநிர் மாலியங் கழுவிச் சாத்தலாம். (10)

### இத்தனை நாளிம்மலராகுமெனல்.

அம்புய மேழுநா ளலரி மூன்றுநாள்
மைப்பவிழ் குடலையில் வைத்துச் சாத்தலா
நம்பிடு நறுமலர் நன்னிடா விடு
றம்பழுப் பரும்பிலை தளிருஞ் சாத்தலாம். (11)

### உத்தம மத்திம அதம மலர்கள்.

உத்தமந் தனக்கென வுற்ற நந்தனம்
மத்திமங் காட்டினின் மலர்ந்த பூவெலா
மித்தலத் தொருவன்வைத் தி[illegible]ழமி
லத்தனை மலர்களு மதமமாகுமே. (12)

### இம்மலர்களிழிவெனல். வேறு.

எந்துவைத்தயலர்ந்தமலர்பழம்பூக்கண்மற்ற
வெருக்கிலையாமணக்கிலையினிற்பொதிந்தபூக்க
ளுடுத்தபுடைவையிற்கரத்தினமைத்தநறும்பூக்க
ளுதிர்ந்திடுபூவனமையின்கீழுற்றவிரைப்பூக்க
ளடுத்தபுழுக்கடியெச்சஞ்சிலந்திமயிருறுக
லங்கையில்வைத்தங்கைகுவித்திடுதல்கங்குறனிமே
லெடுத்தமலர்நீரமிழ்த்தல்புறங்காட்டிலெய்த
லெச்சில்குளியாதெடுத்தலிழிவெனுமாகமமே. (13)

## வாரபுட்பம். வேறு.

பங்கயமலர்ந்தவெள்ளாம்பல்பாசடைச்
செங்கழுநீர்மலர்தகரச்செம்மலர்
தங்கியகுவலயந்தனைதவெண்டாமரை
மங்கைகேணீலமேழ்வாரபுட்பமே. (14)

## வாரபத்திரம்.

சூரியன்வில்லமேதுளசிதிங்களே
பாரவில்விளாவிலையறிவன்மாதுளை
வேரிநாயுருவிபொன்வெள்ளிநாவலே
காரியாஞ்சனியினில்விஷ்ணுகாந்தியே. (15)

## பஞ்சவில்வம்.

மெச்சியேயடியவர்வியந்துசாத்திடு
நொச்சியேநறுவிளாநுவன்றகூவிளம்
வைச்சிடுங்கிளுவைபேமாவிலிங்கையின்
பச்சிலையென்றிவைபஞ்சவில்வமே. (16)

## காலையிற் சாத்தும் அஷ்ட புட்பம்.

வம்பவிழலரிநாயுருவிமல்லிகை
வெம்பியவெருக்குடன்வில்வம்வெணமலர்
நம்பியவடுக்கலர்நந்திநாண்மல
ரம்புயங்காலையிலஷ்டபுட்பமே. (17)

## உச்சியிற் சாத்தும் அஷ்டபுட்பம். வேறு.

போதவிழ்பொன்னூமத்தைபுலிநகக்கொன்றைவெள்ளைப்
பாதிரிவன்னிசெய்யவழுதுணைபடர்மந்தாரை
பேதமாய்மலரும்வெள்ளைக்காக்கொன்றைபெரியதும்பை
யோதியவிவைகளெட்டுமுச்சியிலஷ்டபுட்பம். (18)

## அந்தி அர்த்தயாமம் புராணங்களிற் சாத்தும் அஷ்டபுட்பம்.

வந்தமல்லிகையிரண்டுமகிழ்தருமல்லிகைப்பூக்
கொந்துசேர்சண்பகப்பூச்சிறியசண்பகங்கொழுந்து
சிந்தைகூரஷ்டபுட்பஞ்சிவன்முடிக்கேறும்போழ்தி
லந்தியோடர்த்தயாமபுராணந்தனிலுமாமே. (19)

## புலரிமுதலிய காலமெல்லாவற்றிற்குமுரிய அஷ்டபுட்பம் வேறு.

இலகியபுன்னைவெள்ளெருக்குச்சண்பக
நிலவியவைபுரிலைப்பாதிரி
யலரிசெந்தாமரையஷ்டபுட்பமாம்
புலரியம்போதொடெப்பொழுதுஞ்சாத்தலாம். (20)

## மாதபுட்பம். வேறு

மெந்திபலாசபுன்னைவெள்ளெருக்கலரிப்போது
கொந்தலர்சண்பகப்பூக்கொன்றையேதும்பைசெய்ய
கத்திரிபட்டிகஞ்சங்காவியல்லிகையிராறுஞ்
சித்திரைமுதலாக்கொள்கசிறந்திடுமாதபுட்பம். (21)

## மகாபிடேகம். வேறு.

கொழுந்துசந்தனங்கூறியமுப்பழ
மமுதுபால்சர்க்கரைபணியாரமே
தலைப்புனலெண்ணெய்தழைநெய்யொடுகுதே
விழைந்தசொப்பொதிகப்பளம்வெண்டயிர் (22)

## கேதாரநாதர்க்குரிய பத்திரபுட்பம். வேறு.

வில்வமருச்சூதமத்தமாதுளையேகொச்சி
மேவியமுள்ளிலந்தைநறுங்கரந்தைசெழுவன்னி
சொல்லியநற்கரிசெல்லிசண்பகமேசாதி
தும்பையொடுமருதுமாமந்தாரமலரி

யெல்லவருமபுகழமர்ந்தவிஷ்ணுகாந்தி
யெழிற்றேவதாருவுடனெருக்கருகொன்றைக்கு
நல்லனவாம்பத்திரங்களிருபத்தொன்று
நாடரியகேதாரநாதனுக்கர்ச்சனையே. (23)

விநாயகசதுர்த்திக்குரிய பத்திரபுட்பம்.

மேதகுமாசிபச்சைநறுங்கையாந்தகரை
வில்வமுடனூமத்தைநொச்சிநாயுருவி
யேதமில்கத்தரிவன்னியலரிகாட்டாத்தி
யெருக்குமருதுடன்மால்பேரியம்புகாந்தி
மாதுளையேயுயர்தேவதாருமருநெல்லி
மன்னுசிறுசண்பகமேகெந்தளிபாதிரியே
யோதரியவறுகிவையோரிருபத்தொன்று
முயர்விநாயகசதுர்த்திக்குரைத்திடுபத்திரமே. (24)

புட்பஞ்சாத்துமுறைமை. வேறு.

முறையுமஷ்டபுட்பமுதலியசாத்தும்போதி
லிறைவனுக்கொருபூவேனுமெவ்வளவிற்குறையலசார்
நிறைவுறப்புனைதல்வேண்டுமென்மலர்கிடையாதாயிற்
குறைவறச்சொன்னபுட்பங்கூட்டியுங்கொள்ளலாமே. (25)

இதுவுமது. வேறு.

நறைமலர்ப்பொருட்டொன்றனைப்போக்கியே
குறையுறக்குற்றமாங்குறைபடாவகை
நிறைவுறச்சாத்துகநீரின்போகலாம்
புறனிதற்போக்கினும்புனிதமென்பவே. (26)

இன்னமலரின்னதேவர்க்காமெனல். வேறு.

வில்வமுடன்கொன்றைமலர்சங்கரற்குநேயம்
வேழமுகற்கருகு வெட்சிகடம்விசாகனுக்காம்

பன்றிகாடியெலிமுதலாப்பரமற்குரிமைப்பயன்படலா
மின்றாமுதலாநாயடியே னெல்லாப்பிறப்பும்வேண்டுவனால் (37)

## இன்னமலரின்னபாவத்தை நீக்குமெனல்

எள்ளுநெடும் பிரமகத்தி தன்னைநீக்கு
மிதழிநா யரைக்கொன்றை வேதநீக்கும்
வெள்ளெருக்குப் பாதார வினைதணிக்கும்
வில்வமது பொய்யுரைத்த வெம்மைநீக்குங்
கள்ளுணவு கோங்கம்பூப் புனையநீக்குஞ்
சத்தரியி னிலைபுனையக் குட்டநீக்கு
முள்ளியதெல் லாமெய்தும் வறுமைநீக்கு
மொண்டுழாய் மலர்களினு முயர்ச்சிதானே. (38)

தும்பைமலர் கோகத்தி தோஷநீக்குஞ்
சொன்னநயந்திடுகளவு பலாசுநீக்குந்
நம்பிதமை யனைக்கோற லறுகுநீக்குஞ்
சாத்திடுசந்தனமகா துக்கநீக்கு
மட்புவியி லிலிங்கபின்ன மசோகுநீக்கு
மடைந்தோர்தம் வறுமையெல்லா மான்பாவிக்கும்
வம்பவிழுநெய் நெல்லியிலை யுரோகநீக்கும்
வளர்நீலோற் பலநீக்கும் வாக்குத்தோஷம். (39)

## இன்னமலரின்னபோகத்தைத் தருமெனல்.

பாதிரியம்பிகைக்கனியி னில்லாளெய்தும்
பலாசமல ருச்சிக்கப் பணிகளுண்டாங்
கேதகையின் மலர்சாத்தச் சிவிகையெய்துங்
கிளர்முல்லை மலர்சாத்தக் கவிகையுண்டாந்
தாதுமா துளைசாத்தத் தனங்களெய்துந்
தாமரையின் மலர்சாத்தப் பகைதணிக்கு
மேதகுநாரத்தையிலை வியந்துசாத்தில்
விரைத்தகளா சாத்தியிடிற் பசுவுண்டாமே. (40)

தேக்கமழு மெஹுமிச்சைக் காடுபல்குஞ்
செங்கழுநீர் மலர்சாத்தப் புரவியெய்துங்
காக்கமழு மலர்சாத்தக் கமலைசேர்வாள்
கல்லார மலர்சாத்தப் புதல்வர்ப்பேறு
மாக்கமழு மெய்ந்நுக்காத் தங்களுண்டா
மதுவமிடை கம்பண்ணிற் கீதமுண்டாம்
பாக்கியங்க ளத்தனையும் வேண்டுமெனிற்
பரிமளமாமலரனைத்தும் பார்வதிக்கர்ச்சனையே. (41)

அரிசியோடறுகுசாத்த லருக்கியம்பூவினுமேல
பரிவுறக்கொடுத்தல்யாக புண்ணியம்பலவுமுண்டாம்
விரிமலர்நீலமத்த யாமத்தில்விசேடமாகும்
பரிமளந்தோய்த்துமீசன் பதமலர்சாத்தலாமே. (42)

## சூரியனுக்கு வில்வமும், விநாயகருக்குத் துளவமு மாகாமைக்குக் காரணம்.

சூரியன்றினத்திலீசன் சூடலாற்சூரியற்கு
சேரியவில்வமாகா வாயினாந்திருமாற்கு
பாரிதுலங்கொங்கையேபோ லையந்தலாற்றுளபந்தன்னைச்
சீரியமுன்னோன்வேண்டான் சிவன்சொலச்செவியிற்கே. (43)

## செவ்வந்திமலர்.

சாரமாமுனிவனன்று சாத்து செவ்வந்திப்பூவை
வாரமாஞ்டனே சூட மண்மாரியுறையூர்ப்பெய்தச்
சேரமான்பரவலான செம்பியன்பட்டதன்மை
யாரமாவுரைக்கற்பாலா ரரன்சிராப்பள்ளிதன்னில். (44)

## நந்தவனம் வைத்ததினாற் சிவத்துரோகந் தீர்ந்தமை.

வேறு.

அந்தணனாலயத்திலரன் பூசைக்கேறு
மாம்மைந்நறுங்கனிவாங்கித் தினசஞ்செய்ய
வந்தபெரும்பாவத்தா லரகபெய்த
மறைவியுடன்பாலயனு மறிமோனைப்பா.

விந்தநரகிவனெய்தும் காலமென்ன
விளன்கிளையிலொருவருமக் கின்னையாமெல
நந்தவனமுனியியற்றி நறும்பூச்சாத்த
நான்மறையோனம்மலரா னரகந்தீர்ந்தான். (45)

## வியாக்கிரபாதர் முதலியோர் பூவாலருச்சித்த முறைமை

வேறு.

சிறையளிபுகுதாமுன்னஞ் சிறுகாலையெழுந்திருந்து
பொறைமரம்வழுக்காதேறப் புலிநகம்பெற்றுமந்த
மறைமலர்ப்பழுதுபார்க்க நகந்தொறும்கண்படைத்தும்
குறையறப்புரிந்தான்பூஜை குயவரிப்பதத்திறனே. (46)

கங்கையின்மிதந்தபூவைக் கழுவியேயருச்சித்தோனும்
வெங்கலின்மலர்ப்பினோனும் விழிமலர்ச்சாத்தினோனு
மங்கையர்முலைமேற்கிள்ளித் தாம்பூலம்வைத்தோன்றானுந்
சங்கரற்குகந்தவன்பாற் றலையினைச்சாத்தினோனும். (47)

## நினைவு வேறுதலாகாதெனல்.

கொந்நலர்கொய்யும்போது கூர்விழிமையலாலே
பைந்தொடிமடவார்தம்மைப் பார்த்தலாற்கைலைவெற்பிற்
சுந்தரன்பட்டகாதை யறிதிரேநுணர்மெண்போதா
லந்தணர்கீழ்களாவார் கிழ்களந்தணர்களாவார். (48)

பெருக்கமாமலர்களேனும் பிஞ்ஞகன் பிரியங்கூரான்
சுருக்கமேயெனினுமையா தூய்மையே யணையுங்கண்டீ
நெருக்கமின்றிப்பூவு முதகமுப்பழதேயானு
லருட்கணுமுளவோகண்ணி லருவருத்திடவேனயன். (49)

## விரத்தர்தன்மை வேறு.

ஆர்விரக்தி முதிர்ந்தவர்க ளருச்சனையுஞ் செய்யவேண்டிற்
பூமரக்கி றுதிர்ந்தமலர் புன்சருகுங்கொள்ளமாட்டார்
மாமரத்தின் கோலொசித்து வாய்விளக்கமுங்கொள்ளார்
தாமரைநக்கர் தாக்கொள்வர் தாவரங்கள் பயியாமே. (50)

## மாவிளக்கிடுமுறைமை. வேறு.

தவறறப்பகலூணீக்கிச் சனிப்பிரதோடமாதல்
சிவநிசியாதல் வெண்டா மரையினூற்றிரியாற்றூண்டி
யவமறுசெஞ்சம்பாவி னரிசிமாவகலாப்பண்ணிக்
கபிலைநெய்கொண்டுதீபங் கண்டுளோர்கொண்டுளோமே. (51)

உத்தமமொருமுந்நாழி யொன்றரைநாழிநெய்தான்
மத்திமமதமந்தானு மற்றதிற்பாதிநெய்யாங்
கைத்திரியளவுகையிற் பருவிரற்கணிதமாகு
மத்திரியெரியுஞ்செந்தீ யங்குலமாறிரண்டே. (52)

புட்பவிதி முற்றிற்று.

---

## சப்தவிடங்க நடனங்கள்.

சீரார் திருவாரூர் தென்னாகை நள்ளாறு
காரார் மறைக்காடு காறாயில்—பேரான
ஒத்த திருவாய்மூர் உவந்த திருக்கோளிலி
சத்தவிடங்கத்தலம்.

1. திருவாரூர் - வீதிவிடங்கர் - அசபாநடனம்.
2. திருநாகைக்காரோணம் - சுந்தரவிடங்கர் - பாராவாரதரங்க நடனம் - வீசிநடனம்.
3. திருநள்ளாறு - நகவிடங்கர் - உன்மத்தநடனம்.
4. திருமறைக்காடு - புவனிவிடங்கர் - ஹம்சபாதநடனம்.
5. திருக்காறாயில் - ஆதிவிடங்கர் - குக்குடநடனம்.
6. திருவாய்மூர் - நீலவிடங்கர் - கமலநடனம்.
7. திருக்கோளிலி - அவனிவிடங்கர் - பிருங்கநடனம்.

உ

கணபதி துணை.

# பிரம்மோற்சவ தத்துவார்த்தம்.

உற்சவமாகுமுயர்தசநாளாம்
உற்சவந் தொடங்கல் உயர்கொடியேற்றல்
பரையின்வழியே பரைகொடியேற்றிப்
பேசாச்சிவத்தை பிரிவறக்கலந்து
ஆணவவரசு வலியிழந்தமர
ஆன்மாபெருஞ்சிவாநந்தமடையும்
ஆகவேமலநீக்க மடுத்துமுத்தியே
ஆகபத்துநா ளுற்சவமாகும்
(1) முதநாட்பசுவைப் பாசம்விட்டேற்றல்
(2) மறுநாட்பசுவின் றத்துவமடிக்கல்
(3) மூன்றுநாளில் மூவினைமுப்புத்தி
மூன்றுகுணமு மும்மனக்குற்றமென்
காமம்வெகுளி மயக்ககாரணமும்
பூமலிமூன்று பிறப்புமுப்பற்றும்
எழுதொகுதியு மகற்றிடலதுவே
(4) வாழுநாளுளில் மனமாதிதோற்றல்
(5) ஐந்தாநாளி லைம்பொறியவத்தைமலம்
(6) சிந்தியாறுநாள் ஆறத்துவாபகையும்
கன்மமலகுணமாறென்றலப்பற்றுவன்மெய்
மனனியநலந்தீது மருவல்பற்றறல்
சர்வரைநிந்தித்தல் நிந்தித்தாரைச்சாரல்
ஆகவிவைநீக்கல் ஹரிபிரமபதமாம்
போகசாலோக சாமீபசாரூபம்
அவ்வாறுபதமுத்தி யாகுவதிரண்டுமே
(7) எழாநாளி லெழுவகைப்பிறப்புடன்
எழுவித்தியாதத்துவம் எழுமாயையமலம்
(8) எட்டாநாளி லெண்குணம்விளக்கலாம்

(9) ஒன்பதாநாளி லோட்டல்மூவுருவும்
இன்பமுக்கிருத்திய மிருத்தல்மூவிடமென்
சுவர்க்கமத்திய பாதலமூன்றே
(10) பத்தாநாளிற் பரானந்தக்கடலில்
அத்துவித மாதலதுபற்றிப் புரிதலே

---

புரிதலிற்பரமன் முதநாள்விழாவே
விருட்சத்தடிக்காட்சி விழாவிரண்டில்
சூரியசந்திர பிரபைக்காட்சியாம்
மூன்றுநாணந்தி பூதவாகனமும்
நான்கா. நாள்பல்லக்கும் ஐம் முகநாகமும்
ஐந்திலிங்காகரம் வட்டபிரபையும்
ஆறுநாள்விழா யானைவாகனமாம்
ஏழாநாளி ரதாரூடக்காட்சி
எட்டாநாளி லேறுவாதசுவம்
ஒன்பதிற்பிட்சாடனமூர்த்திவாரல்
பத்திலைங்கிருத்திய பற்றஞ்சநடனம்
முத்திவிழாவேவு மொழிபதினொராநாள்
சத்திசேர்நடனர் தியாகேசர்தரிசனம்
இசைத்தவிப்பதினொன்றில் முதலைந்தேற்றம்
தோற்றக்கிரம பஞ்சக்கிருத்தியம்
மற்றவடுத்த வைந்துநாளுற்சவம்
இலயக்கிரம பஞ்சக்கிருத்தியவிளக்கம்
மீதியோர்நாளில் மேயவுவீற்றிருத்தலே
இவ்வகைகருணை யொழில்பெறப்பொழிந்து
பவம்விட்டுயிர்கள் பண்படநடிப்பன்
கருணைகருணை கருதருங்கருணை
கருணைகருணை கைலையன்கருணை
கருணைகருணை யளவிலாக்கருணை
கருணைகருணை காண்டருகருணையே. ([illegible])

திருச்சிற்றம்பலம்.

கணபதி துணை.

# வரலட்சுமி விரதம்.



கைலாய பர்வதத்தில் வச்சிர வைடூரிய மரகத மாணிக்கங்களுடன், பஞ்சரத்நங்களுடன், தேவதைகளுடனும், பிரமருஷி ரிஷீஸ்வரர்களுடனும் இருக்கப்பட்ட மகாசபையில் ரத்ன பீடத்தில் பார்வதி பரமேஸ்வரருடன் எழுந்தருளியிருக்கும்போது சூதபுராணிகர் சவுனகாதி மகரிஷிகளுக்கு சொல்லிவருகிறார். ஓ ரிஷீஸ்வரர்களே! ஸ்திரீகளுக்கெல்லாம் மகா சம்பத்துண்டாக மகாவிரதம் ஒன்றிருக்கின்றது. அதை பரமேஸ்வரர் பார்வதிதேவிக்கு சொல்லுகிறார். அந்தமகாவிரத முண்டே அந்த விரதத்தை தாங்கள் விவரமாக சொல்லவேணுமென்று கேட்டார். ஸ்ரீகளெல்லாம் இந்த விரதத்தை ஆராதித்தால் சம்பத்துண்டாகும்படியாயும் அஷ்ட ஐஸ்வர்யமும் புத்திரசம்பத்தும் உண்டாகும்படியாயுமிருக்கப்பட்ட விரதத்தை சொல்லும்படி கேட்டுக்கொண்டாள். சுவாமி சொல்லுகிறார். ஓ பார்வதி ஸ்ரீகளுக்கு அநேக சம்பத்துண்டாகும்படி இருக்கப்பட்ட மகாவிரதத்தை சொல்லுகிறேன் கேளென்று சொன்னார். ஸ்ரீவைகுண்டபதியான ஸ்ரீமன் மகாவிஷ்ணுவின் பாரியான வரலட்சுமி என்ற மகாவிரதமிருக்கிறது அந்த விரதமாகப்பட்டது ஆவணிமீ சுக்கிலபக்ஷம் பவுர்ணமிக்குமுந்தி வந்த வெள்ளிக்கிழமை வருகிறதோ அந்த வெள்ளிக்கிழமைதினம் அந்த விரதத்தை செய்யவேண்டியது. ஓ மகானுபாவா தாங்கள் சொன்ன விரதம் மகா உத்தமமாயிருக்கிறது எப்படி செய்யவேண்டுமென்றும் எவ்விதம் அநுஷ்டிக்கவேண்டுமென்று கேட்டார். அன்று காலை ஸ்நானஞ்செய்து, வீட்டை சுத்திசெய்து, மண்டபமலங்கரித்து கோலமுதலியது போட்டு புஷ்பங்களாலலங்கரித்து சுவர்ணத்தினாலும் அல்லது வெள்ளி தாமரத்தினாலேனும் கலசம்செய்து அதற்கு புஷ்ப அலங்காரமுதலியது செய்வித்து சாயந்திரம் 4-மணி

பசுக்கள் வரும் சமயத்தில் கலசஸ்தாபனம் செய்து பலவித கனிவர்க்கங்களாலேயும் நெய்வேத்தியங்களாலேயும் விதிப்படி மந்திரஞ் சொல்லி பூஜை செய்துவரவேண்டியது. பூர்வகாலத்தில் இந்த விரதத்தை யார் அனுஷ்டித்துவந்தார்கள் அந்த விவரத்தை சொல்லும்படி கேட்டுக்கொண்டாள். பகவான் சொல்லுகிறார்-பார்வதி பூர்வகாலத்தில் மகததேசமிருந்தது அதில் குண்டினம் என்ற நகரமிருந்தது. அந்தவூர் குபேரதேசம்போலிருந்தது, அந்த ஊரில் ஓர் தரித்திரனே கிடையாது. அந்த பட்டிணத்தில் சாருமதி என்ற ஓர் பெண்ணிருந்தாள் அந்தப் பெண் புருஷனையும் மாமி, மாமனாரையும் தேவரென்று பாவித்துக்கொண்டு அவாள் வார்த்தைகளுக்கு யாதொரு பதில் சொல்லாமல் அவர்களிஷ்டப்படி சிசுருஷை செய்துகொண்டுவந்தாள், தேவதாபக்தியுடையவளாயிருந்தாள். ஓர்நாள் வீட்டில் ஜாஸ்தி வேலையிருந்தபடியால் அயர்ந்து தூங்கிவிட்டாள் தூங்குகிறகாலத்தில் மகாலட்சுமி என்பவள் சாருமதி சொர்ப்பனத்தில் வந்து தட்டியெழுப்பி ஓ மகாபதிவிரதே! உன்னைப்போலிப் பூலோகத்தில் ஒருவருமில்லை என்று சகல ஆபரணத்துடன் தரிசனம் கொடுத்தாள், ஓசாருமதி, இப்பூலோகத்தில் கிரகவேலை செய்துகொண்டும் சதா பகவத்தியானம் செய்துக்கொண்டு வந்தாயே உன்னைப்போலுள்ள மகாபதிவிரதை இப்பூலோகத்தி லொருவருமில்லை என்று உனக்கு இவ்வித தரிசனம் தந்தேன் என்றாள் உடனே சாருமதி அநேகவிதமான ஸ்தோத்திரங்கள் செய்தாள். அந்த ஸ்தோத்திரத்தை மெச்சி மூன்று வரம் கொடுத்து அந்தரத்தியானமாய் விட்டாள். 1-வது எப்போதும் அஷ்ட ஐயிஸ்வர்யத்தோடிருக்கும்படியாயும், 2-வது தன்னை மறக்காமலிந்த விரதத்தை செய்துவரும்படியாயும், 3-வது அந்திமகாலத்தில் பகவானுடைய பாதாரவிந்தத்தில் சேரும்படியாயும் சொன்னாள். உடனே எழுந்திருந்து சாருமதி கைகால் சுத்திசெய்து தன்னுடைய பர்த்தாவையும், மாமி, மாமனாரையும் சுற்றிவந்து நமஸ்காரம் செய்து தான் சொற்பனத்தில் கண்ட சங்கதிகளையெல்லாம் சொல்லிக்கொண்டிருக்கும்போது அக்கம்பக்கம் வீட்டுக்காரர் சங்கதி கேட்டுக்கொண்டு கண்ட சொற்பனத்தைவிவரமாய் சொன்னாள் இந்த சொற்பன சமாசாரம் ஊரெல்லாம் கேட்டு பரவிவிட்டது உன்னைப்போல் பத்தினி யாரி

ருக்கிறார்களென்றும் யாவரும் சொல்லிக்கொண்டார்கள். சார்மதியி டத்தில் இந்த விவரத்தை யாவரும் கொண்டாடுவோம், வரும் தேதியை எங்களுக்கு முந்தித்தெரிவித்தாலவ்விரதத்தை முடித்து யாவரும் க்ஷேமமாயிருப்போமென்று சொன்னார்கள். பட்டணம் முழுதும் இவ்விரதம் எப்போது வரப்போகிறதென்று தபசு செய்துகொண்டிருந்தார்கள் வரும்தேதி பட்டணமுழுதும் தெரிந்து ஸ்நானம் செய்து அநேகவித கனிவர்க்கங்களும் பலவித புஷ்பங்களும் நெய்வேத்தியத்துடன் தாரங்களை அநேக மேளவாத்தியங்களுடன் வரிசைவரிசையாய்ப்பட்டணமுழுதும் வரிசையுடன் சார்மதி வீட்டுக்கு வந்து பூஜை செய்தார்கள். பத்மாசனே! பத்மகரே! சர்வலோகைகபூஜிதே! நாராயணப்பிரியேதேவி! சுப்ரீதாபவசர்வதா! என்று தியானித்துக்கொண்டு சோடச உபசாரத்துடன் தோராம் தரித்துக்கொண்டு பிராமணர்களுக்கு தக்ஷிணை தாம்பூலம் கொடுத்து ஆலாத்தி எடுத்தபிறகு சார்மதியிடம் நீ எடுத்துக்கொண்ட பிரயாசைக்கு நாங்கள் கடைத்தேறினோமென்று சாயந்திரம் அவரவர்கள் வீடு போய் சேர்ந்தார்கள் இவ்விரதத்தை கொண்டாடினதால் முன்னிருந்த அயிஸ்வரியத்தைவிட அஷ்ட அயிஸ்வரியங்களுடன் புத்திரசந்தானமுண்டாகி அவாவாவாளிருப்பிடம் சொர்ணமயமாயமைந்து யிருப்பிடம் தெரிந்து சார்மதியையும் பார்வதியையும் யாவரும் கொண்டாடினார்கள். இந்த விரதத்தை பூலோகத்தில் யார் யார் அனுஷ்டிக்கிறார்களோ அவரவர்களுக்கு அஷ்டஅயிஸ்வர்யமும் மனதின் கோரிக்கைப்படிக்கும் புத்திரசந்தானமுண்டாகுமென்று பார்வதிதேவிக்கு பரமேஸ்வரர் உபதேசித்தார்.

இவ்விரதத்தை யுரைத்தவர், படித்தோர், எழுதினோர், கேட்டுளோர், செப்பினோர் தீமையிலிருந்து நீங்கி எப்பெருஞ்சிறப்பையுமமைந்து வாழ்வுடன் தீர்க்காயுளுமுளராய் ஒப்பருங்கதியினிலை பெற விளங்கியும பெரும்புகழ் வாழ்பவரே.

---

கருத்தனைப் பாடமாட்டேன் காம்பனதோளிபங்கா
வொருத்தாலறியவொண்ணாத் திருவுருவுடைய சோதி
திருத்தமாந்தில்லை தன்னுட் டிகழ்ந்தசிற் றம்பலத்தே
னிருத்தநான் காணவேண்டி நேர்பட வந்தவாறே.

சிவமயம்.

# விநாயகர் சதுர்த்தி விரதம்.



சிவபெருமான் கங்கையை கல்யாணஞ் செய்துக்கொள்ளுகின் முன்னர்த் தம்மைச் செய்துக்கொள்ளவேண்டுமென்னும் கருத்தினோடு தந்தையாகிய பர்வதராஜனையடைந்து தமதெண்ணத்தைத்தெரிவித்து இது நிறைவேறத்தக்க ஓர் விரதத்தை யுணர்த்தவேண்டுமென்று வினவ அதனை யம்மலையரசன் கேட்டு மனமகிழ்ந்து அதற்குத்தக்கபடி ஓர் விரதத்தை யாராய்ந்துணர்ந்து சொல்லுவாராயினர். தாயே! இக்கிரதச்சிறப்பையுடையதும் விரைவில் நற்பயன்களையளிப்பதும் இந்திரன் சாபத்தை நீக்கியதும் பிரமனுக்குஞ் சிருட்டியாதி தொழில்களைத் தந்ததும் சகலவிடர்களை நீக்கத்தக்கதும் சகல பொருள்களையுமளிக்கத்தக்கதும் இன்னுமிவை முதலான அளவற்ற மகிமைகளையுடைய ஒரு விரதமிருக்கின்றது அவ்விரதம் தேவதேவர்களாகியும் மூவர் முதல்வராகியும் முத்தொழிற்குங் காரணராகியுமிருக்கின்ற யானைமுகக்கடவுளுடைய சதுர்த்தி விரதத்தையும் அனுட்டிக்கு முறைமையுஞ் சொல்லத்தொடங்கினர்.

ஆவணிமாதம் பூர்வபக்ஷத்தில் வருகின்ற சதுர்த்தி தினத்தில் அவ்விரதத்தை யாரம்பிக்கவேண்டும் அவ்வண்ணமாரம்பிப்பவர்கள் அத்தினம் அதிகாலையிலெழுந்து ஸ்நானம் செய்து நித்தியானுஷ்டானங்களை நிறைவேற்றி அபிஷேகத்திற்குரிய திரவியங்களையும், அருச்சிக்கற்கேற்ற மலர்களையும், நிவேதனத்திற்குத்தக்க பதார்த்தங்களையும் தூபதீபங்கட்கு வேண்டும் பொருள்களையுஞ் சேகரித்து ஓர் பூஜா மண்டபத்தை யழகுபொருந்தவமைத்து பரிசுத்தமான விடத்தில் மிருத்திகை யெடுத்துவந்து அதில் வேர்கள் செல்லு முதலிய ஜெந்துக்கள், கல்லுகள் என்னு மிக்குற்றங்களில்லாமற் சோதித்து அதனைப் பிசைந்து சிற்பசாஸ்திரத்திற் கூறியிருக்கின்ற

முறைமைப்படி. விநாயக மூர்த்தியினுடைய திருவுருவமமைக்கவேண்டும் இதுவன்றியும் பொன்னினொரு திருவுருவமமைக்கவேண்டும் செய்யச் சத்தியில்லாதவர்களாயின் ஒருபலம் அரைபலம் காற்பலம் என்னு மிவ்விதம் அளவின் மேனும் சமைத்தல்வேண்டும் பின்னர் ஆசிரியரின் உத்தரவின்படி சுத்த கங்கையில் ஸ்நானஞ் செய்து திருவெண்ணீறணிந்து சிரம், கண்டம், கரம், செவி என்னு மிவ்விடங்களில் உருத்திராக்ஷ கண்டிகை தரித்து மேற்சொன்ன பூசாமண்டபத்திற்கு வந்து தண்டுலம் பரப்பி அதன்மேல் இவை யிற்றிரி நிரப்பியிருக்கின்ற பொற்கும்பத்தை வைத்து முன்னாகச் சமைத்திருக்கின்ற விக்கினேசமூர்த்தியையும் பொன் மூர்த்தியையும் அதன் மேலெழுந்தருளச் செய்து ஆகமவிதிப்படி பூசித்து ஒன்று இரண்டு நான்கு ஐந்து ஆறு எட்டு பத்து பன்னிரண்டு இருபத்தெட்டென்று எழுத்துக்களுள்ள மந்திரங்களுள் ஒரு மந்திரத்தைச் செபிக்கவேண்டும் இவற்றுள் ஒன்று இரண்டு நான்கு என்னு மெழுத்துக்களுள்ள மந்திரங்களை இலக்ஷ உருச் செபிக்கவேண்டும். அதற்குக் கூடாமையின் அவ்வெண்ணிற் பாதியுருவேனுஞ் செபிக்கவேண்டும். ஐந்து ஆறு எட்டு பத்து பன்னிரண்டு என்னு மெழுத்துக்களுள்ள மந்திரங்களை நூறாயிரமுருச் செபிக்கவேண்டும். அதற்குக் கூடாமையின் பதினாயிரமுருவேனுஞ் செபிக்கவேண்டும். இருபத்தெட்டெழுத்துள்ள மந்திரத்தை குறைவில்லாமற் பதினாயிரம் உருச் செபிக்கவேண்டும். இவ்வாறு செபிக்குங்காலையிற் பத்துக்கொருகால் தருப்பணஞ் செய்யவேண்டும் பத்துத்தருப்பணத்திற்கொருகால் ஒரு ஓமஞ்செய்யவேண்டும். பத்து ஓமத்திற்கொருகால் அறுசுவை பதார்த்தங்களோடு அன்னதானஞ் செய்யவேண்டும். இந்தக்கிரமமாக பூசை செய்து நிறைவேற்றுங்காலத்தில் பொன், பூமி முதலானவைகளை தானஞ் செய்யவேண்டும். அதிகமாகச் சுக்கிலபக்ஷசதுர்த்தி வரையில் நாள்தோறும் மேற்சொல்லிய முறைமைப்படி பூசைசெய்து மிருத்திகையினால் செய்யப்பட்ட விநாயகமூர்த்தியை நிருத்தகீதவாத்தியங்களோடுமெழுந்தருளச்செய்து மடுவிலாவது, தடாகத்திலாவது, நதியிலாவது வைத்துவிடவேண்டும்.

இவ்வாறு பூசை செய்கின்ற முப்பதுநாளும் ஆகாரநித்திரையில்லாமல் சத்தாதிவிஷயங்களை நிக்கிரகித்து முப்பத்தோராநாள் விருந்து, ஒக்கல், அதிதிகள், பரதேசிகள் முதலானவர்களோடு போஜனம் செய்யவேண்டும். முப்பதுநாளும் ஆகாரமின்றி யிருக்கச் சக்தியில்லாதவர்கள் இவ்விரதத்தை யாரம்பிக்கு முதல் தினத்திலாவது அவ்வாறிருந்து மறுநாள்தொட்டு அவிசு, பழம், பால் இவைகளிலொன்றைப் புசித்துக்கொண்டு விரதமனுட்டிக்கவேண்டும். முப்பதுநாள் அனுட்டிக்கமாட்டாதவர்கள் ஆரம்பித்த ஒருநாள்மாத்திரமாவது ஆகார முதலியவைகளை நிக்கிரகித்து மேற்சொன்ன முறைப்படி யனுட்டிக்கவேண்டும். தானஞ் செய்யு முறைமையில் அவரவர்கள் செல்வத்திற்குத் தக்கபடி செய்யவேண்டும். எவ்விதத்தேனும் இருபத்தோர் பேருக்கு அன்னதானம் செய்துவரவேண்டும் அன்றியும் ஒருநவத்திற்பூசிக்கிறவர்கள் தனதானிய புத்திரசம்பத்துண்டாகி அநேக பந்துவர்க்கங்களோடும் வாழ்ந்திருப்பார்கள். இரண்டுருவங்களிற் பூசிப்பவர்கள் தங்கள் கருத்தின்படி அளவற்ற காரியங்களெல்லாஞ் சித்தியாகப்பெறுவார்கள். மூன்றுருவங்களிற் பூசிப்பவர்கள் நவரத்தினங்களு மலைபோலக் குவித்திருக்கப்பெறுவார்கள். நாலுருவங்களிற் பூசிப்பவர்கள் தர்மமுதலிய நான்கு புருஷார்த்தங்களும் கிடைக்கப்பெறுவார்கள். ஐந்துருவங்களிற் பூசிப்பவர்கள் சார்வபௌமராக வாழ்வார்கள். ஆறுருவங்களிற் பூசிப்பவர்கள் சிருட்டியாதி முத்தொழில்கட்குந் தலைவராவார்கள் ஏழு, எட்டு, ஒன்பது என்னுமிவ்வுருவங்களிற் பூசிப்பவர்கள் சர்வஞ்ஞத்துவமுடையவராவார்கள் பத்துவடிவங்களிற் பூசிப்பவர்கள் நிகழ்காலம் இறந்தகாலம் எதிர்காலம் என்னுந் திரிகால ஞானத்தையுடையவராவார்கள் இதைப் பத்துருவங்களிற் செய்யும் பூசாபலத்தினால் சனகராதி முனிவர்களும் விண்டுவாதி தேவர்களும் அளவற்ற அதிகாரங்களைப் பெற்றார்கள். பதினொருருவங்களிற் பூசிப்பவர்கள் சகல துன்பங்களுந் தொலையப்பெறுவார்கள். பன்னிரண்டுமுதல் நூற்றெட்டுருவங்கள்வரையிற் பூசிப்பவர்கள் ஒன்றுக்கொன்று மேலான பயன்களையெல்லாங் கிடைக்கப்பெறுவார்கள் ஆயிர உருவங்களிற் பூசிப்பவர்கள் இம்மையில் மலவிருளினின்று நீங்கி மெய்ஞ்ஞான சுகத்தைப்பெற்று

வாழ்வதன்றி மறுமையில் மோக்ஷ சாம்பிராச்சியத்தை யடைந்து தங்களிருபத்தொரு தலைமுறைகளிலுள்ளவர்களையு முத்தியிற் சேர்ப்பார்கள்.

மேலும் அம்மூர்த்திகளை மூன்றுநாள் பூசை செய்தால் சகல வியாதிகளுடன் இடர்களுந் தொலையும் ஒன்பதுநாள் பூசை செய்தால் அனந்த சித்திகளு முண்டாகும். இருபத்தொருநாள்வரையில் பூசித்தா லெல்லாப் பாதகங்களுந் தீரும். இடைவிடாது அறுபதுநாள்வரையில் பூசித்தால் விநாயகமூர்த்தியினுடைய சாயுச்சியபதவியை யடைவார்கள். இவ்வாறு அவரவர்கள் சக்திக்கேற்றபடி அத்தனை மூர்த்திகளைப் பூசித்தாலும் அப்பூசனையில் மூலமந்திரம் பஞ்சாட்சர மந்திரம் ஷடாட்சரமந்திரம் என்னும் இம்மூன்றிலொன்றைச் செபித்து முடிவில் தர்ப்பணாதிகளை முடித்துக் கடைசியில் அன்னதானஞ் செய்யவேண்டுமென்று சொல்ல அவையனைத்தையும் பார்வதி தேவியார் கேட்டு மனமகிழ்ந்து இவ்விரதத்தை முன்னர் யாரனுஷ்டித்திருக்கிறார்களென்று கேட்கப் பரமசிவன் சொல்லுகிறார்.

இப்படியிருக்க சகல தேவர்களுடன் சிவபெருமான் கைலாயத்தில் எழுந்தருளியிருக்கின்றபோது சுப்பிரமணியக்கடவுள் தகப்பனைப் பலமுறை வணங்கி அளவற்ற விரதங்களுள் மேலான விரதமாகவும் விரைவில் சகல பயன்களையு மளிக்கவல்லதாகவும் மிகவும் செவ்வையானதாகவுமிருக்கின்ற ஓர் விரதத்தை அடியேனுக்கு திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்ன அதற்கு கர்த்தன் கிருபைகூர்ந்து மைந்தனே சகல விரதங்கட்கு மேலானது விநாயகமூர்த்தியினுடைய சதுர்த்தி விரதமாகும் அதுவே நினைத்த காரியங்களை விரைவில் முடிக்கத்தக்கது. அதுவே யாவினும் செவ்வையாயிருப்பதென்று சொல்லியருளினார். அதனைத் தெய்வமகக்கடவுள் கேட்டு ஒன்றிருக்க மற்றொன்றைத் தேவரீர் திருவாய் மலர்ந்தருளியது அடியேன் சிறுபிள்ளையென்று நினைத்தோ தேவரீரது விரதங்கள் அளவற்றதாயிருக்க அவற்றிலொன்றை யனுக்கிரகம் செய்யாமல் விநாயகமூர்த்தியினுடைய விரதத்தையே மேலானதாகத் தெரிவித்தீர் அவ்விநாயகமூர்த்தி அடியேனுக்கு மூத்தவராயினும் தேவரீருக்கு புத்திரரல்லவோ வென்றும் சகலபுவனகா சொரூபியாகிய

தேவரீரினும் அவர் மேலானவராயிருக்கின் சுவாமிகளனுக்கிரகித்த வாறு அவர் விரதம் மேலானதாகவே இருக்கும். ஆதலால் அடியேன் பனதிற் ஒன்றாகியும், பலவாகியும், அருவாகியும், உருவாகியும் எல்லா உலகத்தினும் நீக்கமற நிறைந்திருக்கின்ற சுயஞ்சோதி சொரூபமே உலகமெலாம் உய்யும்படியாகவும் சகல புவனங்களுந் தமது சரணபங்கயங்களைத் தொழுது முத்தியடையும்படியாகவும் பிரணவத்தினின்றுஞ் சகளீகரித்துக் கணபதியென்னுந் திருநாமத்தை வகித்திருக்கின்றது. மேலும் அக்கணபதிமூர்த்தியே முன்னர் யாம் திரிபுரத்தை யெரிக்கத்தக்க மந்திரத்தை யெமக்குபதேசித்தவர் அவரே சிருட்டி, திதி, சங்காரமென்கிற முத்தொழில்களைப் பிரமன் விண்டு உருத்திரனாகிய எங்கள் மூவருக்கும் அருளிச் செய்தவர் இவ்வுலகத்தில் துஷ்டஜன நிக்கிரகஞ் சிஷ்டபரிபாலனஞ் செய்யும்பொருட்டு அனந்தமுறை வேறு வேறு திருவவதாரங்களைக் கொண்டிருக்கின்றனர். மற்றோரவதாரத்தில் நமக்கு புத்திரராக அவதரித்திருக்கின்றனர். யாங்களிருவரும் உடலுமுயிரும்போல மருவியிருத்தலினால் சகல வேதாகம புராணங்கள் எங்களிருவரையும் ஒன்றாகச் சொல்லுமேயன்றி வேறுபடுத்தாது. எங்களைத் தியானிக்கின்ற பெரியோர்களும் அவ்வாறே தியானிப்பார்கள் ஆதலால் அவ்விநாயகமூர்த்தியே மேலான மூர்த்தி அவரது சதுர்த்தி விரதமே மேலான விரதமென்றும் அவ்விரதத்தை யனுட்டிப்பவர்கள் யாவரேயாயினும் அவர்கட்கு மாயாசம்பிரதம், சத்துவ சம்பிரம், யோகினி ஜாலம், மாலினிவித்தை, மகாசம்மோகனம், மனோபேதம், தந்திரபேதம், குய்யதந்திரம், கலாவாதம், கலாசாரம், குண்டிகாமதம், அஞ்சனவித்தை, பாதுகைவானபாத்திரம், பரகாயப்பிரவேசம், ரசவாதம், பைபீலவாதம், சங்கிராமவிலக்கணம் முதலிய எல்லா வித்தைகளும் கைகூடிவரும்.

திருச்சிற்றம்பலம்.



கேட்டிலேன் கிளை பிரியேன் கேட்குமா கேட்டியாகி
ஞாட்டினே னின்றன்பாக நடப்பட நெஞ்சினுள்ளே
மாட்டினீர் வாளைபாயு மல்குசிற்றம்பலத்தே
கூட்டமாங் குவிமுலையாள் கூடநீயாடுமாறே.

உ

சிவமயம்.

# அனந்த விரதம்.

சுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்ப்புஜம்
பிரசன்ன வதனம் தியாயேத் ஸர்வ விக்னோப சாந்தயே.

சங்கல்பம்

சுபே சோபனே முகூர்த்தே ... குண விசேஷண விசிஷ்டாயாம் சுபதிதௌ அஸ்மாகம் சகுடும்பானாம் க்ஷேமஸ்தைரிய விஜய ஆயுராரோக்கிய ஐஸ்வர்யாபிவிருத்தியர்த்தம் தர்மார்த்த காமமோக்ஷ சதுர்வித பலபுருஷார்த்த சித்தியர்த்தம் ஸந்தான சௌபாக்கிய சம்பத் அபாததீர்த்தம் வர்ஷேவர்ஷே பிரயுக்த ஸ்ரீ அனந்தபத்மநாப தேவதா உத்திஸ்ய ஸ்ரீ அனந்தபத்மநாப தேவதா பிரீத்யர்த்தம் பத்மபுராணோக்த பிரகாரேண யாவச்சக்தி தியான ஆவாஹனாதி ஷோடச உபசார பூஜாம் கரிஷ்யே.

கலசபூஜாஞ்ச கரிஷ்யே.

பஞ்சபாண்டவர்கள் துரியோதனாதிகளிடம் சொக்கட்டாடி தோற்று ராஜியங்களை அவர்களிடம் ஒப்புவித்துவிட்டு வனவாசம் செய்துகொண்டிருக்குங்காலத்தில் அந்த ஆரண்ணியத்தில் மிகுந்த கஷ்டத்தை யனுபவித்துக்கொண்டிருந்தசமயத்தில் ஸ்ரீகிருஷ்ணபகவான் பிரசன்னமாய் இவ்விரதத்தை யனுஷ்டித்துவந்தால் அனந்தமான பலனையும் கொடுக்குமென்றும் அவ்விரதம புரட்டாசிமாதம் சுக்கிலபக்ஷ சதுர்த்தசிதினத்தில் கொண்டாடவேண்டுமென்றும் சொன்னார். விரதத்திற்கு தேவதை யாரென்று கேட்க நான் தவிர வேறொருவருமில்லையென்று சொன்னார் அப்போதும் நம்பிக்கையில்லாதது தெரிந்தவுடன் தன் விராட சொரூபத்தைக் காட்டினார். அப்போது பயங்கரமுண்டாய் தான் செய்தது அபசாரமென்றும் வருந்தி கேட்டுக்கொண்டபிறகு மன்னித்து மறுபடி உபதேசம் செய்தார். பூர்வத்தில் இந்த விரதத்தை யார் அனு

ஷ்டித்தார்களென்றும் அதை தெரிவிக்கும்படி கேட்டுக்கொள்ள தர்மராஜாவுக்கு கிருஷ்ணபகவான் சொல்லத்தொடங்கினார். கிரேதாயுகத்தில் வசிஷ்ட கோத்திரத்தில் உற்பத்தியான மகாசாஸ்திரங்களைப் படித்து தீரனான சுமந்தன் என்னும் ஓர் பிராமணனிருந்தார் அவருக்கு பிருகுமகாரிஷியின் குமாரத்தி தீக்ஷாதேவியை விவாகம் செய்துகொண்டார் பிறகு தன்னுடைய பர்த்தாவை பகவானாக எண்ணிக்கொண்டு அந்தந்தகாலத்தில் செய்யவேண்டிய சிசுவிடைகளைச் செய்துகொண்டுவந்தாள். அப்படி இருக்குங்காலத்தில் அந்த அம்மாளுக்கு ஓர் பெண் பிறந்தது அந்த பெண்ணின் பெயர் சுசீலை என்று நாமதேயமிட்டார்கள் அந்தப் பெண்ணும் வயதுவந்ததுமுதல் 12-வயதுவரையில் தாயைப்போல் தகப்பனுக்கு சிசுவிடை செய்துவந்தாள். இந்தப் பெண் தாய் தகப்பன் வார்த்தையை மீறி நடந்ததேயில்லை. தீக்ஷாதேவி இறந்துவிட்டாள். பிறகு சுமந்தனுக்கு பெண்ணை தக்க புருஷனுக்கு விவாகம் செய்துகொடுக்கவேண்டுமென்ற கவலை மேலிட்டுக்கொண்டேயிருந்தது. சாஸ்திரவிதிப்படி இரண்டாவது கர்க்கசி என்னும் பெண்ணை விவாகம் செய்துகொண்டார் பர்த்தாவுக்கு விரோதமாயும் கடின சிந்தையோடும் சிசுவிடைக்கெல்லாம் பிரதிகூலமாய் வேறுமாறாக செய்துகொண்டுவந்தாள் ஷை சுமந்தன் செய்துகொண்டுவந்த தபத்தால் நிலைநின்று கவுண்டின்யமகாரிஷி மேற்படி சுமந்தன் வீட்டிற்கு தானாய் வந்தார் அப்போது சுமந்தனை தன் குமாரத்திக்கு விவாகமாகாமலிருக்கும் விவரத்தையும் தன்னுடைய குறைகளையும் வாசிப்பின் சாமர்த்தியத்தையுமறிந்து ஷை கவுண்டின்யமகாரிஷி ஷை பெண்ணை விவாகம் செய்துகொண்டார் இவருக்கு கொடுக்கவேண்டிய சீர்களை ஷை சுமந்தன் இரண்டாவது சம்சாரம் கொடாமல தன் பர்த்தா இஷ்டத்திற்கு விரோதமாய் நடந்துகொண்டாளை ஷை சுமந்தன் தன்வசமிருந்த சில தனங்களையு [illegible] பொரி, பொரிமாவு முதலிய தின்பண்டங்களைக் கொடுத் [illegible] னோடு சேர்த்து அவ [illegible] ஆசிரமத்திற்கு அனுப்பிவிட்டார [illegible] கவுண்டின்யமகாரிஷியும் அவர் [illegible] வழியில் [illegible] போகு [illegible] வழியில் [illegible] தன் [illegible] க நதியை [illegible] றங்க

வேண்டாமென்று சொல்லிவிட்டு ஸ்நானத்துக்குப் போய்விட்டார் நதியிலுண்டான தேவதா ஸ்திரீ கோஷ்டத்தைக் கேட்டுப்போய் பார்க்குமளவில் லௌகிக ஜனங்கள் அனந்தவிரத நோம்பை கொண்டாடுவதைத் தெரிந்து தானும் அவ்விரதத்தை முடித்து தகப்பன் கொடுத்த பொரிமாவை நிவேதனம் செய்து தாரத்தை கழுத்தில தரித்துக்கொண்டு பர்த்தா வருவதற்குள் வண்டியிலமர்ந்தவுடன் ஸ்நானத்துக்குப் போன தன்பர்த்தா வந்தவுடன் தகப்பன் கொடுத்த பொரிமாவையும புசித்துக்கொண்டு வீடு போய் சேர்ந்தார்கள் ஸ்ரீ கவுண்டிகமகரிஷிக்கு முன்னிருந்த வீடு அடையாளம் தெரியாமல் வீடு முழுதும சொர்ணமயமாயும நவரத்தின மிழைத்ததுபோலிருந்ததைப்பார்த்து நாம் ஸ்தலயாத்திரை செய்த பலனோ அலலது தன்மனைவியின் தபோபலனோ யாதொன்றும தெரியவில்லையே இதுவும் எம்பெருமானிட கடாட்சமேதவிர வேறொன்றுமில்லை என்று நினைத்துக்கொண்டு சந்தோஷமாயிருந்தார்கள். ஒருநாள் காலையில் ஓமம் நடத்த அக்கினிகொண்டு வரும்படி பாரியைக்கு ஆக்யாபித்தார் கொண்டுவரும்போது தோரணம் கழுத்திலணிந்து கொண்டிருப்பது தெரிந்து கேட்டபோது நடந்த வாத்தமானத்தை ஒளியாமல்சொன்னாள் அதை நம்பாமல் தோரணத்தை பிடுங்கி அக்கினியில் போட்டுவிட்டார் உண்மையை பர்த்தாவிடம் சொல்லியும அக்கினியில போட்டதை நினைத்து உரியில் வைத்தாள் அதிலொரு பொறியிருந்து வீடு முழுதும பற்றிக் கொண்டதும் தவிர அன்று ராத்திரி கள்வர்கள் பொருள்களை அபகரித்துப்போய் விட்டார்கள் கவுண்டின மகரிஷி அதுமுதல் புத்திசுவாதீனமில்லாமல் போய்விட்டது பிறகு எம்பெருமான் கடாட்சத்தால் பிரதி சுய புத்தி வந்து அனந்தவிரத பத்மநாபரை தூஷித்ததாலிம்மாதிரி கெடுதி உண்டானதென்று அவரை யின்று சூரிய உதயமுதல் அஸ்தமனத்திற்குள் பாராவிட்டால் உயிரை மாற்றிக்கொள்வதென்று மன உறுதியோடு ஆரண்ணியத்துக்கு புறப்பட்டு விட்டார் வழியில் பெருத்த மாவிருக்ஷத்தைக்கண்டு அனந்த பத்மநாபஸ்வாமியை பார்த்தீரா வென்று கேட்டார். தான பார்க்கவில்லை நானும் விருக்ஷம் முழுதும பூ, காய், கனி முதலியவை உண்டாயும் ஒருவரும் புசியாமல் முதலனுகாமலிருக்கிறது. இதின்

வர்த்தமானத்தையும் சுவாமியைக்கண்டால் தெரிந்து வரும்படி வேண்டிக்கொள்ள பிறகு சிலதூரம்போனபோது நிலத்தில் எதேஷ்டமாய் பசும் புல்லின் மத்தியில் ஓர் பசு நின்றுகொண்டு புல்லைத் தின்னாமல் நின்றுகொண்டிருந்தது அதைக்கண்டு அனந்தபத்மநாப சுவாமியை பார்த்தேயாவென்று கேட்டார் நான பார்க்கவில்லை சுவாமியைக்கண்டால் என வர்த்தமானத்தையும் தெரிந்துவரும படி வேண்டிக்கொள்ள பிறகு சிலதூரம போகும்போது தெப்பக் குளம இரண்டு நவரத்தினங்களால் கட்டப்பட்டதும் தெளிந்த நீருள்ள தடாகத்தின் அழகை வர்ணிக்கமுடியாது இதைக்கண்டு அனந்தபத்மநாப ஸ்வாமியை பார்த்தேயாவென்று கேட்க தான் பார்க்கவில்லையென்றும சுவாமியைப்பார்த்தால் ஏன் ஒருவரும் ஜலபானம செய்யாமலிருக்கிற வர்த்தமானத்தையும் தெரிந்து வருமபடி வேண்டிக்கொள்ள பிறகு சில தூரம் போனபோது கழுதையைப்பார்த்து அனந்தபத்மநாப சுவாமியை பார்த்தேயாவென்று கேட்டார் நான் பார்க்கவில்லை சுவாமியைக்கண்டால் விசேஷமாயுள்ள பசும்புல்லுகளைத் தின்ன இடம கொடாமையைத் தெரிந்து வரும்படி வேண்டிக்கொள்ள பிறகு சில தூரம் போனவுடன் ஓர் யானை யோக்கியமான பசும்புல்லின் மத்தியிலே நின்றுகொண்டு புசியாமல் நின்றுகொண்டிருந்தது அதைக்கண்டு அனந்தபத்மநாப சுவாமியைப்பார்த்தேயாவென்று கேட்டதில் தான் பார்க்கவில்லையென்றும் சுவாமியைக்கண்டால் தன் வர்த்தமானத்தை தெரிந்து வரும்படி வேண்டிக்கொள்ள இதற்குள் அஸ்தமனமாகும் சமையம நேரிட்டுவிட்டதென்று ஓர்மலையினுச்சியிலேறி அனந்தபத்மநாபா அனந்தபத்மநாபா அனந்தபத்மநாபா வென்று மூன்றுதரம் கூப்பிட்டேவரா விட்டால மலையினுச்சியிலிருந்து விழுந்துவிட திடமனதோடு பிரவேசித்தார். தக்ஷணம் கிருஷ்ணபகவான பிராமண விருத்தரூபத்தோடு இவரை தட்டியிப்புரமழைத்துவந்து தன் சொரூபத்தை காட்டியபோது ஷை கவுண்டிக மகாரிஷி ஸ்தோத்திரஞ்செய்ய ஆரம்பித்தார். ஓம். ஹரி, ஹரி, நரஹரி, முராஹரி, அம்புஜாக்ஷா. அச்சுதா, உச்சிதா, பஞ்சாயுதா, பாண்டவர் தூதா, லட்சுமிசமேதா, லீலாவிநோதா, கமலபாதா, ஆதிமத்தியாந்தரஹிதா, அநேகாக்ஷகா, அகிலாண்டகோடி பிரமாண்ட . பர

மானந்த முகுந்தா, வைகுந்தா, கோவிந்தா, பச்சைவண்ணா, கார்வண்ணா, கமலக்கண்ணா, ஜனார்த்தனா, கருடவாகனா, ராக்ஷஸமர்த்தனா, காளிங்க நிர்த்தனா, சேஷசயனா, நாராயணா, பிரமபாராயணா, வாமனா, நந்தநந்தனா, மதுசூதனா, பரிபூரணா, சர்வகாரணா, வெங்கடரமணா, சங்கடஹரணா, ஸ்ரீதரா, துளசிதரா, தாமோதரா, பீதாம்பரா மச்சகச்சவராகவதாரா, பலபத்ரா, பரமதயாபரா, பரமேஸ்வரா சங்குசக்ரா, ஸர்வேசுவரா, கருணாகரா, ரத்நாமனோகரா, ஸ்ரீரங்கா, பாண்டுரங்கா, லோகநாயக, பத்மநாபா, திவ்யசொரூபா, புண்ணிய புருஷா, புருஷோத்தமா, ஸ்ரீராமா, பரந்தாமா, நரசிம்மா, திருவிக்ரமா, பரசுராமா சகஸ்திரநாமா, பக்தவச்சலா, தேவானுகூலா, ஆதிமூலா, வேணுகோபாலா மாதவா, யாதவா, ராகவா, கேசவா, வாசுதேவா, தேவ தேவா, ஆதி தேவா, மஹாநுபாவா, வசுதேவதநயா, மாயாவிலாசா வைகுண்டவாசா, சுயம்பிரகாசா, வெங்கடேசா, ருஷிகேசா, சித்விலாசா, கஜபதி, ரகுபதி, சீதாபதி, வெங்கடாசலபதி, மாயா, ஆயா, வெண்ணெயுண்டநேயா, அண்டர்கள்போற்றும் தூயா, உலகமுண்டவாயா, நாலு உபாயா, பக்தர்கள் சகாயா, சதுர்ப்புஜா, கருடத்துவாஜா, கோதண்ட அஸ்தா, புண்டரீகவரதா ஓ விஷ்ணு ஓ பராத்பரா, பரமதயாளா, அயோ கிருஷ்ணா, அயோ கிருஷ்ணா வென்று பகவானைத்துதித்து நின்று தான் கண்ட ஐந்து விஷயத்தைப்பற்றி சுவாமியைக்கேட்டார்.

1. மா விருக்ஷத்தைப்பற்றி சொல்லுகிறார். முன் ஜென்மத்தில் ஓர் பிராமணன் அஷ்ட அயிஸ்வரியத்தோடிருக்க ஒருவருக்காகிலும் அன்னமிடாமலும் இன்னுமனேக கெடுதிகள் செய்தபடியால் இந்த ஜென்மத்தில் மாவிருக்ஷமாயுற்பத்தியாய் மாகனிவகையாராக்களை ஒருவரும் இச்சிக்காமலிருந்தது. உமமிடபார்வை எப்போது பட்டதோ அப்போதே நிவர்த்தியாய்விட்டதாய் சொல்லியருளினார்.

2. பசு விஷயத்தைப்பற்றி சொல்லுகிறார் முன் ஜென்மத்தில் ஓர் இராஜன் நல்ல நிலங்களை எல்லாம் வாங்கிக்கொண்டு களர்

நிலங்களைக்கொடுத்தும் இன்னுமனேகவித யிடையூறுகள் செய்து வந்தமையால் இந்த ஜென்மத்தில் பசுவாகப்பிறந்து பசும்புல்லுகள் எதேச்சையா யிருந்தும் புசியாமல் நின்றுகொண்டிருக்கும்படி நேரிட்டது. உம்முடைய பார்வை எப்போது பட்டதோ அப்போதே நிவர்த்தியாய்விட்டதாய் சொல்லியருளினர்.

3. தடாகத்தைப் பற்றிச்சொல்லுகிறார் முன் ஜென்மத்தில் இராஜா மந்திரி செய்த அக்கிரமத்தால் தடாகத்திலொருவரும் ஜலபானம் செய்யாமலிருக்கும்படி நேரிட்டது உம்முடைய பார்வை எப்போது பட்டதோ அப்போதே நிவர்த்தியாய்விட்டதாய் சொல்லியருளினர்.

4. கழுதை முன்ஜென்மத்தில் பிராமணனை மதியாமல் சதா நிந்தனை செய்தபடியால் இந்த ஜென்மத்தில் கழுதையாக பிறந்து எதேச்சையான பசும்புல்லுகளிருந்தும் அதன்மத்தியில் நின்றுபுசியாமல் யிருந்தபடியால் உம்மிட பார்வை எப்போது பட்டதோ அப்போதே நிவர்த்தியாய்விட்டதாய் சொல்லியருளினர்.

5. யானை முன்ஜென்மத்தில் பெரியவாள்செய்த தருமத்தை எல்லாமழித்து வந்ததினாலிந்த ஜென்மத்தில் யானையாகப் பிறந்து எதேட்சையாய் பசும்புல்லுகளிருந்ததின் மத்தியில் நின்றுகொண்டிருந்தும் புசியாமலிருந்தபடியால் உம்மிட பார்வை எப்போதுபட்டதோ அப்போதே நிவர்த்தியாய்விட்டதாய் சொல்லியருளினர்.

6. தேவசொரூபமென்று சொல்லி இந்த அனந்தவிரதத்தை தேவர்களும பூலோகவாசிகளும் தவறாமலனுஷ்டித்து வரப்பட்டவர்களுக்கு தனகனவாகனாதி வஸ்துகளும் புத்திர சந்தானமும் நோய்நொடியில்லாமலும் சதா க்ஷேமத்திலிருந்து பகவானிட பாதாரவிந்தம் சேருவார்களென்று தர்மராஜாவுக்கு கிருஷ்ணபகவான் சொல்லியருளினர்.

இப்போது ஏற்பட்டிருக்கிற டெல்லிநகரமானது தர்மராஜா ஆண்டகாலத்தில் அதே அஸ்தினாபுரமென்று பேர்ப்பட்டதாலிப்போதும் குறைவில்லாமல் க்ஷேமமாகக்கொடிருக்கிறது.

அனந்தவிரதம் முற்றிற்று.

உ

சிவமயம்

# சரஸ்வதி விரதம்.

—

ஏபங்குண விசேஷண விசிஷ்டாயாம சுபதிதௌ, மம, தர்மார்த்த, காமமோக்ஷ, சதுர்வித பலபுருஷார்த்த சித்தியர்த்தம், சகல வித்யா, பாரங்க தத்துவ சித்தியர்த்தம் வருஷே, கர்த்தவ்யைய தத்வாக்ஷர பிரயுக்தா ஸ்ரீ சரஸ்வதீ தேவதா முத்திஸ்யா, ஸ்ரீ சரஸ்வதீ தேவதா பிரீதியர்த்தம் கல்போகத்தா பிரகாரேண யாவச்சக்தி தியான வாகனாதி சோடசோபசார பூஜாம் கரிஷ்யே ததங்கத்துவேன கலசபூஜாங்கரிஷ்யே.

இதிசங்கல்பியா

கலசபூஜாங்குரியாத்

சூதமகாமுனிவர் சவுனகாதி மகரிஷிகளைப்பார்த்து சொல்லப்போகிறார். மகரிஷிகளே இன்னுமொரு யுக்தமான விரதம் சொல்லப்போகிறேன் கேளுங்கள் புரட்டாசி மாதம் (ஆஸ்வயுஜ) சுக்கில பக்ஷம் பிரதமைமுதல் கொண்டு ஒன்பது ராத்திரி துர்க்காலக்ஷ்மி சரஸ்வதிகளை பூஜிக்கவேண்டியது அல்லது மூலநக்ஷத்திர முதற்கொண்டு பூஜைசெய்யவேண்டும். அப்படி செய்கிறதற்கு அசக்தனாயிருந்தால் நவமியன்றைக்காகிலும் பூஜிக்கவேண்டும். இன்னும் இந்த விரதம் ஆசரிக்கப்பட்டவர்களுக்கு இகலோகத்தில் நிறந்தர ஐசுவரிய சம்பன்னனாய் பரத்தில் ஸ்வர்க்கலோகத்தைச் சேர்வார்களென்று சூதமுனிவர் சவுனகாதிரிஷிகளைப்பார்த்து மகாத்துமா முன்பு இந்த விரதத்தை யார் அனுஷ்டித்து சுகத்தை அடைந்த வர்த்தமானத்தை சொல்லும்படி கேட்டுக்கொள்ள சூதமுனிவர் ரிஷிகளே கிரேதா யுகத்தில் மகா தர்மவர்தனும் பிரஜைகளைப் பரிபாலித்து வந்த சமர்த்தனும் அஷ்ட ஐசுவரியவந்தனுமாய் ஜகத் துரக பதாதி சேனைகளோடும் சுகித்துக்கொண்டிருந்த சுகேதன் என்னும் இராஜனொருவனிருந்தான். அவனுக்கு அவனிட சவுந்திரவதியாகிய சுவேதி என்ற பெண்ஜாதி ஒருவளிருந்தாள் அப்போர்கொத்த பெண்ணுடன் அனுபவித்துக்கொண்டு

தர்மத்தை தப்பாமல் பிறஜா பாலனம்செய்துகொண்டுவந்ததில் க்ஷாமம் சத்துருபய முதலியது இல்லாமலிருந்தான் அப்படியிருக்க அந்த மகா ராஜனுக்கும் அவனுடைய பந்துக்களுக்கும் விரோத முண்டானதினால் யுத்தத்துக்கு தலைப்பட்டு சத்துருக்களிருக்கப் பட்டயிடங்களுக்குப்போய் கதா சக்திமுதலிய ஆயுதங்களால் யுத்தம்செய்தான். அகோரமான யுத்தத்தில் சுகேதன் சத்துருக்களாலடிக்கபட்டவனாகி நிற்க முடியாமல் ஓடிப்போய்க்கொண்டிருந்தான் அப்போது போய்க்கொண்டிருக்கப்பட்ட சுகேதனை தன்பாரியைப் பார்த்து ஓகோ! தன்புருஷனுடன் செல்லவேண்டுமே தவிர நாமிவ்விடமிருக்கத் தகாதென்று அந்த சுவேதனிப்பர்த்தாவையனுசரித்துப்போனாள். இப்படி இருவரும் வெகுதூரம்போய் ஓர் வனாந்தரத்தில் சேர்ந்துபசியால் வருததப்பட்டுக்கொண்டிருக்க சிலநாட்களுக்கெல்லாம் அந்த ராஜசிரேஷ்டனுக்கு வியாதியுண்டாய் நடக்கசக்தியில்லாமலிருந்தான். அப்படியிருக்க அந்த ராஜபத்னி வெகு துக்க சாகரத்திலமுழ்ந்தி தன் புருஷனை தன்துடைமீதில்வைத்துக்கொண்டு துக்கப்பட்டு அந்த வனத்தில் சஞ்சரித்துக்கொண்டிருக்கையில் அங்கிரஷ மகரிஷி அந்த வனிதாவிடம் வந்து சொல்லத்தொடங்கினார். ஓ ஸ்ரீயே உனக்கு க்ஷேமமுண்டாகக்கடவது இரண்டு பேருமா யிருக்கப்பட்டவர்கள் யாரென்றும் எங்கேயிருக்கப்பட்டவர்களென்றும் யிந்த யிடத்திற்கு எவ்விதமாய் வந்தீர்களென்றும் ராஜ்யத்தையும் பந்து ஜனங்களையும் விட்டு தனிமையாக பசியால் வருந்தி கொண்டு யிந்தவனத்தில் யேன் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறீர்களென்று கேட்க அந்த ஸ்ரீ பேசுவதற்கு கூட பசியால் பேசக்கூட சக்தியில்லாமல் கண்ணீரில் தாரை தாரையாய் நீர்த்துளி விழவும் விசனித்தழுக ஆரம்பித்தாள். அந்த முனிவர் ஓ! பெண்ணே விசனிக்காதே? லோகத்தில் மனுஷியால் விசனித்தால் எந்த காரியத்தையும் சாதிக்கமாட்டார்கள் ஆகையால் உங்களுடைய துக்கங்களை நிவர்த்திக்கிறேன் சொல்லுமென்று துக்கத்தை சமனம் பண்ணி கேட்க சுவேதி சொல்லத்தொடங்கினாள். முனி நாதா இவர் என்னுடைய பர்த்தா இவர் ராஜிய பரிபாலனம் செய்துகொண்டிருக்கையில் சில ஜனங்களுக்

கெல்லாம் இவருக்கும் தாயாதிகளுக்கும் விரோதமுண்டாச்சுது. அவ்விருவருக்கும் மகா யுத்தம் நடந்தது. அந்த யுத்தத்தில் எதிரி வெகு பல பராக்கிரமசாலியாயிருந்து ராஜ்ஜியத்தை பிடுங்கிக் கொள்ள வெகு ஆயுதங்களைக்கொண்டு பிரயோகம் செய்ததினு லந்த பாணத்தினிட அடிபொருக்காமல் ராஜ்ஜியத்தின் ஆசையை விட்டு ஓடிவரும்சமயத்தில் நானும்கூடவந்துவிட்டேன் ஆகை யால் ஓ மகாத்துமா திரும்ப எங்களுக்கு ராஜ்ஜியமும் புத்திர சந் தானமும் உண்டாகும்படி உபாயம் சொல்லும்படி அநேக விதத் தில் பிரார்த்திக்க அங்கிரஷ மகரிஷி சொல்லத்தொடங்கினர் ஓ புண்ணியவதி நீ என்னுடன் வரவேண்டும் வெகு சமீபத்திலிருக் கிற பஞ்சவடிதடத்தில் துர்க்காக்ஷேத்திரமிருக்கிறது அந்த இட த்தில் துர்க்காதேவி பிரசன்னமாயிருக்கிறது. அந்த மகா தேவியை பக்தியுடன் பூஜை செய்வாயானல் உனக்கு மறுபடி ராஜ்ஜியமும் புத்திரபவுத்திராதிகளும் சம்பத்துகளும் உண்டாகு மென்று சொன்னர். அந்த சுவேதி பர்த்தாவை முதுகிற்சுமந்து கொண்டு அங்கிரஷ மஹரிஷியுடன்போய் பஞ்சவடிதீரம் சேர்ந் தார்கள் அப்போ அங்கிரஷமகரிஷி அந்த சுவேதினியைப்பார்த்து பர்த்தாவுடன் ஸ்நானம்செய்யச்சொல்லி அந்த பதிவிரதையும் ஸ்நானம்செய்து மடிவஸ்திரத்துடன்வந்து சுவேதினியால் துர்க்கா சரஸ்வதியை சோடச உபசாரங்களுடன் பூஜை செய்தாள் இப்படி சுவேதனி பாட்டிமை அல்லது பிரதமை முதல்கொண்டு ஒன்பது தினங்கள் பூஜைசெய்து பத்தாவது நாளில் உதய காலத்தில் எழுந் திருந்து ஸ்நானம்செய்து பாயசம் அன்னம் வடையாவுடன் துர்க் காதேவி என்றமந்திரத்தை சொல்லிக்கொண்டு ஹவனம் செய் தாள் அங்கிரஷ மகரிஷிக்கி தம்பதி பூஜைசெய்து அவாளுடைய அனுக்கிரகத்தில் தசதானதி விதானங்கள் செய்து யிடைவிடாமல் விரதத்தை சம்பூரணம் செய்து அங்கிரஷமகரிஷியுடன் ஆசிரமத் துக்கு ராஜா சுவேதினியும்போய் சிலதினங்கள் வாசம்செய்து கொண்டிருக்கையில் துர்க்கா சரஸ்வதி விரதம் செய்த மகாத்மியத் தால் அந்த சுவேதினி கற்பத்தை தரித்து 10 வது மாதத்தில் ஒரு குமாரனை பெற்றாள். அங்கிரஷமகரிஷி அந்தப்பாலனுக்கு ஜாத

கர்மாதிகள் செய்வித்து சூரிய பிரதாபனென்று பெயர்வைத்து 5-வருஷம் ஆகவே வித்தியாப்பியாசம் செய்வித்தார். அந்தப்பாலன் சகல சாஸ்திரவித்தைகளை கற்றுக்கொண்டு எவ்வனம் வந்தவுடனே மகரிஷியால் அனுக்கிரகம் பெற்றுக்கொண்டு சத்துருக்கள் மேல் யுத்தத்திற்குப்போய் சகல ஆயுதங்களையும் பிரயோகித்து ஜெயமடைந்து தன்னுடைய தேசத்தைப் பிடித்துக்கொண்டு தாய் தகப்பனையும் கூட்டிக்கொண்டு ராஜ்ஜியத்தில் வந்து சேர்ந்து சுகத்தோடு ராஜ்ஜிய பரிபாலனம் செய்துகொண்டிருந்தான். சுவேதினியும் பிரதிவருஷமும் துர்க்கா சரஸ்வதி பூஜை செய்தும், இகலோகத்திலும் புத்திர களத்திராதிகள் சம்பத்துகளுடன் சுகமாயிருந்து அந்தியத்தில் சுவர்க்கலோகம் சேர்ந்தார்கள். ஆகையாலிந்த விரதத்தை பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரர்களும்மேல்கண்டபலனை அடையவேதாடு கூட இந்தகதையை வாசிக்கப்பட்டவர்களும் கேட்டவர்களும் விரதத்தை அனுஷ்டிக்கப்பட்டவர்களுக்கும் சகலமான பாவங்கள் நிவர்த்தியாயும் இகலோகத்தில் சர்வசுகத்தை அனுபவித்து அந்தியத்தில் பரமபதம் சேர்வார்களென்று பெரியோர்களுரைத்திருக்கிறார்கள்.

துர்க்கா சரஸ்வதி விரதம் முற்றிற்று.

---

சிந்தையைத்திகைப்பியாதேசெறிவுடையடிமைசெய்ய
வெந்தைநீயருளிச்செய்யாயாதுநான்செய்வதென்னே
செந்தியார்வேள்வியோவாத்தில்லைசிற்றம்பலத்தே
யந்தியும்பகலுமாடவடியிணையலசுங்கொல்லோ.

கண்டவாதிரிந்துநாளுங்கருத்தினுள்ளனபாதங்
கொண்டிருந்தாடிப்பாடிக்கூடுவன்குறிப்பினாலே
வண்டுபண்பாடுஞ்சோலைமல்குசிற்றம்பலத்தே
யெண்டிசையோடுமேத்தவிறைவநீயாடுமாறே.

பார்த்திருந்தடியனேனைபரவுவனபாடியாடி
மூர்த்தியேயென்பனுன்னைமூவரின்முதல்வனென்ப
னேத்துவாரிடர்கடீர்ப்பாய்தில்லைச்சிற்றம்பலத்துக்
கூத்தாவுன்கூத்துக்காண்பான்கூடநான்வந்தவாறே.

உ

சிவமயம்.

# கேதாரீஸ்வரர் விரத சரித்திரம்.

காரனைய கூந்தற் கவுரியியற்றிய கே
தார விரதகதையான் படிக்கச் — சீரிலகும்
ஐந்துகரத் தந்திமுகத் தண்ணலடியர்க்கருளுங்
கந்தமலர்ச் செஞ்சரணே காப்பு

ஆதிகாலத்தில் ஸ்ரீகயிலாயத்தில் நவரத்தினங்களாலிழைத்த ஓர் சிம்மாசனத்தின்மீது பரமேஸ்வரரும், பார்வதிதேவியும் வீற்றிருக்கையில பிரம்மா, விஷ்ணு, தேவேந்திரன் முதலான முப்பத்து முக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள், அஷ்டவசுக்கள், கின்னரர், கிம்புருடர், கெருட காந்தருவர், சித்தவித்தியாதரர், ஜனகர், ஜனகநந்தனர், ஜனக்குமாரர், தும்புருநாதர் மற்றுமுண்டான தேவரிஷிகளும் இன்னும் இதர தேவர்களும், பிரதிதினம் வந்து பரமசிவத்தையும், பார்வதி தேவியையும் பிரதக்ஷணம் வந்து நமஸ்காரம் செய்துக்கொண்டுபோவார்கள். இப்படியிருக்க ஒருநாள் பிறங்கி என்ற ரிஷி ஒருவர்மாத்திரம் பார்வதியம்மனை புறம்பாகத் தள்ளிவிட்டு ஈஸ்வரரைமாத்திரம் பிரதக்ஷண நமஸ்காரஞ்செய்து ஆனந்தக்கூத்தாடினார். அப்பொழுது ஸ்ரீ பார்வதி அம்மனுக்கு மஹாகோபமுண்டாய் விஷ்ணு, ருத்திரன், தேவேந்திரன், முதலாகிய முப்பத்துமுக்கோடி தேவர்களும், நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள் முதலானவர்கள் ஈஸ்வரரையும், நம்மையுங் கண்டு வணங்கிப்போவார்கள், இந்த பிறங்கி மாரிஷி வந்து நம்மைப் புறம்பாகத் தள்ளிவைத்து ஈஸ்வரரை மாத்திரம் நமஸ்கரித்து நின்றானென்று வெகு கோபமுண்டாகி பரமேஸ்வரி கேட்க பரமேஸ்வரர் சொல்லுகிறார். அவன் பாக்கியத்தைக் கோரினவனல்ல. மோக்ஷத்தைக் கோரினவனானதால் எம்மை மாத்திரம் பிரதக்ஷண நமஸ்காரஞ் செய்தானென்று அப்பொ

ழுது பரமேஸ்வரிக்கு கோபமுண்டு ஓய் பிரிங்கிமாரிஷியே உன்னிட தேகத்திலேயிருக்கிற இரத்த மாம்ஸம் நம்முடைய கூறுச்சுதே அதை நீ வைத்திருக்க தேவையில்லை கொடுத்துவிடு என்று சொன்னமாத்திரத்தில் உதறிவிட்ட பின்பு இரத்தமாம்சம் போய்விட்டபடியால் எழுந்திருக்கமாட்டாமலிருப்பதை ஈஸ்வரர் தெரிந்து ரிஷியைக் கேட்க நடந்த வர்த்தமானத்தைச் சொன்னவுடன் ஒரு தெண்டுகோல் கொடுத்து எழுந்தருளச்செய்தார். யிதன்பேரில் யீஸ்வரி கோபங்கொண்டு நீர் தானு உபேட்சை செய்யலாமாவென்று கோபித்து கைலாயத்தை விட்டு பூலோகத்திற்கு வந்து வால்மீகரிஷி சஞ்சரிக்கிற பூங்காவனத்தின் ஓர் விருக்ஷத்தினடியில் எழுந்தருளியிருந்தகாலத்தில் மேற்படி ரிஷி பார்த்து நடந்த வர்த்தமானத்தை தெரிந்துகொண்டு தன் ஆசிரமத்துக்கு அழைத்துப் போய் ஓர் விடுதியிலமர்த்தினர். வால்மீக ரிஷியைப் பார்த்து இந்த பூலோகத்தில் நான் ஒரு விரதம் அனுஷ்டிக்கவேண்டும். நூதனமாய் மேலான விரதமொன்றிருக்குமானால் அதை எனக்கு நீர் சொல்லவேண்டுமென்று கேட்க வால்மீகரிஷி தொழுது லோகமாதாவே இந்த பூலோகத்தில் ஒருவருக்கும் தெரியப்படாத ஒரு விரதமுண்டு. அந்த விரதத்திற்கு கேதாரி ஈஸ்வர நோன்பென்று பெயர். அதை இதுவரையில் யாரும் அனுஷ்டிக்கவில்லை. நீர் அந்த விரதத்தை அனுஷ்டித்தால் இஷ்டசித்தியாகுமென்று சொன்னார். அதை பரமேஸ்வரி கேட்டு அந்த விரதம் எக்காலத்தில் எவ்விதமாக அனுஷ்டிக்கிறது. எனக்கு நன்றாய் நீர் தெரியப்படச் சொல்லவேண்டுமென்று கேட்க வால்மீகரிஷி சொல்லுகிறார் புரட்டாசிமாதத்தில் சுக்கிலபட்சத் தசமி துடங்கி ஐப்பசிமாதம் கிருஷ்ணபக்ஷம் தீபாவளி அமாவாசை வரைக்கும் இருபத்தொருநாள் பிரதிதினம் ஸ்நானஞ்செய்து பரிசுத்த வஸ்திரந் தரித்துக்கொண்டு ஆலாவிருட்சத்தினடியில் மண்ணினால் சிவலிங்கம் பிடித்துவைத்து யீஸ்பரராக பாவித்து அபிஷேகம் செய்து விபூதி, சந்தனம், அட்சதை, புஷ்பஞ்சாத்தி தூப தீப நைவேத்தியஞ் செய்து வெல்ல உருண்டை, சந்தன உருண்டை, மஞ்சளுருண்டை, அதிரசம், தேங்காய்பழம் வகையரா, வெற்றிலைபாக்குடன் நைவேத்தியஞ்செய்து அர்ச்சித்து நமஸ்காரம் செய்து இருபத்தோரிழைமேல ஒரு

கயிறை முறுக்கி ஒரு முடியாக இருபத்தொருமுடி முடிந்து தினந் தினம் உபவாசமிருந்து நைவேத்தியம் செய்த பக்ஷணத்தைப் புசித்து இருபத்தோராநாள் தீபாவளி அமாவாசையின்றைக்குப் பரமேஸ்வரர் ரிஷபாரூடராய் எழுந்தருளிவந்து காக்ஷி கொடுத்து கேட்ட வரத்தை கொடுப்பாரென்று வால்மீகரிஷி சொன்னதைக் கேட்டு யீஸ்பரி அனுஷ்டித்ததில் அந்தப்படி ரிஷபவாகனரூடராய் பிர்மா, விஷ்ணு, தேவேந்திரன் முதலானவர்களுடன் வந்து உமக்கு வேண்டிய வரங்கள் என்னவென்று கேட்க உம்மிட சரீரத்தில் அர்த்தபாகம் வேண்டுமென்று கேட்க அப்படியே அர்த்தநாரீஸ்வரராய் காக்ஷிக் கொடுத்து இன்றுமுதல் இந்த விரதத்தை யாதாமொருவர் அனுஷ்டித்தாலும் அவர்களுக்கு வேண்டிய பாக்கியத்தைக் கெடுப்போமென்று சொலலி கயிலாயத்துக்கு எழுந்தருளினார். அப்போர்க்கொற்ற கேதாரி விரதத்தை தேவதா ஸ்ரீகள் முதலானோரும் அனுஷ்டித்து வேண்டிய வரங்களைப் பெற்றார். பூலோகத்தில் கெங்கைகரையில் தெய்வகன்னியர்கள் முன் சொல்லிய விதிப்படி மண்ணினால் லிங்கம் செய்து விரதத்தை பூர்த்தி செய்வதை, ஓர் ராஜபுத்திரிகளிருவர்கள் அவ்விடம் வந்தார்கள், ஒருத்தி பேர் புண்ணியவதி, ஒருத்தி பேர் பாக்கியவதி, அந்தப் பெண்களுக்கு விவாகமில்லை. தெய்வகன்னிகைகள் நோன்பு நோற்கிறதைப் பார்த்து கேட்க, விரதத்தின் சங்கதிகளைச் சொல்லி இருபத்தொருநாள் செய்கிறதற்கு முடியாவிட்டால் சதுர்த்தசியிலே ஸ்நானம்செய்து ஆலவிருட்சத்தின்கீழே மணையினாலே கேதாரியீஸ்வரரை பாவனை செய்துவைத்து பூஜை செய்து தீபதூபம் கொடுத்து அதிரசம் 21, வெல்லஉருண்டை 21, சந்தனஉருண்டை 21, மஞ்சளுருண்டை 21, பாக்கு 21, வெற்றிலை 21 இருபத்தொரு யிழையிலே கயறு அதிலே இருபத்தொரு முடி முடிந்துவைத்து நைவேத்தியஞ் செய்து தீபதூபங்கொடுத்து அர்ச்சனை செய்து நமஸ்காரஞ் செய்து துதி பண்ணினால் அவர்களுக்கு வேண்டிய பாக்கியத்தை கொடுப்பாரென்று சொல்ல இரண்டு கன்னியர்கள் தங்கள் குறைகளையெல்லாம் தெய்வ கன்னியர்களிடம் சொல்ல அவர்களிந்த நோன்பை நோக்குங்களென்று பலவகையிலும்

சொல்லி அவர்களுக்கு நூலில்லாமல் ஆலம்விழுதை வாங்கி 21 முடி முடிந்து தாங்கள் பூஜை செய்வதுடனே கூட வைத்துப் படைத்து அந்த நோம்பு தோரணத்தை இவர்கள் கையிலே கொடுத்து யிந்தப்படி வருஷந்தோறும் அநுஷ்டித்துவரும்படி ஆசீர்வாதம் செய்துவிட்டுப்போனார்கள். இரண்டுபேரும் தங்கள் வீட்டுக்கு வரும்போது தங்கள் வீடு மாடமாளிகையும் சகல அயிஸ்வரியமுமாக யிருக்கக்கண்டு மயங்கும்போது அவர் தகப்பனார் வந்து பெண்களை அழைத்துப்போய் உபசரித்துவரும்போது இராசகிரியிலிருந்து ஒருராஜா புண்ணியவதியை வெகு ஆடம்பரத்துடனே விவாகம் செய்துகொண்டு போனபிற்பாடு அழகாபுரி பட்டணத்து இராஜகுமாரன் வந்து பாக்கியவதியை கலியாணம் செய்துகொண்டுபோனான். பாக்கியவதி தன்னுடைய துர் அதிர்ஷ்டகதினாலே நோன்பை மறந்து தோரணத்தை அவரைப்பந்தலின்மீது அவிழ்த்துப்போட்டுவிட்டாள் அப்படி மறந்துபோனபடியால் வேறுராஜா சதுரங்கசேனையுடன் வந்து அழகாபுரி பட்டணத்தை கொள்ளையடித்துராஜ்ஜியத்தை பிடித்துக்கொண்டு தரித்திரமவந்து சாப்பாட்டுக்கில்லாமல் அவரைச்செடியண்டை வந்து காய்களைப் பறித்துஜிருவுதி செய்துகொண்டிருப்பார்கள் பாக்கியவதி எண்ணதெல்லாம் எண்ணி இராஜகிரியிலே வாழுகிற தன் தமக்கையிடம தன் குமாரனுக்கு கட்டமுது கொடுத்து அனுப்பி சில திரவியம் வாங்கி வரும்படி அனுப்பினாள். அந்தப்படி அங்கு சென்று தங்கள் வர்த்தமானங்களையெல்லாம் சொல்ல அவள் விசனப்பட்டு திரவியம், ஆபரணம், வஸ்திரங்களுடன் முடிப்புக்கட்டி அனுப்பிக்கொடுத்தாள், அதை வாங்கிக்கொண்டு சிலதூரம் வந்து ஒரு குளக்கரையிலே மூட்டையை வைத்துவிட்டு கட்டமுது சாப்பிடுகையிலே கருடன் மூட்டையை எடுத்துக்கொண்டு போய்விட்டது. மறுபடி பெரியதாயாரிடம் நடந்த சங்கதியைத் தெரிவித்தான். அப்படியாவென்று மறுபடியும் சில திரவியங்களைக் கட்டிக்கொடுத்தாள் வழியில் திருடன் அடித்து பிடுங்கிக்கொண்டான். மறுபடி பெரிய தாயாரிடம் போய் தாங்கள் செய்த பாபமென்னவோவென்று துக்கப்பட்டான். இப்போது கொண்டுபோன திரவியத்தைத் திருடன் கொண்டுபோனானென்று சொல்லக்கேட்டு உங்கள் தாயார் கேதா

ரீஸ்வரி விரதத்தை அனுஷ்டிக்கிறளா இல்லையாவென்று கேட்க அந்த நோப்பு இப்போது நோற்கிறதில்லை. முன்னே நோற்ற கயிற்றையும் அவரைபபந்தலின்மேல் போட்டுவிட்டாள். அன்று முதல் இப்படி வந்தாப்போலே காணுதென்று சொன்னான். அப்படியாவென்று அற்பசிமாதம் வரும்வரையிலும் பிள்ளையை வைத்திருந்து தான் நோற்கிற நோன்புடனே பாக்கியவதிக்கும் ஒரு நோன்பு வைத்து நோற்று அந்த நோன்புக்கயிறும், பலகாரமும், பாக்கு, வெற்றிலை, மஞ்சள் இன்னும் சில ஆடை ஆபரணங்களுடன் சில சேவகர்களையுங் கூட்டி இந்த நோன்பை விடாமல் நோற்கச்சொலலி சில புத்தியுஞ்சொல்லி யனுப்பினாள். வழியிலே வரும்போது முன்னே பறித்துப்போன திருடன் திரவியத்தையும் கொண்டுவந்து கொடுத்தான். கருடனும் மூட்டையைப் போட்டு உன்தாய் விரதம் நோற்காமல் விட்டுவிட்டதினாலே இப்படி வந்தது இனிமேல் பயபக்தியுடனே நோன்பு நோற்கச்சொல்லென்று ஒரு சப்தமுண்டாச்சுது. அது கண்டு இந்த பிள்ளை ஆச்சரியப்பட்டு சந்தோஷத்துடனே தன் வீட்டுக்கு வந்து கொண்டுவந்ததை முதலிய நோன்புக் கயிறையும் கொடுத்து நடந்த வர்த்தமானம் முழுமையும் தன் தாயிடம் சொலலியபின் தான் ஆங்காரத்தினாலே கெட்டேன் என்று ஸ்நானம் செய்து கேதாரீசுவரரை நமஸ்காரஞ் செய்து கயற்றைக் கட்டிக்கொண்டாள். அந்த நாழிகைக்கே தங்கள் பட்டணத்தைக் கைப்பற்றிய ராஜா வந்து தங்கள் பட்டத்தையும் சகல ஆபரணங்களுடன் ஆனைசேனைகளையும் ஒப்புவித்து பகுதியுங் கொடுத்துப் போயவிட்டான். ஆகையினாலே இக்கேதாரீஸ்வரர் நோன்பு யாதாமொருவர் தப்பாமல் செய்துவருகிறார்களோ அவர்களெலலாம் புண்ணியவதி பாக்கியத்தைப்போலவே இம்மையிற் பாக்கியத்தை அனுபவித்து மறுமையில் மோக்ஷத்தையும் அடைவார்களென்று தர்மபுத்திர மஹாராஜனுக்கு நாரதமகாமுனிவர் சொல்ல அப்படியே தர்மபுத்திரமகாராஜாவும் அனுபவித்து சத்துருசெயஞ் செய்து நாடு ராச்சியமும் பெற்று மோக்ஷமடைந்தார்.

கேதாரீஸ்வரர் விரதம் முற்றிற்று.

உ

சிவமயம்.

# மதனத் துவாதசி விரதம்.



ஓர் காலத்தில் சூதபுராணிகர் சவுநகாதிமகரிஷிகளைப் பார்த்து சொல்லத்தொடங்கினார். ஓ முனீஸ்வரர்களே மகா சிரேஷ்டமான உத்தமமாயிருக்கப்பட்ட விரதத்தைச் சொல்லுகிறேன். ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியானவர் ஓர்நாள் சத்தியபாமையோடு வனத்தில் சஞ்சாரம்செய்து பிருந்தாவனமென்கிற ஓர் சன்னதக்கு சமீபமானார்கள். அந்தசமயத்தில் நாரதமகாமுனி கிருஷ்ணமூர்த்தியைத் தரிசனம் செய்துகொள்வதற்காக மேற்படி பிருந்தாவனம் சென்றார். அந்த சமயத்தில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் நாரதமுனிக்கு அநேக உபசாரம் செய்து ஓ நாரதமுனிவரே உலகத்திலனேகவிதமான ஆச்சரியங்களுண்டே நீர் லோகசஞ்சாரியானதால விசேஷங்களைச் சொல்லும் எனக்கேட்டார். ஏ யசோதாபுத்திரனே நானிப்போதுதான் பிரமமலோகத்திலிருந்து வருகிறேன். பிரம்மாவானவர் தன்னுடைய பத்தினியாகிய சரஸ்வதி தேவிக்கும் காசி சிரேஷ்டமாயிருக்கப்பட்ட மஹா உத்தமமான விரதத்தை உபதேசம் சொன்னார். அந்த விரதத்தின் மகாத்மியத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள் இந்த விரதத்தை அநுசரித்தவர்களுக்கு சர்வ சம்பத்துகளும புத்திரபவுத்திராதிகளும் உண்டாகுமென்று சொன்னார். அந்த விரதமாகப்பட்டது சுக்கிலபக்ஷம் ஏகாதசி முதற்கொண்டு உபவாசமிருந்து மனலைத்திடப்படுத்திக்கொண்டு பிருந்தாவனபூஜை நடத்திவரவேண்டியது. அந்த யிடத்தில் பஞ்சவர்ன கோலத்துடன் புஷ்பாதிகளாலலங்கரித்து தீப தூப சோடசஉபசாரமும் ஐந்துவித நைவேத்தியங்களுடன் பூஜை செய்யவேண்டியது. மேற்படி சுக்கிலபக்ஷம ஏகாதசி முதல் ஒரு மாதத்திற்கு செய்து வந்து மறுதினம் துவாதசி உதயத்தில் புனர்பூஜை செய்து ஒருபடி அரிசி எடுத்து மாவாக்கி மூன்றுபாக மாவை நைவேத்தியம்செய்து ஒரு பாக மாவை சுத்தி செய்து அலங்கரித்து வைத்திருக்கும் உரலில் மேற்படி மாவைப்போட்டு பசும்பால் ஊற்றி ஐந்து சுமங்கிலியைக் கொண்டு ஐந்து கரும்பினால் பகவத்தியானம் செய்து அவரவர்

மனோபீஷ்டப்படி பிடிக்கவேண்டியது அதிலிருந்து தெளிக்கும் துளி ஒவ்வொருபெண்கள் பேரிலேத்தனை விழுகிறதோ அத்தனை தாம் சுவர்க்கலோகத்தில் வாசமென்பதாக நாரக மகா முனிவர் சொன்னார் கிருஷ்ணபகவான் நாரதரைப்பார்த்து பூர்வகாலத்தி லிந்த விரதத்தை யாது செய்தார்களே! அவர்கள் எனனபலனை அடைந் தார்களென்று கேட்டார். ஓ தேவகீ புத்திரனே பூர்வகாலத்தில் வடதேசத்தில் வேத சாஸ்திரங்களைப்படித்து தேர்ந்தவரான தேவதத்தன் என்கிற பிராமணன் ஒருவனிருந்தான். அவனுக்கு சந்ததியில்லாமலிருந்ததினால் விஷ்ணுவைக்குறித்து தபசுசெய்துக் கொண்டிருந்தார் மகாவிஷ்ணு விருத்த பிராமணரூபமாய் சமீபத் தில் வந்து ஏன் தபசு செய்கிறாய் என்று கேட்டார். பகவானை நமஸ் கரித்து ஓ ஜெகன்னாதா தங்களுடைய தரிசனத்தால் என்பாவம் நிவாரணையாய் தபசுநிறைவேறி கோரிக்கையை நிறைவேறபிரார்த் திதார் ஓ தேவதத்தா நீ கோரும் வரங்களை கேளென்று சொன்ன தினபேரில் வாசுதேவர் புத்திரனில்லாதவனுக்கு கெதி மோக்ஷம் இல்லை என்று ஏற்பட்டிருக்கிறது. புத்திரபலன் வேண்டுமென்று கேட்டார். பகவான் ஆயுசுயில்லாதகுழந்தை வேணுமா மாங்கலிய மில்லாத குழந்தைவேணுமா இதற்கு இரண்டிலொன்றை கேட் கும்படி சொன்னார். தன்பத்தினி வீட்டிலிருப்பதால் தெரிவித்து பதில் சொல்வதாகசொல்லி விடைபெற்றுக்கொண்டு தன்வீட்டி ற்குபோய் நடந்த வர்த்தமானங்களை எல்லாம் சொன்னதில் புத் திர ஸ்தானம் உண்டானால் போதுமென்று அற்ப ஆயிசு உள்ள பிள்ளை பிறந்தாலும் போதுமென்று சொன்னபடியே பகவானிடம் வந்து தெரிவித்ததின்பேரில் பகவான் ஓர் பெண்ணை கொடுத்து விட்டு அந்திரதாணமாய் போய்விட்டார் தேவதத்தன் பாரியாளுட டன் வீட்டிலிருக்கும்போது கெற்பம் தரித்து ஓர் பெண் பிறந்தது அந்தப்பெண் நாளுக்கு நாள் தேஜஸ்ஸோடு கூடி வாழ்ந்துகொண் டுவரும்பொழுது அந்தப்பெண்ணுக்கு விவாஹம் செய்துவைத்து 2, 3-மாதத்திற்குபிறகு விதவை ஆய்விட்டாள் தாய் தகப்பனிறந்து விட்டார்கள். இவள் ஒருத்தியே தனியாயிருந்தாள். பிச்சக்காரனைக் கண்டால் நாஸ்தி நாராயணாவென்று நாமதேயத்தையே சொல்லிக் கொண்டு வந்தாள் பகவான் ஓர் நாளிவளை பரிக்ஷிக்க இவள் வீட்

டிஷ்குக்கு பிட்சைக்கு கேட்டார். அப்போது அந்தப்பெண் நாஸ்தி நாராயணுவென்று சொன்னுள். பகவான்பார்த்து தர்மம் கொடாமல் அவமானப்படுத்தி நாஸ்தி நாராயணுவென்று சொல்லுகிருயே உனக்கு தர்மமாவென்று சொன்ஞர் அந்தப் பெண் அதிக கோபத்துடன் கண்கள் சிவக்க சமயலறையில் போய் சாணிததுணியை எடுத்து வநது சுவாமியின் பிட்க்ஷாபாத்திரததில் போட்டாள் அந்த துணியை எடுத்துக்கொண்டு வந்துவிட்டார். அநத துணியில் எனை யிருக்கிறது என்று பார்த்தார் ஓர் துவரையிருக்கக் கண்டு அதை ஓரிடத்தில் முளைக்க போட்டுவிட்டு அநதப்பெண்ணுக்கு சாபம் கொடுத்துவிட்டு வைகுண்டத்திற்கு போய்விட்டார் அநதத் துவரை செடியாய் பூபிஞ்சுடன் இருக்கும்போது இந்தப்பெண் மரத்தடியிலடைந்து இந்த செடிக்கு அடியில் புழுவாய்ப்பிறந்து அந்த இலை முதலியதுகளை தின்றுகொண்டிருந்தாள் ஓர் நாள் லட்சுமி சமேதராய் பகவான் இந்த செடிக்கு அருகில் வந்து புழுவைப்பார்த்து சவுக்கியமாக இருக்கிருயாவென்று கேட்டார் புழுகானது சுவாமியைப்பார்த்து தங்களுக்கு தெரியாதது என்ன யிருக்கிறது. ஜெகதீசாவென்று விசனததுடன் பகவானைப்பார்த்து ஓ ஆதிகாரணு சர்வபரிபூரணு அனந்த சயனு கமலநயனு பாண்டுரங்கா ஸ்ரீ ரங்கா நாராயணு ஓ வாசுதேவா தேவா திதேவா ஆதிதேவா மகானுபாவா மாதவா யாதவா ராகவா கேசவா ஓ பகவானே நான் என்ன குறை செய்தேனே என்று யிவ்வித தோத்திரஞ்செய்யத் துடங்கினுள். மகாலட்சுமி இவளுக்கு இந்த ஜென்மம் இப்படி வந்ததற்கு காரணம சுவாமியைக்கேட்க அவர் சொல்லுகிறா, விதவையாயிருந்த காலமுதலிவள் செய்துவந்த அக்கிரமததோடு பிச்சை கொடாமலே நாஸ்தி நாராயணுவென்று சொல்லிவந்தாள் நான் அதை பரீட்சிதது இவளுக்கு இம்மாதிரி ஜனனம் கிடைத்ததென்று சொல்ல அந்தம்மாள் இவளை யிந்த ஜென்மத்திலிருந்து நீக்கி வைகுண்டத்திலிருக்கும்படி செய்யவேண்டுமென்று பிரார்த்தித்தாள். மதனத்துவாதசி விரதம் 108-ல் ஒரு பாகம் கொடுத்தால் உடனே நிவர்த்தியாகுமென்று சுவாமி சொன்னுர். உடனே புழுவுக்கு ஸ்திரீரூபமாய்விட்டது சுவாமிக்கும் அம்

மனுக்கும் சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து ஸ்தோத்திரம்செய்து ஓ லோகமாதா நானிந்த விரதத்தை செய்து வரும்படியெனக்கு உபதேசிக்கவேண்டுமென்று லோகமாதாவைக் குறித்து ஸ்தோத்திரம் செய்து உபதேசம் பெற்றுக்கொண்டாள். கார்த்திகைமாதம் சுக்கில பக்ஷம் யேகாதேசியன்று உபவாசமிருந்து துளசி பிருந்தாவன சமீபத்தில்போய் கோலமுதலியன போட்டு சோடசஉபசார அலங்கரித்து ஏகாதசி ராத்திரி தூங்காமல் பகவானை ஸ்மரித்துக் கொண்டு மறுதினம் காலையில் ஸ்நானம்செய்து ஒருபடி மாவை மூனுபாகமாக்கி ஒரு பாகத்தை நெய்வேத்திபத்துக்கும ஒரு பாகத்தை உரலில் போடவும் மற்றொரு பாகத்தை தானத்துக்கும் இவ்விதமாய் பூஜைசெய்து உரலில் போட்ட மாவில் பசும்பால் விட்டு ஐந்து சுமங்கலியைக்கொண்டு பகவத் தியானத்துடன் இடித்து பிராமணபூஜைசெய்து தக்ஷிணை தாமபூலம் கொடுத்து நைவேத்தியங்கள் செய்து இந்த விதமாய் ஐந்து வருஷக்காலம் பூஜை செய்து உத்யோபனம் செய்து வந்தவாளுக்கு வைகுண்ட பதவி உண்டாகுமென்று லட்சுமி சொன்னாள் இந்த விரதத்தை பூலோகத்தில் யார் யார் அனுஷ்டித்து வருவார்களோ அவரவர்கள் மனோபிஷ்டத்தின்படி சித்தியுண்டாவதுடன் பகவத் கடாட்சத்தினால் புத்திரசந்தானமுதலிய சகல சம்பத்துகளும் உண்டாகுமென்று பகவான் சொல்லியருளினார்.

---

திருப்பிரமபுரம்.

# திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்.

## திருந்தாளச்சதி

பண்-வியாழக்குறிஞ்சி (1-ம் திருமுறை).

திருச்சிற்றம்பலம்.

பந்தத்தால் வந்தெப்பால் பயின்றுநின்றவும்பரப்
பாலேசேர்வாயேனோர்கான் பயில்கணமுனிவர்களுஞ்
சிந்தித்தேவந்திப்பச் சிலம்பின்மங்கைதன்னோடுஞ்
சேர்வார்நாணீள்கயிலைத் திசைமுழுதுகணங்களுஞ்

சந்தித்தேயிந்தப்பாசனங்களின்றுதங்களுற்
றுமேகாணுவாழ்வாரத்தகவுசெய்தவனதிடங்
கந்தத்தாலெண்டிக்குங்கமழ்ந்திலங்குசந்தனக்
காடாரபூவார்சீர்மேவுங்கழுமலவளநகரே. (1)

பிச்சைக்கேயிச்சித்துப்பிசைந்தணிந்தவெண்பொடிப்
பீடார்நீடார்மாடாரும்பிறைநுதலரிவையொடு
முச்சத்தானச்சிப்போமுடர்ந்தடர்ந்தவெங்கணை
றாராவூராநீள்வீதிப்பயில்வொடுமொழிசெயிசை
வச்சத்தானச்சுச்சேர்வடங்கொள்கொங்கைமங்கைமார்
வாராநேரேமாலாகும்வசிவலவவனதிடங்
கச்சத்தான்மெச்சிப்பூக்கலந்திலங்குவண்டினங்
காரார்காரார்நீளசோலைக்கழுமலவளநகரே. (2)

திங்கட்கேதும்பைக்கேதிகழ்ந்திலங்குமத்தையின்
சேரேசேரேநீராகச்செறிதருசுராநதிபோ
டங்கைச்சேர்வின்றிக்கேபடைந்துடைந்தவெண்டலைப்
பாலேமேலேமாலேபபபடர்வுறுமவனிறகும்
பொங்கப்பேர்நஞ்சைசேர்புயங்கமங்கள்கொன்றையின்
போதார்தாரேதாமேவிப்புரிதருசடையனிடங்
கங்கைக்கேயும்பொற்பார்கலந்துவருதபொன்னியின்
காலேவாராமேலேபாய்க்கழுமலவளநகரே. (3)

அண்டத்தாலெண்டிக்குமமைந்தடங்குமண்டலத்
தாறேவேறேவாளுள்வாரவரவரிடமெதலா
மண்டிப்போய்வென்றிப்போர்மலைந்தலைந்தவும்பரு
மாறேலாதார்தாமேவும்வளிமிகுபுரமெரிய
முண்டத்தேவெந்திட்டேமுடிந்திடந்தவிஞ்ஞிசூழ்
மூவாமூதூர்மூதூராமுனிவுசெய்தவனதிடங்
கண்டிட்டேசெஞ்சொற்சேர்கவின்சிறந்தமந்திரக்
காலேயோவாதார்மேவுங்கழுமலவளநகரே. (4)

இக்கிற்றேவற்றற்றேதிகழ்ந்திலங்குமண்டலச்
சீறூர்வீறூர்போரார்தாரகனுடலவனெதிரே

புக்கிட்டேவெட்டிட்டேபுகைந்தெழுந்தசண்டத்தீப்
போலேபூரீர்திகான்மீப்புணர்தருமுயிர்கடிறனு
சொக்கத்தேநிர்த்தத்தேதொடர்ந்தமங்கைசெங்கதத்
தோடேயாமேமாலோகத்துயர்களைபவனிடங்
கைக்கப்போயுக்கத்தேகனன்றுமிண்டுதண்டலைக்
காடேயோடாவூரேசேர்கழுமலவளநகரே. (5)

செற்றிட்டேவெற்றிச்சேர்திகழ்ந்ததும்பிமொய்ம்புறுஞ்
சேரேவாரார்நீள்கோதைத்தெரியிழைபிடியதுவா
யொற்றைச்சேர் முற்றற்கோட்புடைத்தடக்கைமுக்கண்மிக்
கோவாதேபாய்மாதானத்துறுபுகர்முகவிறைபைப்
பெற்றிட்டேமற்றிப்பார்பெருத்துமிக்கதுக்கமும்
போராநோய்தாமேயாமைப்பிரிவுசெய்தவனிடங்
கற்றிட்டேயெட்டெட்டுக்கலைத்துறைக்கரைச்செலக்
காணாதாரேசேராமெய்க்கழுமலவளநகரே. (6)

பத்திப்போர்வித்திட்டேபரந்தவைம்புலன்கள்வாய்ப்
பாலேபோகாமேகாவாப்பகையறுவகைநினையா
முத்திக்கேவிக்கத்தேமுடிக்குமுக்குணங்கள்வாய்
மூடாவூடாநாலந்தக்கரணமுமொருநெறியாய்ச்
சித்திக்கேயுய்த்திட்டேதிகழ்ந்தமெய்ப்பரம்பொருள்
சேர்வார்தாமேதானாகச்செயுமவனுறையுமிடங்
கத்திட்டோர்சட்டங்கக்கலந்திலங்குநற்பொருள்
காலேயோவாதார்மேவுங்கழுமலவளநகரே. (7)

செம்பைச்சேரிஞ்சிச்சூழ்செறிந்திலங்குபைம்பொழிற்
சேரேவாராயாரீசத்திரையெறிநகரிறைவ
னிம்பர்க்கேதஞ்செய்திட்டிருந்தானன்பயின்றவெற்
போரார்பூநேரோர்பாதத்தெழில்விரலவணிறுவிட்
டம்பொற்பூண்வென்றித்தோளழிந்துவந்தனஞ்செய்தாற்
காரார்கூர்வாள்வாணாளன்றருள்புரிபவனிடங்
கம்பத்தார்தும்பித்திண்கவுட்சொரிந்தமும்மதக்
காரார்சேருர்மாவீதிக்கழுமலவளநகரே. (8)

பன்றிக்கோலங்கொண்டிப்படித்தடம்பயின்றிடப்
பானுமாறுண்மேயப்பறவையினுருவுகொள
வொன்றிட்டேயம்புச்சேருயர்ந்தபங்கயத்தல
னோதானோதானலணராதுருவினதடிமுடியுஞ்
சென்றிட்டேவந்திப்பத்திருக்களங்கொள்பைங்கணின்
றேசால்வேறோராகாரந்தெரிவுசெய்தவனிடங்
கன்றுக்கேமுன்றிற்கேகலந்திலந்நிறைக்கவுங்
காலேவாராமேலேபாய்கழுமலவளநகரே. (9)

தட்டிட்டேமுட்டிக்கைத்தடுக்கிடுக்கிநின்றுணைத்
தாமேபேணாதேநாளுஞ்சமணொடுமுழல்பவரு
மிட்டத்தாலத்தந்தானிதன்றதென்றுநின்றவர்க்
கேயாமேவாயேதுச்சொல்லிலைமளிமருதம்பூப்
புட்டத்தேயட்டிட்டுப்புதைக்குமெய்க்கொள்புத்தரும்
போல்வார்தாமோராமேபோய்ப்புணர்வுசெய்தவனிடங்
கட்டிக்கால்வெட்டித்தீங்கரும்புதந்தபைம்புனற்
காலேவாராமேலேபாய்கழுமலவளநகரே. (10)

அஞ்சக்கேகணைம[illegible]களிக்காவல்கொண்டகக்
கானேதேனேபோராருங்கழுமலநகரிறையைத்
தஞ்சைச்சார்சண்பைக்கோன்சமைத்தநற்கலைத்துறை
தாமேபோல்வார்தேனேரார்தமிழ்விரகனமொழிக
ளெஞ்சத்தேய்வின்றிக்கேயிமைத்திசைத்தமைத்தகொண்
டேழேயேழேநாலேமூன்றியலிசையிசையியல்பா
வஞ்சத்தேய்வின்றிக்கேமனங்கொள்பயிற்றுவோர்
மார்பேசேர்வாள்வானோர்சீர்மதிநுதன்மடவரலே. (11)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவண்ணாமலை.

பண்-நட்டபாடை (முதல் திருமுறை.)

---

உண்ணாமுலையுமையாளொடுமுடனாகியவொருவன்
பெண்ணாகியபெருமான்மலைதிருமாமணிதிகழ
மண்ணார்ந்தனவருவித்திரண்மழலைம்முழவதிரு
மண்ணாமலைதொழுவார்வினைவழுவாவண்ணமறுமே. (1)

தேமாங்கனிகடுவன்கொளவிடுகொம்பொடுதீண்டித்
தூமாமழைதுறுவன்மிசைசிறுநுண்டுளிசிதற
வாமாம்பிணையணையும்பொழிலண்ணாமலையண்ணல்
பூமாங்கழல்புனைசேவடிநினைவார்வினையிலரே. (2)

பீலிம்மயில்பெடையோடுறைபொழில்சூழ்கழைமுத்தஞ்
சூலிம்மணிதரைமேனிறைசொரியும்விரிசார
லாலிம்மழைதவழும்பொழிலண்ணாமலையண்ணல்
காலன்வலிதொலைசேவடிதொழுவாரனபுகழே. (3)

உதிரும்மயிரிடுவெண்டலைகலனாவுலகெல்லா
மெதிரும்பலியுணலாகவுமெருதேறுவதல்லான்
முதிருஞ்சடையிளவெண்பிறைமுடிமேல்கொளவடிமே
லதிருங்கழலடிகட்கிடமண்ணாமலையதுவே. (4)

மரவஞ்சிலைதரளம்மிகுமணியுந்துவெள்ளருவி
யரவஞ்செயமுரவம்படுமண்ணாமலையண்ணா
வுரவஞ்சடையுலவும்புனலுடனாவதுமோரார்
குரவங்கமழ்நறுமென்குழலுமைபுல்குதல்குணமே. (5)

பெருகும்புனலண்ணாமலைபிறைசேர்கடனஞ்சைப்
பருகுந்தனைதுணிவார்பொடியணிவாரதுபருகிக்
கருகும்மிடறுடையார்கமழ்சடையார்கழல்பரவி
யுருகும்மனமுடையார்தமக்குறுநோயடையாவே. (6)

---

## திருநாவுக்கரசு நாயனார்.

### திருவங்கமாலை - தேவாரம். பண்-சாதாரி.

---

தலையே நீ வணங்காய் — தலை மாலைதலைக்கணிந்து
தலையாலேபலிதேருந்தலைவனைத்
தலையே நீ வணங்காய். (1)

கண்காள்காண்மின்களோ — கடல் நஞ்சுண்டகண்டன்றன்னைக்
கெண்டோள்வீசிநின்றாடும்பிரான்றன்னைக்
கண்காள்காண்மின்களோ. (2)

செவிகாள்கேண்மின்களோ — சிவ னெம்மிறைசெம்பவள
மெரிபோன்மேனிப்பிரான்றிறமெப்போதுஞ்
செவிகாள்கேண்மின்களோ. (3)

மூக்கே நீ முரலாய் — முதுகாடுறை முக்கணனை
வாக்கேநோக்கியமங்கைமணாளனை
மூக்கே நீ முரலாய் (4)

வாயேவாழ்த்துகண்டாய் — மத யானையுரிபோர்த்துப்
பேய்வாழ்காட்டகத்தாடும்பிரான்றனை
வாயேவாழ்த்துகண்டாய். (5)

நெஞ்சே நீ நினையாய் — நிமிர்புன்சடைநின்மலனை
மஞ்சாடுமலைமங்கைமணாளனை
நெஞ்சே நீ நினையாய். (6)

கைகாள்கூப்பித்தொழீர் — கடி மாமலர்தூவிநின்று
பைவாய்ப்பரம்பரையார்த்தபரமனைக்
கைகாள்கூப்பித்தொழீர். (7)

ஆக்கையாற்பயனென் — னரன் கோயில்வலம்வந்து
பூக்கையாலட்டிப்போற்றியென்னாதவிவ்
வாக்கையாற்பயனென். (8)

கால்களாற்பயனென்—கறைக் கண்டனுறைகோயில்
கோலக்கோபுரக்கோகரணஞ்சூழாக்
கால்களாற்பயனென. (9)

உற்றாராருளரோ—வுயிர் கொண்டுபோம்போது
குற்றாலத்துறைகூத்தனல்லானமக்
குற்றாராருளரோ. (10)

இருமாந்திருப்பன்கொலோ—வீசன் பல்கணத்தெண்ணப்பட்
சிறுமானேந்திதன்சேவடிக்கீழ்ச்சென்றங் [டுச்
கிறுமாந்திருப்பன்கொலோ. (11)

தேடிக்கண்டுக்கொண்டேன்—திரு மாலொடு நான்முகனுந்
தேடித்தேடொணாத்தேவனையென்னுள்ளே
தேடிக்கண்டுகொண்டேன். (12)

திருச்சிற்றம்பலம்.

---

## திருவையாறு.

பண்-காந்தாரம். (4-ம் திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

மாதர்ப்பிறைக்கண்ணியானைமலையான்மகளொடும்பாடிப்
போதொடுநீர்சுமந்தேத்திப்புகுவாரவர்பின்புகுவேன்
யாதுஞ்சுவடுபடாமலையாறடைகின்றபோது
காதன்மடப்பிடியோடுங்களிறுவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (1)

போழிளங்கண்ணியினானைப்பூந்துகிலாளொடும்பாடி
வாழியம்போற்றியென்றேத்திவட்டமிட்டாடாவருவே
னாழிவலவனின்றேத்துமையாறடைகின்றபோது
கோழிபெடையொடுங்கூடிக்குளிர்ந்துவருவனக்கண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (2)

எரிப்பிறைக்கண்ணியினானையேந்திழையாளொடும்பாடி
முரித்தவிலயங்களிட்டுமுகமலர்ந்தாடாவருவே
னரித்தொழுகும்வெள்ளருவியையாறடைகின்றபோது
வரிக்குயில்பேடையொடாடிவைகிவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (3)

பிறையிளங்கண்ணியினானைப்பெய்வளையாளொடும்பாடித்
துறையிளம்பன்மலர்தூவித்தோளைக்குளிரத்தொழுவே
னறையிளம்பூங்குயிலாலுமையாறடைகின்றபோது
சிறையிளம்பேடையொடாடிச்சேவல்வருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (4)

ஏடுமதிக்கண்ணியானையேந்திழையாளொடும்பாடிக்
காடொடுநாடுமலையுங்கைதொழுதாடாவருவே
னாடலமர்ந்துறைகின்றவையாறடைகின்றபோது
பேடைமயிலொடுங்கூடிப்பிணைந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (5)

தண்மதிக்கண்ணியினானைத்தையனல்லாளொடும்பாடி
யுண்மெலிசிந்தையனாகியுணராவுருகாவருவே
னண்ணலமர்ந்துறைகின்றவையாறடைகின்றபோது
வண்ணப்பகன்றிலொடாடிவைகிவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (6)

கடிமதிக்கண்ணியினானைக்காரிகையாளொடும்பாடி
வடிவொடுவண்ணமிரண்டும்வாய்வேண்டுவசொல்லிவாழ்வே
னடியிணையார்கருங்கழலானையாறடைகின்றபோது
விடிகுரலன்னதொரேனமிசைந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (7)

விரும்புமதிக்கண்ணியானைமெல்லியலாளொடும்பாடிப்
பெரும்புலர்காலையெழுந்துபெறுமலர்கொய்யாவருவே
னருங்கலம்பொன்மணியுந்துமையாறடைகின்றபோது
கருங்கலைபேடையொடாடிக்கலந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன், (8)

முற்றற்பிறைக்கண்ணியானைமொய்குழலாளொடும்பாடிப்
பற்றிக்கயிறறுக்கில்லேன்பாடியுமாடாவருவே
னற்றருள்பெற்றுநின்றாரோடடைகின்றபோது
நற்றுணைப்பேடையொடாடிநாரைவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (9)

திங்கண்மதிக்கண்ணியானைத்தேமொழியாளொடும்பாடி
யெங்கருளால்தங்கொலெந்தையெனக்கினியென்றுவருவே
னங்கிளமங்கையரொடுணையாயடைகின்றபோது
பைங்கிளிப்பேடையொடாடிப்பறந்துவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (10)

வளர்மதிக்கண்ணியினானைவார்குழலாளொடும்பாடிக்
களவுபடாததொர்காலங்காண்பான்கடைக்கணிக்கின்றே
னளவுபடாததோரன்போடடைகின்றபோது
விளமணநாகுதழுவியேறுவருவனகண்டேன்
கண்டேனவர்திருப்பாதங்கண்டறியாதனகண்டேன். (11)

திருச்சிற்றம்பலம்.

---

பெரியதாண்டகம் (6-ம் திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

அரியானையந்தணர்தஞ்சிந்தையானை
யருமறையினகத்தானையணுவையார்க்குந்
தெரியாததத்துவனைத்தேனைப்பாலைத்
திகழொளியைத்தேவர்கடங்கோனைமற்றைக்
கரியானைநான்முகனைக்கனலைக்காற்றைக்
கனைகடலைக்குலவரையைக்கலந்துநின்ற
பெரியானைப்பெரும்பற்றப்புலியூரானைப்
பேசாதநாளெல்லாம்பிறவாநாளே.

கற்றானைக்கங்கைவார்சடையான்றன்னைக்
காவிரிசூழ்வலஞ்சுழியுங்கருதினானை
யற்றார்க்குமலந்தார்க்குமருள்செய்வானை
யாரூரும்புகுவானையறிந்தோமன்றே

மற்றாருந்தன்னொப்பாரில்லாதானை
வானவர்களெப்பொழுதும்வணங்கியேத்தப்
பெற்றானைப்பெரும்பற்றப்புலியூரானைப்
பேசாதநாளெல்லாம்பிறவாநாளே.

கருமானினுரியதளேயுடையாவீக்கிக்
கனைகழல்கள்கலந்தொளிப்பவனல்கையேந்தி
வருமானத்திரடோள்கண்மட்டித்தாட
வளர்மதியஞ்சடைக்கணிந்துமானேர்நோக்கி
யருமாணவாண்முகத்தாளமர்ந்துகாண
வமரர்கணமுடிவணங்கவாடுகின்ற
பெருமானைப்பெரும்பற்றப்புலியூரானைப்
பேசாதநாளெல்லாம்பிறவாநாளே.

---

## திருமழப்பாடி

## சுந்தரமூர்த்தி நாயனார்.

பண்-நட்டராகம் (7-ம் திருமுறை.)

---

திருச்சிற்றம்பலம்.

பொன்னார்மேனியனே புலித்தோலையரைக்கசைத்து
மின்னார்செஞ்சடைமேல் மிளிர்கொன்றையணிந்தவனே
மன்னேமாமணியே மலபாடியுள்மாணிக்கமே
யன்னேயுன்னையல்லா லினியாரைநினைக்கேனே. (1)

கீளார்கோவணமுமதிருநீறு மெய்பூசியுன்றன்
றாளேவந்தடைந்தேன் றலைவாவெனையேன்றுகொணீ
வாளார்கண்ணிபங்கா மழபாடியுண்மாணிக்கமே
கேளாய்நின்னையல்லா லினியாரைநினைக்கேனே. (2)

எம்மானெம்மனையென் றனக்கெட்டனைச்சார்வாகா
ரிம்மாயப்பிறவி பிறந்தேயிறந்தெய்த்தொழிந்தேன்
மைம்மாம்பூம்பொழில்சூழ் மழபாடியில்மாணிக்கமே
யம்மாநின்னையல்லா லினியாரைநினைக்கேனே. (3)

பண்டேநின்னடியே னடியா ரடியார்கட்கெல்லாம்
தொண்டேபூண்டொழிந்தேன் றொடராமைத்துரிசறுத்தேன்
வண்டார்பூம்பொழில்சூழ் மழபாடியுள்மாணிக்கமே
யண்டாநின்னையல்லா லினியாரைநினைக்கேனே. (4)

கண்ணாயேழுலகுங் கருத்தாயவருத்தமுமாய்ப்
பண்ணாரின்றமிழாய்ப் பரமாயபரஞ்சுடரே
மண்ணார்பூம்பொழில்சூழ் மழபாடியுள்மாணிக்கமே
யண்ணாநின்னையல்லா லினியாரைநினைக்கேனே. (5)

நாளார்வந்தணுகி நலியாமுனநின்றனக்கே
யாளாவந்தடைந்தே னடியேனையுமேன்றுகொணீ
மாளாநாளருளு மழபாடியுள்மாணிக்கமே
யாளாநின்னையல்லா லினியாரைநினைக்கேனே. (6)

சந்தாருங்குழையாய் சடைமேற்பிறைதாங்கிநல்ல
வெந்தார்வெண்பொடியாய் விடையேறியவித்தகனே
மைந்தார்சோலைகள்சூழ் மழபாடியுள்மாணிக்கமே
யெந்தாய்நின்னையல்லா லினியாரைநினைக்கேனே. (7)

வெய்யவிரிசுடரோன் மிகுதேவர்கணங்களெல்லாஞ்
செய்யமலர்களிடமிகு செம்மையுணின்றவனே
மையார்பூம்பொழில்சூழ் மழபாடியுள்மாணிக்கமே
யையாநின்னையல்லா லினியாரைநினைக்கேனே. (8)

நெறியேநின்மலனே நெடுமாலயன்போற்றிசெய்யுங்
குறியேநீர்மையனே கொடியேரிடையாடலைவா
மறிசேரங்கையனே மழபாடியுள்மாணிக்கமே
யறிவேநின்னையல்லா லினியாரைநினைக்கேனே. (9)

ஏரார்முப்புரமு மெரியச்சிலைதொட்டவனை
வாரார்கொங்கையுடன் மழபாடியுண்மேயவனைச்
சீரார்நாவலர்கோ னாரூரனுரைத்ததமிழ்
பாரோரேத்தவல்லார் பரலோகத்திருப்பாரே. (10)

திருச்சிற்றம்பலம்.

---



உ

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீராமலிங்க சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருவருட்பா.



## சிவநேச வெண்பா.

முன்னவனே யானைமுகத்தவனே முத்திநலஞ்
சொன்னவனே தூய்மெய்ச் சுகத்தவனே-மன்னவனே
சிற்பரனே யைங்கரனே செஞ்சடையஞ்சேகரனே
தற்பரனே நின்றாள் சரண்.

## மகாதேவ மாலை.

உலகநிலைமுழுதாகி யாங்காங்குள்ள
வுயிராகி யுயிர்க்குயிராமொளிதானாகிக்
கலகநிலையறியாத காட்சியாகிக்
கதியாகிமெய்ஞ்ஞானக் கண்ணதாகி
யிலகுசிதாகாசமதாய்ப் பரமாகாச
வியல்பாகியிணையொன்றுமில்லாதாகி
யிலகுநிலறிவானந்தமாகிச்
சச்சிதானந்தமயமாகி யமர்ந்ததேவே.

## திருவெண்முறையீடு.

நான்படும்பாடு சிவனேயுலகர் நவிலும்பஞ்சு
தான்படுமோ சொல்லத்தான்படுமோ வெண்ணத்தான்படுமோ
கான்படுகண்ணியின் மான்படுமாறு கலங்கிநின்றே
னேன்படுகின்றனை யென்றிரங்கா யென்னிலென்செய்வனே.

## வடிவுடை மாணிக்கமாலை.

கடலமுதே செங்கரும்பே யருட்கற்பகக்கனியே
யுடலுயிரே யுயிர்க்குள்ளுணர்வே யுணர்வுள்ளொளியே

படல்விடையா ரொற்றியாரிடங் கொண்டவருமருந்தே
படலவிழ்ஞானமலரே வடிவுடைமாணிக்கமே.

## நமச்சிவாய ஸங்கீர்த்தன லகரி.

சொல்லவாவிய தொண்டர்தம்மனத்திற்
சுதந்தரங்கொடுத்தோன்றிய துணையைக்
கல்லவாவிய வேழைமையே னெஞ்சுங்
கரைந்து வந்திடக்கலந்திடுங்களிப்பைச்
செல்லவாவியபொழிற்றிருவொற்றித்
தேனைத் தில்லைச்சிற்றம்பலத்தாடு
நல்லையப்பினை நான்மறைப் பொருளை
நமச்சிவாயத்தை நான்மறவேனே.

## திருவருள் வழக்க வணக்கம்.

தோடுடையார் புலித்தோலுடையார் கடற்றூங்குமொரு
மாடுடையார் மழுமானுடையார் பிரமன்றலையா
மோடுடையா ரொற்றியூருடையார் புகழோங்கியவெண்
காடுடையார்நெற்றிக் கண்ணுடையா ரெங்கடவுளரே.

## அருளியல் வினவல்.

தேனெனவினிக்குந்திருவருட்கடலே தெள்ளியவமுதமே சிவமே
வானெனநிறைந்தசெய்வமே முல்லைவாயில்வாழ்மாசிலாமணியே
யூனெனநின்றவுணர்விலேனெனினுமுன்றிருக்கோயில்வந்தடைந்தா
லேனெனக்கேளா திருந்தனையையா வீதுநின்றிருவருட்கியல்பே.

## அன்பு மாலை.

அற்புதப்பொன்னம்பலத்தே யாடுகின்றவரசே
யாரமுதேயடியேன்றனன்பே யென்னறிவே
கற்புதவுபெருங்கருணைக்கடலே யென்கண்ணே
கண்ணுதலேயானந்தக்களிப்பே மெய்க்கதியே
வெற்புதவுபசுங்கொடியை மருவுபெருந்தருவே
வேதவாகமமுடியின் விளங்குமணிவிளக்கே

பொற்புறவேயிவ்வுலகிற் பொருந்துசித்தனானேன்
பொருத்தமுநின் றிருவருளின் பொருத்தமதுதானே.

நிறையணிந்தசிவகாமியேநிறையொளியே
நித்தபரிபூரணமாஞ் சுத்தசிவவெளியே
கறையணிந்தகளத்தரசே கண்ணுடையகரும்பே
கற்கண்டேகனியேயென் கண்ணேகண்மணியே
பிறையணிந்தமுடிமலையே பெருங்கருணைக்கடலே
பெரியவரெலலாமவணங்கும் பெரியபரம்பொருளே
குறையணிந்துதிரிகின்றேன் குறைகளெலாந்தவிர்த்தே
குற்றமெலாங்குணமாகக் கொள்வதுநின்குணமே.

## திருவருட் பெருமை.

அன்பனேயப்பாவம்மையேயரசே
யருட்பெருஞ்சோதியேயடியேன்
துன்பெலாந்தொலைத்ததுணைவனே
ஞானசுகத்திலேதோற்றியசுகமே
யின்பனேயெலாம் வல்லசித்தாகி
யென்னுளேயிலங்கியபொருளே
வன்பனேன்பிழைகள் பொறுத்தருட்
சோதிவழங்கினைவாழிநின்மாண்பே.

## உபதேச உண்மை.

கண்ணேகண்மணியே கருத்தேகருத்தின்கனிவே
விண்ணேவிண்ணிறைவே சிவமேதனிமெய்ப்பொருளே
தண்ணேரொன்மதியே யெனைதந்தபாநிதியே
யுண்ணேருள்ளொளியே யெனக்குண்மையுரைத்தருளே.

## திருத்தணிகைப் பதிகம்.

சீர்கொண்டதெய்வவதனங்களாறுந் திகழ்கடப்பந்
தார்கொண்டபன்னிருதோள்களுந் தாமரைத்தாள்களுமோர்
கூர்கொண்டவேலுமயிலுநற்கோழிக்கொடியுமருட்
கார்கொண்டவண்மைத் தணிகாசலமுமென்கண்ணுற்றதே.

## செழுஞ்சுடர் மாலை.

ஊனேயுடையேபொருளே யென்றருகிமனதுதமோறி
வினைதுயரத்தழுங்குகின்றேன் வேறோர் துணைநின்னடியன்றிக்
காணேனமுதே பெருங்கருணைக்கடலே கனியேகரும்பேதற்
சேனேர்தணிகைமலைமருந்தே ஞானச்செழுஞ்சுடரே.

## வேட்கை விண்ணப்பம்.

மன்னேயென்றனுயிர்க்குயிரே மணியேதணிகைமலைமருந்தே
யன்னேயென்னையாட்கொண்டவரசே தணிகையையாவே
பொன்னேஞானப்பொங்கொளியே புனிதவருளேபூரணமே
யென்னேயெளியேன்றுயருழந்த லெண்ணியிரங்கா திருப்பதுவே.

## பிள்ளைப்பெரு விண்ணப்பம்.

கருணையாரமுதே யென்னுயிர்க்குயிரே
கனிந்தசிற்றம்பலக்கனியே
வருணமாமறையின் மெய்ப்பொருளாகிய
வயங்கியவள்ளலேயன்பர்
தெருணிறையுளத்தே திகழ்தனித்தலைமைத்
தெய்வமேதிருவருட் சிவமே
தருணமென்றொருமைத்தந்தையே
தாயேதரித்தருள் திருச்செவிக்கிதுவே.

## சரணடைதல்.

எண்ணுகின்றேனெண்ணமெலா மெய்தவருள்செய்கின்றதனித்
தண்ணாரமுதே சிற்சபையிற்றனித்ததலைமைப்பெருவாழ்வே
கண்ணொளியே யொளியெல்லாங்கலந்த வெளியேகருதருமே
யண்ணலையாவம்மாவென்னப்பாயா னுன்னடைக்கலமே.

## உத்தரஞான சிதம்பர மான்மியம்.

அருளோங்குகின்றதருட்பெருஞ்சோதியடைந்ததென்றன்
மருளோங்குறுமற்றவிர்த்தது நல்லவரமளித்தே
பொருளோங்கானருட் பூமியிலவாழப்புரிந்ததென்றுந்
தெருளோங்கவோங்குவதுத் தரஞானசிதம்பரமே.

## கைம்மாறின்மை.

கடையேன்புரிந்தகுற்றமெலாங்கருதாதென்னுட் கலந்துகொண்டு
தடையேழுந்தவிர்த்தருளித் தனித்தஞானவமுதளித்துப்
புடையேயிருத்தியருட்சித்திப்பூவைதனையும்புணர்த்தியருட்
கொடையேகொடுத்தாய்நின்றனக்குக்கைம்மாறேதுகொடுப்பேனே

## அனுபவசித்தி.

காட்டினைஞானவமுதளித்தாய்நற்கனகசபை
யாட்டினையென்பக்கமாக்கினை மெய்ப்பொருளன்றுவந்து
நீட்டினையென்றமிழ்யாவரந்தந்து நின்சபையிற்
கூட்டினைநான்முனஞ் செய்தவம்யாதது கூறுகவே.

## அபயங்கூறல்.

இன்பிலேவயங்குசிவபரம்பொருளே யென்னுயிர்க்கமுதமேயென்ற
னன்பிலேபழுத்ததனிப்பெரும் பழமேயருணடம்புரியுமென்னரசே
வன்பிலேவிளைந்தமாயையும் வினையுமடிந்தனவிடிந்ததாலிரவுந்
துன்பிலேனினிநானருட் பெருஞ்சோதிச்சூழலிற்று லங்குகின்றே
[னே.

## ஆற்றாமை



எண்சீரடியாசிரிய விருத்தம்.

ஞாலத்திடைப்புக்கொடியனெனநாடித்தனக்குங் கொடியேன்
குறிகளிலுங் கொடியனன்றிக் குணங்களிலுங்கொடியேன்
மலத்திடையே புழுத்தசிறு புழுக்களிலுங்கடையேன்
வன்மதத்துப்பெருமபாவி வஞ்சநெஞ்சப்புலையேன்
கலத்திடையோரணுவளவும் நண்ணுசீலன் பொல்லா
நாய்க்குநகைதோன்றநின்றேன் பேய்க்குமிகவிழிந்தேன்
நிலத்திடைநானேன்பிறந்தேனின் கருத்தையறியே
னிர்க்குணமேநடராஜ நிபுணமணிவிளக்கே. (1)

விளக்கறியா விருட்டறையிற் கவிழ்ந்துகிடந்தழுது
விம்முகின்றகுழவியினு மிகப்பெறிதுஞ்சிறியேன்
அளக்கறியாத்துயர்க்கடலில்விழுந்துநெடுங்கால
மலைந்தலைந்து மெலிந்ததுரும்பதனின்மிகத்துரும்பேன்
கிளக்கறியாக்கொடுமையெலாங்கிளைத்தபழுமரத்தேன்
கெடுமதியேன் கடுமையினேன் கிரிபேசுமவெறியேன்
களக்கறியாப்புவியிடைநானென்பிறந்தேனந்தோ
கருணைநடத்தரசே நின்கருத்தை யறிந்திலனே. (6)

அறியாதபொறியவர்க்கு மிழிந்ததொழிலவர்க்கு
மதிகரித்துத்துன்மார்க்கத்தரசுசெயுங்கொடியேன்
குறியாதகொடும்பாவச்சுமை சுமக்குந்திறத்தேன்
கொல்லாமையென்பதையோர் குறிப்பாலுங்குறியேன்
செறியாதமனக்கடையேன் றீமையெலாமுடையேன்
சினத்தாலுமதத்தாலுஞ் செறிந்தபுதலனையேன்
எறியாதபுவியிடைநானேன் பிறந்தேனுன்ற
னிதயமறியேன் மன்றிலினித்தநடத்திறையே. (7)

இனித்தபழச்சாறு விடுத்திழித்தமலங்கொளுமோ
ரிழிவிலங்கினிழிந்து நின்றேனிரக்கமொன்றுமில்லேன்
அனித்தநெறியிடைத்தொடர்ந்து மனித்தவுடம்பெடுத்த
வறக்கடையர்தமக்கெல்லாமறக்கடையனானேன்
பணித்தமனக்குரங்காட்டிப்பலிக்குழலுங்கொடியேன்
பாதகமுஞ்சூதகமும்பயின்ற பெரும்படிறேன்
தனித்தகடுங்குணத்தனே னென்பிறந்தேனினது
தனிக்கருத்தையறிந்திலேன் சபைக்கேற்றுமொளியே. (8)

ஏறுகின்றேமென மதித்தேயிறங்குகின்றகடையே
னேதமெலாநிறைமனத்தே னிரக்கமிலாப்புலையேன்
சீறுகின்றபுலியனையேன் சிறுதொழிலேபுரிவேன்
செய்வகையொன்றறியாத சிறியரினுஞ்சிறியேன்
மாறுகின்றகுணப்பேதை மதியதனால்விழைந்தேன்
வஞ்சமெலாங்குடிகொண்ட வாழ்க்கைமிகவுடையேன்

விறுகின்றவுலகிடைநானேன் பிறந்தேனினது
　மெய்க்கருத்தையறிந்திலேன் விளங்குநடத்தரசே. (9)

அரசரெலாமதித்திடப் பேராசையிலேயரசோ
　டாலெனவேமிகக்கிளைத்தேனருளறியாக்கடையேன்
புரசமரம்போற்பருத்தேனெட்டியெனத்தழைத்தேன்
　புங்கெனவும்புளியெனவும் மங்கியுதிர்கின்றேன்
பரசும்வகைதெரிந்துகொளேன் றெரிந்தாரைப்பணியேன்
　பசையறியாக்கருங்கன் மனப்பாறைசுமந்துழல்வேன்
விரசுநிலத்தேன் பிறந்தேனின்கருத்தையறியேன்
　வியக்குமணிமன்றோங்கி விளங்குபரம்பொருளே. (10)

பொருளறியேன் பொருளறிந்தார் போன்றுநடித்திங்கே
　பொங்கிவழிந்துடைகின்றேன் பொய்யகத்தேன்புலையேன்
மருளறியாத் திருவாளருளங்கயக்கத்திரிவேன்
　வையுண்டுமுழவுதவா மாடெனவேதடித்தேன்
வெருளறியாக்கொடுமனத்தேன் விழற்கிறைத்துக்களிப்பேன்
　வீணர்களிற்றலைநின்றேன் விலக்கனைத்தும்புரிவேன்
தெருளறியேனுலகிடைநானேன் பிறந்தேனினது
　திருவுளத்தையறிந்திலேன் தெய்வநடத்தவனே. (11)

தவம்புரியேன்றவம்புரிந்தார் தமைப்போனடித்துத்
　தருக்குகின்றேனுணர்ச்சியிலாச்சடம்போலவிருந்தேன்
பவம்புரிவேன் கடைநாயிற்கடைப்பால் கழிக்குங்கடையேன்.
　பயனறியாவஞ்சமனப்பாறை சுமந்துழல்வேன்
அவம்புரிவேனறிவறியேனன்பறியேனன்பா
　லெயாநின்னடியடைந்தார்க்கனுந் துணையுமுதவேன்
நவம்புரியுமுலகிடைநானேன் பிறந்தேனினது
　நல்லதிருவுளமறியேன் ஞானநடத்திறையே. (12)

இறைப்பளவுமறிவொழுக்கத் திச்சையிலேனாகி
　வீணருடன்றுவாடுகின்றேனொல்லார்க்குமிழிந்தேன்
பொறையளவோ நன்மையெலாம் போக்கில் விட்டுத்தீமை
　புரிகின்றேனெரிகின்ற புதுநெருப்பிற் கொடியேன்

நிறையளவோ முறையளவோ நிலையளவுந்தவிர்ந்த
நெடுஞ்சாலநெஞ்சகத்தேனீல விடம்போல்வேன்
கறையளவாவுலகிடைநானேன் பிறந்தேனினது
கருத்தறியேன் கருணைநடங்காட்டுகின்றகுருவே. (9)

காட்டுகின்றவுவர்க்கடல் போற்கலைகளிலுஞ்செல்வக்
களிப்பினிலுஞ் சிறந்து மிகக்களித்து நிறைகின்றேன்
நீட்டுகின்றவாபத்திலொரு சிறிதுமுதவேன்
நெடுந்தூரமாழ்ந்ததவாப்படுங்கிணறு போல்வேன்
ஆட்டுகின்றவருட்பெருமையொரு சிறிதுந்தெரியே
னச்சமிலேனாணமிலே னடக்கமொன்றுமிலேன்
கூட்டுகின்றவுலகிடைநானேன்பிறந்தேனினது
குறிப்பறியேன் மன்றினடங்குலவுகுலமணியே. (10)

திருச்சிற்றம்பலம்.

---

## முறையீடு.

---

எண்சீரடியாசிரியவிருத்தம்.

மருந்தறியேன்மணியறியேன் மந்திரமொன்றறியேன்
மதியறியேன் விதியறியேன் வாழ்க்கைநிலையறியேன்
திருந்தறியேன் திருவருளின் செயலறியே னறந்தான்
செய்தறியேன் மனமடங்குந் திறத்தினிலோரிடத்தே
யிருந்தறியே னறிந்தோரையேத்திடவுமறியே
னெந்தைபிரான் மணிமன்றமெய்தவறிவேனோ
யிருந்ததிசைசொலவறியேனெங்ஙனநான்புகுவேன்
யார்க்குரைப்பேனென்னசெய்வேனேதுமறிந்திலனே. (1)

அகங்காரக்கொடுங்கிழங்கை யகழ்ந்தெறியவறியே
னறிவறிந்தவந்தணர்பாற் செறியுநெறியறியேன்
நகங்கானமுறுதவர்போல் நலம்புரிந்துமறியேன்
நச்சுமாக்கனிபோலே யிச்சைகனிந்துழன்றேன்

மகங்காணும்புலவரெலாம் வந்துதொழுதடிக்கும்
மணிமன்றந்தனையடையும் வழியுமறிவேனோ
இகங்காணத்திரிகின்றே னெங்ஙனநான் புகுவேன்
யார்க்குரைப்பே னென்னசெய்வே னேதுமறிந்திலனே. (2)

கற்குமுறைகற்றறியேன் கற்பனகற்றறிந்த
கருத்தர்திருக்கூட்டத்திற் களித்திருக்கவறியேன்
நிற்குநிலைநின்றறியே னின்றாரினடித்தேன்
நெடுங்காமப்பெருங்கடலை நீந்தும்வகையறியேன்
சிற்குணமாமணி மன்றிற்றிருநடனம்புரியுந்
திருவடியென்சென்னிமிசைச் சேர்க்கவறிவேனோ
இற்குணஞ்செய்துழல்கின்றே னெங்ஙனநான் புகுவேன்
யார்க்குரைப்பேனென்னசெய்வே னேதுமறிந்திலனே. (3)

தேகமுறுபூதநிலைத்திறஞ்சிறிதுமறியேன்
சிதகாநதநிலையறியேன் சித்திநிலையறியேன்
யோகமுறுநிலைசிறிது முணர்ந்தறியேன்சிறியே
னுலகநடை யிடைக்கிடந்தேயுழைப்பாரிற்கடையேன்
ஆகமுறுதிருநீற்றினொளிவிளங்க வசைந்தே
யம்பலத்திலாடுகின்றவடியையறிவேனோ
ஏகவறுபவமறியே னெங்ஙனநான்புகுவேன்
யார்க்குரைப்பேனென்னசெய்வே னேதுமறிந்திலனே. (4)

வேதாந்தநிலைநாடி விரைந்துமுயன்றறியேன்
மெய்வகையுங்கைவகையுஞ் செய்வகையுமறியேன்
நாதாந்தத்திருவீதி நடந்திடுதற்கறியேன்
நானாரென் றறியே னெங்கோனாரென்றறியேன்
போதாந்தத்திருநாடு புகவறியேன்ஞான
பூரணாகாயமெனும்பொதுவையறிவேனோ
ஏதாந்தீயேன் சரிதமெங்ஙன நான்புகுவேன்
யார்க்குரைப்பே னென்னசெய்வேனே து மறிந்திலனே. (5)

கலைமுடிவுகண்டறியேன் கரணமெலாமடக்குங்
கதியறியேன் கதியறிந்த கருத்தர்களையறியேன்

கொலைபுலைகள் விடுத்தறியேன் கோபமறுத்தறியேன்
கொடுங்காமக்கடல்கடக்குங் குறிப்பறியேன்குணமா
மலைமிசைநின்றிடவறியேன் ஞானநடம்புரியும்
மணிமன்றந்தனையடையும் வழியுமறிவேனோ
இலையெனும் பொய்யுலகினிடையெங்ஙனநான் புகுவேன்
யார்க்குரைப்பே னென்னசெய்வே னேதுமறிந்திலனே.

சாதிமதஞ்சமயமெனுஞ் சங்கடம்விட்டறியேன்
சாத்திரச்சேறாடுகின்ற சஞ்சலம்விட்டறியேன்
ஆதியந்தநிலையறியேனலை யறியாகக்கடல்போ
லானந்தப்பெரும்போகத்தமர்ந்திடவு மறியேன்
நீதிநெறிநடந்தறியேன் சோதிமணிப்பொதுவில்
நிருத்தமிடுமொருத்தர் திருக்கருத்தையறிவேனோ
ஏதிலர்சாருலகினிடையெங்ஙனநான் புகுவேன்
யார்க்குரைப்பேனென்னசெய்வே னேதுமறிந்திலனே.

சாகாதகலையறியேன் வேகாதகாலின்
தரமறியேன் போகாதபுண்ணீரை யறியேன்
ஆகாயநிலையறியேன் மாகாயநிலையு
மறியேன் மெய்ந்நெறிதனையோரணுவளவுமறியேன்
மாகாதலுடையபெருந்திருவாளர்வழுத்தும்
மணிமன்றந்தனையடையும் வழியுமறிவேனோ
ஏகாயவுலகினிடையெங்ஙனநான் புகுவேன்
யார்க்குரைப்பே னென்னசெய்வே னேதுமறிந்திலனே.

தத்துவமென் வசமாகத்தான் செலுத்தவறியேன்
சாகாதகல்விகற்குந் தரஞ்சிறிதுமறியேன்
அத்தநிலை சத்தநிலையறியேன் மெய்யறிவை
யறியேன் மெய்யறிந்தடங்கு மறிஞரையுமறியேன்
சுத்தசிவசன்மார்க்கத்திருப்பொதுவினிடத்தே
தூயநடம்புரிகின்ற ஞாயமறிவேனோ
எத்தனையுங்குணமறியே னெங்ஙனநான் புகுவேன்
யார்க்குரைப்பே னென்னசெய்வே னேதுமறிந்திலனே.

வரையபரமார்க்கமொடு பரமார்க்கமறியேன்
மரணபயந்தவிர்த்திடுஞ் சன்மார்க்கமதையறியேன்
திரையறுதண்கடலறியே னக்கடலைக்கடந்தே
தெள்ளமுதமுணவறியேன் சினமடக்கவறியேன்
உரையுணர்வுகடந்ததிருமணிமன்றந்தனிலே
யொருமைநடம்புரிகின்றார் பெருமையறிவேனோ
இரையுறுபொய்யுலகினிடையெங்ஙனநான் புகுவேன்
யார்க்குரைப்பேனென்னசெய்வே னேதுமறிந்திலனே.

திருச்சிற்றம்பலம்.

---

## திருவருட்பெருமை.

### எண்சீரடியாசிரியவிருத்தம்.

---

திருச்சிற்றம்பலம்.

வெறுத்துரைத்தேன் பிழைகளெலாம்பொறுத்தருளல்வேண்டும்
விளங்கறிவுக்கறிவாகி மெய்ப்பொதுவினடிப்போய்
கறுத்துரைத்தார்தமக்கு மருள்கனிந்துரைக்கும் பெரிய
கருணைநெடுங்கடலே முக்கண்ணோங்கு கரும்பே
பொறுத்துரைப்பதேவ னருணீவழங்குகினு மன்றி
மறுத்திடினு முன்னையலான் மற்றொருசார்பறியேன்
செறுத்துரைத்தவுரைகளெலாந் திருவருளேயென்று
சிந்திப்பதல்லாமற் செய்வகையொன்றிலனே.

மிகுத்துரைத்தேன் பிழைகளெலாஞ் சகித்தருளல்வேண்டும்
மெய்யறிவின்புருவாகி வியன்பொதுவினடிப்போய்
தொகுத்துரைத்த மறைகளும்பின் விரித்துரைத்துங்காணத்
துரியநடுவேயிருந்த பெரியபரம்பொருளே
பகுத்துரைத்த பயனுரைக்கோர்பொருளாகி விளங்கும்
பரஞ்சுடரேபரம்பரனே பசுபதியேயடியேன்
வகுத்துரைப்பதேவனருணீ வழங்குகினுமன்றி
மறுத்திடினுமுன்னையலான் மற்றொருசார்பிலனே.

முன்னவனே சிறியேனன் சிறிதுமறியாதே
முனிந்துரைத்த பிழைபொறுத்துக்கனிந்தருளல்வேண்டு
மென்னவனேயென்றுணையே யென்னுறவேயென்னை
யீன்றவனே யென்றாயே யென்குருவேயெனது
மன்னவனே யென்னுடைய வாழ்முதலேயென்கண்
மாமணியே மணிமிடற்றோர் மாணிக்கமலையே
அன்னவனேயம்பலத்துளாடுகின்றவமுதே
யாறணிந்த சடையாயான்வேறு துணையிலனே.

சினந்துரைத்தேன்பிழைகளெலாமனம்பொறுத்தல்வேண்டும்
தீனதயாநிதியே மெய்ஞ்ஞான சபாபதியே
புனைந்துரைப்பாரகத்தொன்றும் புறத்தொன்று நினைத்தே
பொய்யுலகராங்கவர்போற் புனைந்துரைத்தேனலவுன்
இனந்திருத்தியெனையாட்கொண்டென்னுளமர்ந் தெனைத்தா
னெவ்வுலகுந் தொழநிலைமேலேற்றியசற்குருவே
கனந்தருசிற்சுகவமுதங்களித்தளித்த நிறைவே
கருணைநடத்தரசேயென் கண்ணிலங்குமணியே.

ஊடுதற்கோரிடங்காணே னுவக்குமிடமுளதோ
வுன்னிடமுமென்னிடமு மோரிடமாதலினால்
வாடுதற்குநேர்ந்திடிலோ மாட்டாமையாலு
மனம்பிடியாமையினாலுஞ் சினந்துரைப்பேன் சிலவே
கூடுதற்குவல்லவனீ கூட்டியெனைக்கொண்டே
குலம்பேசவேண்டாமென் குறிப்பனைத்து மறிந்தாய்
நாடுதற்கிங்கென்னாலே முடியாது நீயே
நாடுவித்துக்கொண்டருள்வாய் ஞானசபாபதியே.

திருச்சிற்றம்பலம்.



இராகம்-அடாணா, ரூபகதாளம்.

திருச்சிற்றம்பலம்.

பல்லவி.

எனக்குமுனக்கு மிசைந்தபொருத்த மென்னபொருத்தமோ
இந்தப்பொருத்த முலகில் பிறருக்கெய்தும்பொருத்தமோ.

## சரணம்.

தனக்குநிகரிங்கில்லா துயர்ந்தபொன்றதே
தாவிப்போகப்போக நூலின்றரத்தினின்றதே
கனக்கத்திசைப்புற்றங்கே நாலுங்கலங்கிவருந்தவே
கலக்கநீக்கித்தூக்கிவைத்தாய் நிலைபொருந்தவே. (என)
இங்கோர்மலையினடுவிலுயர்ந்த தப்பாலுகவே
ஏறிப்போகப்போக நூலினிறைபோலு நூறுகவே
அங்கேதிகைத்து நடுங்கும்போதென்னடுக்க நீக்கியே
பதம்மேலுயர்ந்தநிலையில வைத்தாயடி மாபாக்கியே. (என)

இராகம்-எதுகுலகாம்போதி, அடதாளம். உசி.

## பல்லவி.

ஆணிப்பொன்னம்பலத்தே கண்டகாட்சிகள்
அற்புதக்காட்சியடி-அம்மா-அற்புதக்காட்சியடி

## சரணங்கள்.

சோதிமலையொன்று தோன்றிற்றதிலொரு
வீதியுண்டாச்சுதடி—அம்மா
வீதியுண்டாச்சுதடி. (ஆணி)
வீதியிற்சென்றே னவ்வீதிநடுவொரு
மேடையிருந்ததடி—அம்மா
மேடையிருந்ததடி. (ஆணி)

## கலி விருத்தம்.

அற்புதக்கணபதி யமலபோற்றியே
தற்பர சண்முகசாமிபோற்றியே
சிற்பர சிவமகாதேவ போற்றியே
பொற்பமர் கௌரிநிற் போற்றி போற்றியே. (என)

## வண்ணவெண்சீர் விருத்தம்.

கலைநிறை கணபதி சரணஞ் சரணம்
கஜமுக குணபதி சரணஞ் சரணம்
தலைவனி னிணையடி சரணஞ் சரணம்
சரவண பவகுக சரணஞ் சரணம்
சிலைமலை யுடையவ சரணஞ் சரணம்
சிவசிவ சிவசிவ சரணஞ் சரணம்
உலைவறு மொருபரை சரணஞ் சரணம்
உமைசிவை யம்பிகை சரணஞ் சரணம்.

திருச்சிற்றம்பலம்.

## பஞ்சபூதத்தலங்கள் 5.

ஆரூர்ப்ருதிவியாம் ஆனைக்காவப்புவாம்
சேருமண்ணாமலை நெருப்பாம்—சீரூர்
தேவன்காண் காளத்தி தில்லைமாகாயம்
சிவன்காண் கூடற்சிவம்.

ப்ருதிவி - திருவாரூர் - மண்
அப்பு - திருவானைக்காவல் - ஜலம்
வாயு - திருகாளத்தி - காற்று
தேயு - திருவண்ணாமலை - நெருப்பு
ஆகாயம் - சிதம்பரம் - வெளி.

## சத்தவிடங்கத்தலங்கள் 7.

சத்தவிடங்கத்தலங்கள் சாற்றுங்கால் நள்ளாறு
கத்தனாரூர்வாய்மூர்காறாயில் - நத்து
நாகைக்காரோணமுடன் நாடுதிருக்கோளிளியும்
ஈசைமறைக்காடாமிசை.

1. திருநள்ளாறு - நகவிடங்கர் - உன்மத்தநடனம்
2. திருவாரூர் - வீதிவிடங்கர் - அசபாநடனம் (வீசி)
3. திருவாய்மூர் - நீலவிடங்கர் - கமலநடனம்
4. திருக்காறாயில் - ஆதிவிடங்கர் - குக்குடாநடனம்
5. திருநாகைக்காரோணம் - சுந்திரவிடங்கத்தியாகர் நடனம்
6. திருக்கோளிளி - அவனிவிடங்கத்தியாகர் - வண்டுநடனம்
7. திருமறைக்காடு - புவனிவிடங்கர் - அமிர்தநடனம்.

## ஆபரணத்தலங்கள் 6.

1. மூலமகாலிங்கமொடு கணேசனெங்கள் முருகேசன்மூவரு
மாஞ்சோமாஸ்கந்தம்
2. ஞாலமெலாந்துதிசெயநடராஜமூர்த்தகற்றுறைதா[illegible]
டேசனென்றுந்
3. கோலவடிவிலைய்யாறும் விசேடமாகக்குலவு திருப்பதி
[illegible]போ ; [illegible]லாம்

4. ஆலவிடமுண்டிருண்டகண்டத் தெம்மானுபாண
ஸ்தலங்களென்பரறையுநாலே,

மகாலிங்கம் - திருவிடைமருதூர்
கணபதி - வலிவலம்
சுப்ரமணியம் - சுவாமிமலை
சோமாஸ்கந்தம் - திருவாரூர்
நடராஜர் - சிதம்பரம்
சண்டேஸ்வரா - திருச்சேய்ஞலூர்.

## முத்தித்தலங்கள் 4.

தில்லையைக்காணக்காசியிலிறக்கச்
சிறக்குமாரூர்தனிற்பிறக்க
எல்லையில் பெருமையருணையைநினைக்க
வெய்தலாமுத்தி யென்றுரைத்தீ
சொல்லையினுலுத்தலங்களுந்தம்மில்
ஒக்குமென்றுரைத்திடா தடிகேள்
அல்லிசூழருணைபதிகமென்றுரைத்த
தருளெனவருள் செய்னவனும்.

சிதம்பரம், காசி, திருவாரூர், திருவண்ணுமலை.

சிதம்பரத்தை தரிசனஞ்செய்தாலும், காசியிலே தேகத்தை விட்டாலும், சிறப்புள்ள திருவாரூரிலே பிறந்தாலும், அளவில்லாத பொருமையுடைய அருணுஜலத்தை நினைத்தாலும் முத்திகிடைக்குமென்று அருளிசசெய்திருக்கிறுர்கள்.

## சப்தபுரித்தலங்கள் 7.

அயோத்தியாமதுராமாயா
காசி காஞ்சி அவந்திகா—புரி
துவாராவதிசைவ
சப்தயிதே மோக்ஷதாயகா.

அயோத்தி, மதுரா, மாயா, காசி,
காஞ்சி, அவந்திகா (பாடலீபுரம்,) துவாராவதி (துவாரகை.)

## நவதாண்டவத்தலங்கள் 9,

வடாரண்ணியஞ்ச கைலாசம்
சுவேதாரண்ணியம் சிதம்பரம்
மதுராகும்பகோணஞ்ச
தேவதாரு வனந்ததா

திருபுராணம்வனம் புண்ணியம்
சத்தியாஷாடபுரம்ததா

வடாரண்ணியம்—திருவாலங்காடு
கைலாசம்—வெள்ளியங்கிரி
சுவேதாரண்ணியம்—வேதாரண்ணியம்
சிதம்பரம்—அம்பலம்
மதுரை—மதுரை
கும்பகோணம்—திருக்குடந்தை
தேவதாருவனம்—
திரிபுராணம்—திருவதிகை
சத்தியஷாடபுரம்—

## ஷடுஸ்தலங்கள் 6.

சுவேதாரண்ணியம் பஞ்சநதம்
கௌரீமாயூர—மர்ச்சுனம்
சாயாவனஞ்ச ஸ்ரீ வாஞ்சியம்
காசிக்ஷேத்ர சமானஷடு.

திருவெண்காடு
திருவையாறு
மாயூரம்
திருவிடைமருதூர்
திருச்சாயக்காடு
திருவாஞ்சியம்

## சப்த ஸ்தலங்கள் 7.

ஸ்ரீசைலம்
கேதாரம்
காசி
குருக்ஷேத்ரம் (டில்லி)
பிரயாகை (அலஹபாட்)
சிதம்பரம்
திருவாரூர்

### சப்த ஸ்தலங்கள் 7-க்கு பாட்டு.

காசி பிரயாகை திருவாரூர் கேதாரமொடு கமலநாதன்
பூசனைசெய்திலகு குருக்ஷேத்திரம் பொன்னம்பலநற்புனிதசிவர்
தேசுடன்வாழ் ஸ்ரீசைலமிவை சத்தபுரி இதனைத்தெரிசித்தோர்கள்
பாசவினைத்தொடர்நீங்கிச் சிவகதிபெற்றுயவரெனப்பகருநூலே.

### ஆயிரத்தெட்டில் விசேஷத்தலங்கள் 8.

பல்லவுற்றிடுகாசியம்பலம் மதுரைசேதுமறைப்புனம்
நல்லஞானிகள் சேர்குடந்தை நன்னகரர்ச்சுனபுரமுடன்
செல்லலற்றிடு கமலையம்பதி சேரவேகதிசிந்தையோர்
அல்லலுற்றபிறப்பிறப்பிலலைந்திடார் கதியடைவரே.

| | |
|---|---|
| காசி—காசி | அம்பலம்—சிதம்பரம் |
| மதுரை—மதுரை | இராமேச்சுரம்—சேது |
| மறைப்புனம்—வேதாரண்யம் | குடந்தை—கும்பகோணம் |
| அர்ச்சுனம்—திருவிடைமருதூர் (மத்தியார்ச்சுனம்) | கமலயம்—திருவாரூர் |

### பஞ்சமகா சபை 5.

திருக்கோயிற் கனகசபை திருவாலங்காடதனில்
செருக்கானவிரத்தினசபை குற்றாலச்சித்திரசபை
இருக்காதிவியாசர்புறை இடந்தமதுரை வெள்ளிச்சபை
பெருக்காம்நெல்வேலிசெப்பு பேரம்பலான் நடனங்களே

கோயில் சிதம்பரம்—கனகசபை (பொன்னம்பலம்)
திருவாலங்காடு—வடாரண்யம் இரத்தினசபை
திருக்குற்றாலம்—குற்றாலம் சித்திரசபை
மதுரை—ரஜதசபை (வெள்ளியம்பலம்)
திருநெல்வேலி—திருநெல்வேலி தாமிர சபை

### மூர்த்திகரமுள்ளத்தலங்கள் 14.

சுகமுனிவரால் அருளிச்செய்யப்பட்டது.

அண்ணாமலை விருத்தாசலமாரூ—ருங்காசி
பண்ணார்மதுரை சீகாளத்திசைலம்—பார்காஞ்சி
விண்ணோர்கோயிலாலங்காடு மருதூர்—விடுகும்பம்
நண்ணேகுடமூக்குசேதுர் கேதாரக்கணுஞ்சிவமே.

திருஅண்ணாமலை—காஞ்சி　　விருத்தாஜலம்—சிதம்பரம்
திருவாரூர்—திருவாலங்காடு　　காசி—திருவிடமருதூர்
மதுரை—கும்பகோணம்　　சீகாளத்தி—இராமீச்சுரம்
ஸ்ரீ சைலம்—கேதாரம்

## தக்ஷிண கைலாசம் 3.

முன்னர்வீழ்ந்திடு சிகரிகாளத்தியாயெழிவர்
பின்னர்வீழ்ந்தது திரிசிராமலையெனும்பிறங்கல்
அன்னதின்புறகனமந்தது கோணமாஅசலம்
இன்னமூன்றையுந் தக்ஷிணகயிலையென்றிசைப்பார்.

1. திருக்காளத்தி, 2. திருச்சிராப்பள்ளி, 3. திருகோணமலை

## மூவர் அவதார நக்ஷத்திரங்கள்.

ஆவணிமீ திருவாதிரை நக்ஷத்திரம்—திருஞானசம்பந்தர்
ஆவணிமீ உத்திர நக்ஷத்திரம்—சுந்தரமூர்த்திசுவாமிகள்
பங்குனிமீ ரோகணி நக்ஷத்திரம்—திருநாவுக்கரசுசுவாமிகள்

## சப்தஸ்தான க்ஷேத்திரங்கள் 7.

முத்திநெறிக்கேதுவாந் திருவையாறு மூவர்சேர்திருப்பழனந்
திருநெய்த்தானஞ்
சித்தியருள் திருச்சோற்றுத்துறையினொடு திருவேதிக்குடி
பான்றூழ்சேருமன்பர்
பத்தியொடுநிறை திருப்பூந்துருத்தியொடும் பாவுதிருக்கண்டியூ
ரிவைகளேழுஞ்
சத்தபுரியாமிதனைத்தொழுமெய்யன்பர் சாருப்பேறுவரென
மன்றங்கள்சாற்றும்.

1. திருவையாறு,
2. திருப்பழனம்,
3. திருச்சோற்றுத்துறை
4. திருவேதிக்குடி
5. திருக்கண்டியூர்
6. திருப்பூந்துருத்தி
7. திருநெய்த்தானம்.

## முருகக்கடவுளுக்கு முக்கியமான படை வீடுகள் 6

பன்னுதிருச்செயந்திபுரம் பரங்குன்றேர் பகர் திருவாவினன்குடி
பாருலகோர்போற்ற
மன்னுபழமுதிர்சோலையேரகம்பாமணங்கமழுங்குன்று
தோறாடலென்னத்
அன்னுதவமிவைபடைவீடாக மேவிச்சுரர்துயர்
தீர்த்தருளுமெங்கள் சுருதிநாதன்
பொன்னடித்தாமரைமலரைவழுத்து மன்பர்பூரணன்வாழ்
கயிலாயம்பொருந்திவாழ்வார்.

1. திருப்பரங்குன்றம்
2. திருச்செந்தூர்—திருச்சீரலைவாய்
3. திருவாவினன்குடி—பழனிமலை
4. திருவேரகம—சுவாமிமலை
5. குன்றுதோறாடல்—
6. பழமுதிர்சோலை—கள்ளழகர்கோவில்

## சுப்பிரமணியர் ஸ்தலங்கள் 20.

சோழநாட்டில் 2.

1. திருவேரகம்
2. எட்டுகுடி

ஈழநாட்டில் 1.

3. கதிர்காமம்

பாண்டியநாட்டில் 6.

4. திருச்சீரலைவாய்
5. திருவள்ளியூர்
6. திருவாவினன்குடி
7. பழனி
8. திருப்பரங்குன்றம்
9. சோலைமலை

மகதநாடு அல்லது நடுநாட்டில் 1.

14. மயிலம்

தொண்டைநாட்டில் 7

15. திருத்தணி
16. காட்டூர்
17. திருப்போரூர்
18. இளையனார் வேலூர்
19. செடியம்
20. ஆண்டார்குப்பம்

| கொங்குநாட்டில் 4. | குன்றுதோருடல். |
|---|---|
| 10. வெண்ணெய்மலை | திருப்பரங்குன்றம். |
| 11. சென்னிமலை | திருச்சீரலைவாய் |
| 12 சிவமலை | திருவாவினன்குடி |
| 13. மருதமலை | திருவேரகம். |

## சதாமூர்த்திகரமுள்ளத்தலங்களின் வரலாறு.

ஸ்ரீ ஸ்காந்தபுராணத்தின் ஆறுசமுகிதைகளில் சங்கர சமுகிதையின் சிவரகசிய காண்டத்தில் உபதேசகாண்டம் 61-வது அத்தியாயத்தில சூதமுனிவர்கூறும் சிவபூஜாமகிமையில்ஸ்ரீமகாதேவர் தேவர்களுக்கு திருவாய்மலர்ந்தருளிய ஷை 14-ஸ்தலங்களின்மகிமையை 32-வது சுலோகமுதல 36-வது சுலோகம் வரைக்கும் சொல்லப்பட்டிருப்பதில் சதா லிங்கத்தில் சாக்ஷாத் பரமசிவனும் பார்வதியோடுங்கூட எப்பொழுதும் திருவண்ணாமலை, விருத்தாச்சலம், திருவாரூர், காசி, மதுரை, காளத்தி, ஸ்ரீ சைலம், காஞ்சி, சிதம்பரம், திருவாலங்காடு, திருவிடைமருதூர், கும்பகோணம், இராமேச்சுரம், கேதாரம் இந்த பதினாலு ஸ்தலங்களில் எப்போதும் வசித்திருப்பாரென்றுபுராணங்களால் தெரியவருகிறது.

முற்றிற்று.

# கதிர்காமம் (கண்டி)



கதிர்காமத்துக்கு போகப்பட்டவர்கள் மதுரையிலிருந்து கொளம்புவரையில் ரெயில்சார்ஜ் ஸ்டீமர் சார்சு உள்பட 2-வது கிளாசுக்கு ரூபா 14-8-0-யும், 3-வது கிளாசுக்கு ரூபா 4-8-0-யும் கட்டி ரெயிலேறி வெற்றிலை மண்டபத்திலிறங்கி 2-வது கிளாஸ் டிக்கட்டுவாங்கினவர்கள் நபர் 1-க்கு 50-ரூபா ரொக்கத்திலாகிலும் நபர் ஜாமீனாகிலும் கொடுத்து டாக்டர் பரிசோதனையில்லாமல் உடனே கொளம்புக்கு போகலாம். 3-வது கிளாஸ் டிக்கட்டுவாங்குபவர்கள் வெற்றிலை மண்டபத்தில் 7 நாள் டாக்டர் பரிசோதனையிலிருந்து விட்டு கொளம்புக்கு போகலாம். ஷை 2-வது கிளாஸ் டிக்கட்டுவாங்குபவர்கள் போகப்பட்ட இடத்தில் டாக்டர் பரிசோதனை அவாளே செய்துக் கொள்ளுவார்கள். 2-வது கிளாஸ் டிக்கட்டுகாரர்கள் கட்டிய ரூபா 50-கொளம்பிலிறங்கிய உடன் வாப்சுபெற்றுக்கொள்ளுகிறார்கள். கொளம்பிலிருந்து ரெயிலேறி காலிவரையில் நபர் 1-க்கு ரெயில் சார்சு ரூபா 2 அவிடமிருந்து மாத்திரைவரையில ரெயில் சார்ஜ 0-10-0 மோட்டார் சார்ஜ நபர் 1-க்கு 1-ரூபா என்றும் அவிடமிருந்து தெசமாராவரையில் இரட்டை குதிரைவண்டியில் நபர் 1-க்கு ரூபா 8-ம் தெசமாராவிலிருந்து ஆரண்யமார்க்கமாய் 9-மயிலில் போனால் மாணிககங்கை ஓடுகிறது. அதின் அக்கரையில் கதிர்காம ஆலய மிருக்கிறது. சுவாமி உத்திரவாணதின்பேரில் கதிரேசன் மலைக்கு போகவேணும். அக்குன்றின்பேரில் நிறுத்தப்பட்டிருக்கும் வேலயுதத்திற்கு அபிஷேக முதலான திருக்கோடிவைத்து வணங்குகிறார்கள். மேற்படி கதிர்காமக் கோவிலில் 7-திரை போடப்பட்டிருக்கிறது போகப்பட்டவர்கள் 2-வது திரையில் நின்று குருக்களாகிய சிங்களவரைக் கொண்டு தேங்காய்ப்பழமுதலியநெய்வேத்தியம் செய்துக்கொள்ள வேண்டுமென்றும் சுவாமியை தரிசிக்கமுடியாதென்று மஹிமை ஐதிகம் ஏற்பட்டிருக்கிறதென்றும் ஷை இரண்டாவது திரையின் சமீபத்திலிருந்துகொண்டே மனோ தியானம் செய்துக்

கொள்ளவேண்டியதென்றும் கோவில் 5-அங்கணமுள்ளதென்றும், செம்பு, வெள்ளி, தங்கமுதலிய ஓடுகளால் மூடப்பட்டு அதின் பேரில் நாட்டு ஓடுகளால் மூடப்பட்டிருக்கிறது. ஷை கதிர்காமத்துக்குப் போகப்பட்டவர்கள் பிரதிவருஷம் ஆடிமீ போகலாம் ஷைமீ அமாவாசைமுதல் பருவம்வரையில் 15-நாள் உற்சவமும் 16-ம்நாள் தீர்த்தவாரியும் பிரதிதினம் யானையின்பேரில் ஓர் தங்கபெட்டகம்வைத்து 15-நாளும் உற்சவம் கொண்டாடுகிறார்கள் இந்த உற்சவத்திற்கு இரவு பகல் தீவட்டிக்கு பதிலாய் விபூதிமலையில் உற்பத்தியாகும் விபூதியை ஓர் அகண்டத்தில்வைத்து கற்பூரத்தை யேராளமாய் தீவட்டியாக உபயோகித்து வருகிறார்கள் ஷை கதிர்காமத்தில் 16-நாள் உற்சவகாலத்தில் அவிடம் போகப்பட்ட யாவற்றுஜனங்களுக்கும் யாழ்பாணம் சங்கு வேலி மார்க்கண்டேய பிள்ளையவர்களால் அமுதளித்துவருவதை சொல்லி முடியாது இவ்வித பெரும்தர்மத்தைநடத்திவரவேண்டியதற்காகவே ஷை கதிரேசன் சிருஷ்டித்திருப்பதாகவே ஏற்படுகிறது. தவிர ஷை யாருக்குள்ள 5-கப்பனிலொன்ற கதிரேசனென்ற விப் பெயரை வைத்து அதின் வருப்படிமுழுவதையும் அதற்கென்றே விட்டிருக்கிறார். 1817-௵த்தில் சேலநகர்வாசியாகிய ஷண்முக சுவாமியவர்கள் ஷை கதிர்காமத்துக்குப்போய் நேரில்பார்த்த சங்கதியை என் மூலமாய் வெளிக்குக்கொண்டுவந்திருக்கிறார் இவர் சொல்லிய சங்கதிபோலனேக பெரியோர்களாலும் இச்சங்கதி தெரியவந்திருக்கிறது நான் கண்டிவரையில் போனவன் சில அசந்தர்ப்பத்தால் கதிர்காமம்போகவில்லை ஷை உத்ஸவகாலத்தில் ஜன உபகார நிமித்தம் சில டாக்டர்களையும் போலீஸ் பந்தோபஸ்தும் செய்துகொடுத்திருப்பதாகவும் தெரியவருகிறது.

---

திருக்கோடிகா,

## திருநாவுக்கரசு நாயனார்.

நேரிசை வெண்பா.

நெற்றிமேற்கண்ணினானே நீறுமெய்பூசினானே
கற்றைப்புன் சடையினானே கடல்விடம்பருகினானே
செற்றவர்புரங்கண்மூன்றுஞ் செவ்வழல்செலுத்தினானே
குற்றமில்குணத்தினானே கோடிகாவுடையகோவே.

௨.

## திருநாவுக்கரசு நாயனார்.

### நினைந்த திருநேரிசை.

பொது.

முத்தினைமணியைப்பொன்னை முழுமுதற் பவளமேய்க்கும்
கொத்தினை வயிரமாலைக் கொழுந்தினை யமரர்சூடும்
வித்தினை வேதவேள்விக் கேள்வியை விளங்கநின்ற
அத்தனைநினைந்த நெஞ்சமழகிதா னினைந்தவாறே (1)
முன்பனை யுலகுக்கெல்லா மூர்த்தியை முனிகளேத்தும்
இன்பனை இலங்குசோதி இறைவனை யரிவையஞ்ச
வன்பனைதடக்கை வேள்விக் களிற்றினை யுரித்தவெங்கள்
அன்பனைநினைந்த நெஞ்சமழகிதானினைந்தவாறே. (2)
கரும்பினு மினியான்றன்னை காய்கதிர்ச்சோதியானை
இருங்கடலமுதம் தன்னை இறப்பொடு பிறப்பிலானை
பெரும்பொருட் கிளவியானை பெருந்தவ முனிவரேத்தும் (3)
அரும்பொனை நினைந்தநெஞ்ச மழகிதா நினைந்தவாறே.
செறுத்தனை யருத்திசெய்து செஞ்சரஞ்செலுத்தியூர்மேல்
கறுத்தனை கனகமேனிக் கடவுளைக்கருதும் வானோர்க்
கொருத்தனை யொருத்திபாகம் பொருத்தியுமருத்திதீரா
நிருத்தனை நினைந்தநெஞ்ச நேர்பட நினைந்தவாறே. (4)
கூற்றினை யுதைத்தபாதக் குழகனை மழலைவெள்ளே
தேற்றனை யுமையோரேத்த விருஞ்சடை கற்றைதன்மேல்
ஆற்றனையடியரேத்து மமுதனை யமுதையோக
நீற்றனை நினைந்தநெஞ்ச நேர்படநினைந்தவாறே. (5)
தொண்டனேன்பட்ட தென்னே தூயகாவிரியினன்னீர்
கொண்டிருக்கோதியாட்டி குங்குமக்குழம்புசாத்தி
யிண்டைகொண்டேற நோக்கி யீசனை யெம்பிரானைக்
கண்டனை கண்டிராதே காலத்தை கழித்தவாறே. (6)
பின்னிலேன் முன்னிலேநான் பிறப்பறுத்தருள் செய்வாயே
யென்னிலே நாயினேனுனிளங்கதிர்ப் பயலைத்திங்கள்
சின்னிலா வெறிக்குஞ் சென்னிச்சிவபுரத்தமரரேறே
நின்னலாற் களைகணுண்டே நீருசோகலத்தானே. (7)
சாம்பலைப்பூசி தரைபுரண்டு நின்றுழ்பாவி
யேம்பலிப்பார்கட் கிரண்டுகண்டா யிருங்கைகையென்னும்
காப்பலைக்கும்பனை தோழி கதிர்ப்பூண்வனமுலைமேல்
பாம்பலைக்குஞ்சடையா வெம்மையாளும் பசுபதியே. (8)

உ

# சிவமயம்.

# மாணிக்கவாசகசுவாமிகள்.

## திருச்சாழல்

திருச்சிற்றம்பலம்.

1 பூசுவதும்வெண்ணீறு பூண்பதுவும்பொங்கரவம்
பேசுவதும்திருவாயான்மறைபோலுங்காணேடீ
பூசுவதும்பேசுவதும்பூண்பதுவுங்கொண்டென்னை
யீசனவனெவ்வுயிர்க்குமியல்பானான்சாழலோ.

2 என்னப்பனெம்பிரானெல்லார்க்குந்தானீசன்
றுன்னம்பெய்கோவணமாக்கொள்ளுமதுவென்னேடீ
மன்னுகலைதுன்னுபொருண்மறைநான்கேவான்சரடாத்
தன்னையேகோவணமாச்சாத்தினன்காண்சாழலோ

3 கோயில்சுடுகாடுகொல்புலித்தோனல்லாடை
தாயுமிலிதந்தையிலிதான்றனியன்காணேடீ
தாயுமிலிதந்தையிலிதான்றனியனாயிடினுங்
காயிலுலகனைத்துங்கற்பொடிகாண்சாழலோ.

4 அயனையனங்கனை யந்தகனைச்சந்திரனை
வயனங்கண்மாயா வடுச்செய்தான்காணேடீ
நயனங்கண்மூன்றுடைய நாயகனேதண்டித்தாற்
சயமன்றோவானவர்க்குத் தார்குழலாய்சாழலோ.

5 தக்கனையுமெச்சனையுந் தலையறுத்துத்தேவர்கணந்
தொக்கனவந்தவர்தம்மைந் தொலைத்ததுதானென்னேடீ
தொக்கனவந்தவர்தம்மைத் தொலைத்தருளியருள்கொடுத்தங்
கெச்சனுக்குமிகைத்தலைமற் றருளினன்காண்சாழலோ.

6 அலரவனுமாலவனு மறியாமேயழலுருவாய்
நிலமுதற்கீழண்டமுற நின்றதுதானென்னேடீ
நிலமுதற்கீழண்டமுற நின்றிலனேலிருவருந்தஞ்
சலமுகத்தாலாங்காரந் தவிரார்காண்சாழலோ.

# அட்டவணை.

பக்கம்.

திருவாசகம். அச்சோப்பதிகம், திருச்சாழல்.

திருச்சிற்றம்பலம்.



ஸ்ரீ நடராஜர்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

---

தமிழ் வேதமாகிய

# திருவாசகம்

நூற் சிறப்பு.

நேரிசை வெண்பா.

---

திருச்சிற்றம்பலம்.

தொல்லை யிரும்பிறவிச் சூழுந் தளைநீக்கி
அல்லலறுத் தானந்த மாக்கியதே—எல்லை
மருவா நெறியளிக்கும் வாதவூ ரெங்கோன்
திருவாசக மென்னுந் தேன்.

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

# மாணிக்கவாசகசுவாமிகள்

# சரித்திரச் சுருக்கம்.



சைவசமயத்தைத் தமிழ்நாட்டில் நிலைநிறுத்திப் பெரும் புகழ் படைத்த சமயகுரவர் நால்வராவர். திருஞானசம்பந்த சுவாமிள் திருநாவுக்கரசு சுவாமிகள் சுந்திரமூர்த்தி சுவாமிகள் மூவரும் தாம் அருளிச்செய்த தேவாரத் திருமுறையால் தம் பெயர் விளக்கினர். மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகத் திருமுறையைத் திருவாய்மலர்ந்தருளினர். திருவாசகத்தின் பெருமை சிவப்பிரகாச சுவாமிகள் அருளிச்செய்த நால்வர் நான்மணிமாலையுள் முழக்கப்பட்டது. சின்னாள்முன் இருந்த தமிழறிஞர் ஒருவரும "மனங்கரைத்து மலங்கெடுக்கும் வாசகத்தின்மாண்டோர்கள், கனஞ்சடையென் றுருவேற்றிக் கண்மூடிக் கதறுவரோ" என்று அதனைப் புகழ்ந்தனர். மாணிக்கவாசக சுவாமிகள் பெருமையைப் பற்றியோ, விரித்துரைத்தல் முழுதும் அநாவசியகம். சைவனாவான் ஒவ்வொருவனுளத்தும் குடிகொண்டிருக்கும் அம்மூர்த்தி தம் அன்பின் பெருமையால மற்றை யடியார்களை யெல்லாம் கடந்துசென்று சிவனுக்குச் செல்வப்பிள்ளையானது மட்டுமேயன்றித் தமிழ் சைவர் மனத்தையுங்கவர்ந்தார். இலக்கணக்கொத்துடைய ஈசானன் தேசிகர், "மாணிக்கவாசகர் அறிவாற் சிவனே யென்பதும் திண்ணம்" என்றார். மஹா பக்தசிரோமணியாகிய முத்துத் தாண்டவர் "மாணிக்கவாசகர் பேரெனக்குத் தரவல்லாயோ அறியேன்" என்று பாடினார். சைவப் பெரியாருட் பட்டினத்தடிகள், "திருந்திய அன்பிற் பெருந்துறைப் பிள்ளை" என்று அவரை வாழ்த்தினர். சிவஸ்தலங்களிளெல்லாம் மார்கழி மாசத்து அவர் பொருட்டுத் திருவிழா நடத்தப்படுகின்றது.

இத்துணைப் பெருமைகொண்ட மாணிக்கவாசக சுவாமிகள் சரித்திரம் பெரியபுராணத்தில் காணப்பட வேண்டியதன்று. ஆயினும் நம்மால் இக்காலத்தறியலாகாத காரணத்தால் ஆண்டு அது விடப்பட்டது. மற்றுக் கடவுள் மாமுனிவர் என்பவர் செய்த திருவாதவூரடிகள் புராணம் என்னும் பிரபந்த மொன்றுண்டு. அது அவரைப்பற்றி மட்டுமே கூறுவது. திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணமும் பரஞ்சோதிமுனிவர் திருவிளையாடற் புராணமும் அடிகள் பிறந்தது முதல் மதுரையிடும் வரையுள்ள காலத்து நிகழ்ந்தவற்றையே விரிவாகக் கூறும். அவரது சரித்திரம் திருப்பெருந்துறைப் புராணத்தும் திருவுத்தரகோசமங்கைப் புராணத்தும் பிரஸ்தாபிக்கப்பட்டுமுளது. வடமொழியிலும் ஸ்ரீமணிவாக்ய சரித்திர மொன்றுளதாகத் தெரிகின்றது.

முன்னாளில் பூமியில் பௌத்தமதம் அதிகரித்ததனால் வேதாசார ஒழுக்கங்குன்ற அதை நிவிர்த்திக்கும்படி வந்து முறையிட்ட தேவர் வேண்டுகோட்கிரங்கிச் சிவபெருமான் திருநந்திதேவரை ஏவ அவர் மாணிக்கவாசகராய் வந்தவதரித்தனர் என்பது வடநூல் கூறுவது. திருநாவுக்கரசு சுவாமிகள் "குராமலரோ டராமதியஞ் சடைமேற் கொண்டார் குடமுழநந் தீசனை வாசகனுக் கொண்டார்" என்றருளிய தேவாரம் இக்கருத்தையே கொண்டதுபோலும்.

பாண்டிவள நாட்டிலே, வாயுபகவானால் பூசிக்கப்பெற்ற தன்மையால் ஸ்ரீ வாதபுர மெனப்பட்ட திவ்விய க்ஷேத்திரத்திலே, மானமங்கலத்தார் மரபிலே ஆமாத்தியர் குலம் விளங்க ஸ்ரீ சம்புபாதாசிருதரென்னும் பிராஹ்மணோத்தமருக்கும் அவர் பத்தினியார் சிவஞானவதியார்க்கும் புத்திரராக நம் மாணிக்கவாசகப்பெருமான் வந்துற்பவித்தனர். வாதவூரரென்பது இவர்க்குப் பிள்ளைத்திருநாமம். வைதிகச் சடங்குகளெல்லாம் கிரமப்படி நடத்தப்பெற்று, வித்தையை விசேஷ ஆசையோடு கற்கப் புகுந்த வாதவூரர் பதினாறாண்டு நிரம்பு முன்னமே வேதாகமஞானமும் சகல கலாஞானமும் ஒருங்கேயடைந்து விளங்கினார். இவரைக் குறித்துக் கேள்விப்பற்ற பாண்டிய ராஜனும் அழைப்பித்து இவரை

வரவழைத்து நோக்கிச் சந்தோஷித்தவனாய்ப் பலவகைப்பரிசுகள் அளித்து இவரைக் களிப்பித்துத் தம்பக்கலிலேயே இருத்தினான். இருவரும் அமைச்சர்க்கெல்லாம் முதலமைச்சரானார். ராஜகாரியங்களையெல்லாம் வெகுஜாக்கிரதையோடும் மனத்திற் சிறிதும் பற்றிலாது நாளுக்கு நாள் அரசனுக்குத் திருப்தி அதிகரிக்கும்படி நடத்திவந்தார். ஞானகுருவை அடையவேண்டுமென்று ஆசை யொன்றுமட்டும் அடிக்கடி அவர் மனத்தில் கிளைப்பதுண்டு. ஒருநாள், குதிரைப்பாகர் அரசனிடத்துக்குவந்து "குதிரைகளிற் பலவும் நோய்பிடித்துப் போயின" என்றும், "புதுப்பரிகள் கொள்ளுதலே நலம்" என்று எடுத்துக்கூறினர். அரசனும் வாதவூர் வள்ளலையழைத்துக் குதிரைகள் கொள்ளவேண்டியதைப்பற்றிக் கூற, அவர் பண்டாரத்தைத் திறந்து வேண்டிய அளவு பொன் வாரிக்கொண்டு குதிரைகள் வந்திறங்குங் கடற்றுறைக்குச் செல்ல ஆயத்தப்பட்டனர். மதுரைக் கோயிலுட்சென்று கடவுளை ஏத்தி நற்சகுனங் கண்டு வழிக்கொண்டவர் திருப்பெருந்துறை யடையுமெல்லையில் தம்மிடத்து அபூர்வ குணங்கள் வெளிப்படுதலைக் கண்டார். கண்ணீர் வாரலும் மெய்ம்மயிர் சிலிர்த்தலும் நாத்தழுதழுத்தலும் கைகள் தாமே குவிதலும் இசைச் சேர்ந்த மொழிகளை உருக்கமுண்டாதலும் இதுவரை பெற்றிறத்தலக்ஷும் தமக்கு நிகழக்காணுத அமைச்சர்பிரானுக்கு மனப்பற்று அறவே யொழிய, அவர் தம்முடன் வந்தவரை யழைத்து, "துறைகளிற் குதிரைகள் வந்திறங்க ஒருமாசம் செல்லும், நீங்கள் தாமதியாது ஊர் போய்ச் சேருங்கள், குதிரைகளை யாமே கொண்டு வருவோமென்று அரசனிடத்துரையுங்கள்" எனச் சொல்லிப் போகவிடுத்தனர். அவர்கள் போயபின் அவர் கோயிலுட்சென்று தம்மை யாட்கொள்வதற்கென மானுட வடிவங்கொண்டு குருந்த மரத்து நிழலில் தம் மாணாக்கரோடு வீற்றிருந்த பெரிய வாசானாகிய சிவபெருமானைக் கண்டார். பலவாறு பணிந்துநின்ற அதிதீவிர பக்குவராகிய வாதவூரரைக் கடவுள் தம் கடைக்கண்ணால் நோக்கி பரிந்து அவர்க்குத் தீக்ஷைகள் செய்து பஞ்சாக்ஷரத்தை யுபதேசித்தார். மலங் கலகலப்பெற்ற முனிவர் சிவாஞ்ஞைப்படி திருப்பாடல்கள் பாட ஆரம்பித்தனர். சென்னிப்பத்தும் அச்சோப்பதிகமும் அவர்

முதலிற் பாடியன. அப்புறம் பாடியது அதிசயப்பத்து. "மாணிக்கவாசக இங்கு நில்" என்று சொல்லிச் சிவன் தம் மாணாக்கரனைவரோடு மறைதலும், வாதவூரடிகள் அடைந்த துயர்க்களவில்லை தந்துருவை நினைந்து நினைந்து கண்ணீர் பெருகத் திருவாசக மோதத் தொடங்கினர். கோயிற்பத்து, புணர்ச்சிப்பத்து செத்திலாப்பத்து, பிரார்த்தனைப்பத்து, ஆசைப்பத்து, உயிருண்ணிப்பத்து, திருப்புலம்பல், வாழாப்பத்து, எண்ணப்பத்து, என்பன இவ்வமயத்து அவர் ஓதியன. பின் நகருட் புகுந்தவர் அங்குத் திகழ்வனவற்றைக்கண்டு திருவம்மானை, திருப்பொற்சுண்ணம், திருகோத்தும்பி, திருத்தெள்ளேணம், திருப்பூவல்லி, திருவுந்தியார், திருத்தோணோக்கம், திருவெம்பாவை, திருச்சதகம் என்பவற்றை யோதினர். இவற்றைக்கேட்ட தொண்டர் அதிசயித்து அவரைச் சூழ்ந்து போற்ற. குதிரை கொளற்காகக் கொண்டுவந்த பொன்னையெல்லாம் வாரி வாரிக் கொடுத்தார். இதனை யறிந்த அமைச்சர் அரசனிடத்துச் சென்றுரைப்ப அரசன் மனம் புழுங்கிச் சினமிக்கனாய் ஓர் ஓலையெழுதி விடுத்தான் அவ்வோலையை வாங்கிப் படித்து மன முளைந்த மாணிக்கவாசகர் சிவபெருமானை நினைந்து வருந்தினர். வருந்தித் திருப்பள்ளியெழுச்சி பாடி முடியுமுன், "நினக்குயாம் உண்டு அஞ்சேல்! பாண்டியனுக்குக் குதிரை வருமென்று எழுதி அனுப்பிவிடு" என்று ஆகாசவாணி கூறிற்று. அவரும் ஓலையெழுதி விடுத்து வாளாவிருந்தனர். சிவன் கனவினுஞ் சென்று உறுதியுரைத்தார். இவ்வுறுதியை யாதாரமாகக் கொண்டு மதுரை சென்ற அமைச்சர் தலைவர் தம்மோலை கண்டு கோவந்தணிந்த அரசனைக்கண்டு வரிசைகள் பெற்றார். அவர் குறித்த நாளில் பரிகள் வாராதிருக்கவே, அரசன் வாதவூரரை வருத்தித் திரவியங் கொள்ளுமாறு தண்டற்காரரை விடுத்தான். வருத்தம் பொறுக்கமாட்டாமற் புலம்பும் வாதவூரடிகட்காக இரங்கிச் சிவபெருமான் மிழலைநாட்டு நரிக்குடி யென்னுமூரில் நரிகளையெல்லாம் அழைத்து பரிகளாக்கித் தாமும் கணநாதருமாக அவைகளை நடத்தி மதுரை நோக்கி வந்தனர். குதிரைகள் வரவு

நன்கு நோக்காத சேவகர்சொல்லைக்கேட்டு, "மந்திரித்தலைவர் பொய்ம்மொழிந்தனர்; புளிமாறுகளைக் கடப்படுவனவற்றைப் பல காய் கொணர்ந்து அவர்முதுகிடைப் போக்குங்கள்," என்று ஆஞ்ஞாபித்த அரசன் ஆஞ்ஞையின்படி அடிபட விருக்கும்பொழுது அடிகள் அடைக்கலப்பத்து முதலான வாசகங்களோதினார் சிறைக்கூடத்து அருகாகச் சென்ற குயிலொன்றைக் கண்டவுடன் குயிற்பத்து மொழிந்தார், இது சொல்லி முற்று முன்னமே குதிரைகள் மதுரை வாயிலை யணுகின. அரசன் மகிழ்ந்து வாதவூரரை யுபசரித்தான். அரசனும் வாதவூரரும் குதிரை வரவு நோக்கினர். மதுரை வீதி வழிவந்த சொக்கர் அழகினைக் கண்டுத் தம் கற்பிழந்து புலம்பு மங்கையர் நிலையை நோக்கி மாணிக்கவாசகர் அன்னைப்பத்துச் சொல்லினர் அரசன் குதிரைகளை நோக்கி அளவற்ற ஆனந்தங்கொண்டான். பின் இராவுத்தர் அவற்றைக்கொண்டு பலவித விநோதங்கள் காட்ட மகிழ்ந்து குதிரைகளையெல்லாம் தன்னுரிமையாக்கி அவருக்குப் பரிசுகள் தந்து உபசாரத்தோடு போகவிடுத்தான். அன்றிரவே பரிகளெல்லாம் நரிகளாகி முன் லாயத்திலிருந்த குதிரைகளையும் துன்புறுத்திக்கொன்று ஊளையிட்டுக்கொண்டு விடியுமுன்னூரைவிட்டோடின. இதனைத் தன் மந்திரிசெய்த வஞ்சகமென்று கொண்ட அரசன் அடங்காசினத்தனாகி "வாதவூரரைச் சிறையறையில் வைத்துப் பொருளனைத்தும் பெறுக," எனத் தண்டக்காரரை ஏவினான் சிறையிற் றுன்பம் சகியாது அடிகள் திருவேசறவு பாடினார். சிவபிரான் கருணைகூர்ந்து வருணனை ஏவ, அத்தேவன் இராவிலேயே வையையைப் பெருகிவரச்செய்தான். வெள்ளத்தால் ஊர் அழியுமோவென அரசனும் ஊராரும் அஞ்சினர். "எவ்வபராதத்தினால் இது வந்ததோ," என மனங்கலங்கிய அரசன் "ஊர் முழுதும் உடன் நின்றுதவிபுரிந்து வெள்ளத்தைத் தடுக்க வேண்டுமென்று ஆஞ்ஞாபித்தான். "ஒவ்வொருவீட்டிலிருந்தும் ஒவ்வொரு ஆள் வந்து வேலைசெய்ய வேண்டும்" என்று கட்டளையிட்ட அரசன் சொல்லாற் கவலையுற்றவள் அப்பதி ஏழைக்குடி யொருத்தி பிட்டு வாணிச்சியே. அவள் சந்ததியற்றவள் அவள் தடுமாற்றத்தையறிந்த சொக்கர்

தாம் ஒரு கூலியாள் வேடம் பூண்டு அவள் முன் வந்தார். "நீ ஏன் பறந்து திரிகின்றனை? என்போல் உனக்குக் கொற்றாள் கிடையாது; வேண்டுமானால் சொல்லு; யாராலெல லாமோ அழைத்தனர்; போகாது உன்னை நாடிவந்தேன்," என்று சொல்லிய பெருமான் வார்த்தையைக்கேட்டு, "என் சொக்கரே இவ்வாறு வந்தார்," எனச் சொல்லி மகிழ்ந்து மண் சுமந்ததற்குக் கூலியாகப் "பிட்டுத்தந்தாற் போதுமோ," என்றனள். அவரும் சம்மதிக்க அவள் வேண்டியமட்டும் பிட் டுச் சுட்டுக்கொடுத்தனள். அவர் அவற்றைப்பெற்று நினைத்த போதெல்லாம் தின்றுகொண்டு வைகைக்கரையை யணுகினர். அங்குத்தாம் செய்யவேண்டிய வேலையைச் சரியாகச் செய்யா மல் உழத்துவதைக்கண்ட அரசனுட்கள் வந்து தண்டாதிகாரி யிடத்துச்சொல்ல அவன் அவர் திருமேனிப் பொலிவைக் கண்டு மன மயங்கினனுப்த் தண்டஞ்செய்யாது நின்றான். அவ் வமயத்து, பெருமான் வேலைக் குறையால் வையை பெருகியோ டிற்று. "அரசன ஏவலால்வந்த முறைசெய்வோர் கரையெங் கும் உயர்ந்திருக்க இத்தாழ்ந்த கோலமை எவரது?" என, அங்கு நின்றார் இது பிட்டுவாணிச்சி கோலமை? அவளா ளுப்பிய சிற்றாள் விளையாடித் திரிகின்றான். என்றுரைப்ப, அவர்கள் பெருமானை அழைத்து "நீ விரைவிலெழுந்து மண் சுமவா யாயின் அடிப்போம்," என, அவரும் பயந்தார்போலெழுந்து கூடையைத் தலைமேற்றாங்கி மெல்ல நடந்தார். அது பொறாத அதிகாரிகள் "இவன் பயன்படான்," என நடு முதுகிற் சிவக்கும்படி பலமாயடித்தனர். "என்னையேன் அடிக்கின் றீர்? என்று சொல்லிச்சொக்கர் மாயமாய் மறைந்தனர். அவ் வடியால் தேவர் மனிதர் விலங்கு முதலிய பல உயிர்களின் முது கிலும் புடைப்புக்காணப்பட்டது இதன் காரணமறியாது திகைத் து நின்ற அரசன் முதலிய யாவரும் கேட்க அப்பொழுது விசும் பில் ஒரு வாக்கெழுந்து, "வாதவூரன் நம் அருமைத்தொண்டன் அவன் முகத்தால் நமக்கு வேண்டியவர்களுக்கு உன் பொருளை யெல்லாம் செலவிட்டோம், வேண்டிய குதிரைகளை கொண்டு வந்தோம்; அவனை விடுவித்ததற்காக மண் சுமந்து அடியும் பிட்

டுழல்வோம்; இனி அவனை யதேச்சையாய்த் திரியும்படி விட்டுவிடல் நினைக்கின்றேன்," என்றது. அக்கணத்தே அரசன் மாணிக்கவாசகரை சிறைபகற்றி அவர் காலில்விழுந்து வணங்கினான். அவரும் அரசனை வாழ்த்தி, "நமச்சிவாயவாழ்க" என்றெடுத்துச் சிவபுராணந் தனையோதிச் சென்றனர். அரசன் சிறிதுதூரம் பின்சென்று மீண்டான். வாதவூரர் அன்புமிக்குச் சொக்கலிங்காலயஞ்சென்று தமக்காகச் சிவன் செய்த திருவிளையாடல்களை வியப்ப ஆகாசவாணி, "உத்தரகோச மங்கையிலும் கழுக்குன்றிலும் உறைந்தருளி கோவைபாடித் தில்லையம்பலத்துவா," என்றுரைத்தது. தம்பெருமான் கட்டளைப்படி அவர் அவ்விடங்கட்குச்சென்று புத்தரையும் வாதில் வென்று யாவரும் போற்றத்தக்க சாயுச்சிய பதவியையும் இறுதியிற்பெற்றார்.—இவ்வரலாறு திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணப்போக்கையொட்டி எழுதப்பட்டது. மண்சுமந்த திருவிளையாடற்குப்பிறகு வாதவூரர் சரித்திரம் புராணத்தில் மிகச்சுருக்கியிருத்தல் இயல்புதானே. இப்புராணம் பதின்மூன்றும் நூற்றாண்டின் தொடக்கத்தில் செய்யப்பட்ட பழைமையான நூலாதலாலும் திருவாதவூரர் புராணம் இதற்கு முந்தியதென்று சொல்லத்தக்க காரணம் புலப்படாமையாலும் இதுகூறும் வரலாறு முதலிற் கூறப்பட்டது. பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணத்துக்காணும் வேறுபாடுகள் கவனிக்கத்தக்கனவல்ல. மாணிக்கவாசகர் அரிமர்த்தன பாண்டியன்காலத்திருந்தனர் என்பதே அவர் புதுமையாகக்கூறியது.

திருவாதவூரர் புராணத்துட் சில மாறுபாடுகள் உண்டு. வாதவூரர் மந்திரியாய் ராஜகாரியம் நடத்திக்கொண்டு ஞானகுருவை நாடிக்கொண்டிருக்குஞ் சமயத்துத் தூதர் வந்து சோழநாட்டுக் கடற்றுறைகளில ஆரிய தேசத்தார் குதிரைகள் கொணர்ந்திறக்கியிருக்கின்றனர்," என்றரசனிடத்துக் கூறினர். சிவபெருமானிடத்து உபதேசம்பெற்ற பிறகு மாணிக்கவாசகர் தாங் குதிரைகொள்ளுதற்கெனக் கொண்டுவந்த பொருளனைத்தையும் தம் ஆசாரியர் பாதத்தில் வைத்து வணங்கினர்; அவர் தம் அடி-

யார்களுளொருவரை நோக்கி, "இப்பொருளையெல்லாம் சிவாலயத்திருப்பணிக்கும், தவஞ்செய்வோர்க்கும், வறியவர்க்குங்கொடும்," என்றருளிச்செய்தனர். அவரும் அவ்வாறே செய்தனர். பாண்டியன் பொருள் இவ்வாறுபோனதையும் மாணிக்கவாசகர் தவக்கோலம் பூண்டமையையும் கண்ட அரசனாட்கள் அரசனிடத்திற்போய்ச்சொல்ல, அவன்கோபித்து திருமுகமொன்றெழுதி அனுப்பினன். அதற்குத்தரமாக "ஆவணிமூலத்துக்குக்குதிரைகள்வரும்," என்று இவர் எழுதி அனுப்பினர். பிறகு மந்திரிக்கோலம்பூண்டு வாதவூரர் சிவன்கொடுத்த மாணிக்கத்தை கையுறையாகவைத்து அரசனைப்போய்க்கண்டு அவன் கோபத்தைமாற்றினர். வையை பெருகி வருதலைக்கண்டஞ்சி அரசன் மறுகிய காலத்து மந்திரிமார்வந்து, "திருவாதவூரரைக் கோட்டினிறுத்தி வருத்துவதை நீக்கி அவரை மனமகிழ்வித்தால் இப்பெருக்கு ஊரையடித்துக்கொண்டு போகாது," என்றாலோசனை கூறினார். அரசனும் வாதவூரரை யழைத்து வணங்கி வெள்ளத்தைத் தடுக்குமாறுவேண்டினன்; வாதவூரர் அணைசெய்தற்கு ஊரைக்கூவி முரசறைதல் முதலிய ஏற்பாடு செய்தனர். சொக்கர் அடிபட்டு மறைந்தவுடன் பாண்டியராஜன் திருவாதவூரடிகளை வணங்கித் தான் அதுவரைசெய்த பிழைகளையெடுத்துக்கூறிப் பொறுக்குமாறு வேண்டித் தான் பணிவிடைசெய்ய உலகை யாளுமாறு அவரைப் பிரார்த்தித்தான். "தன்னைத்திருப்பெருந்துறைக்குப் போக விடுப்பதே தனக்கு உலக ஆட்சியைக் கொடுத்ததாகும்" என அடிகள் கூற, அரசனும் மனமுவந்து "அங்ஙனமேயாகுக" என்றான். இவர் திருப்பெருந்துறைக்கு இப்பொழுது போகுமளவும், முன் இவரைக் குருவாய் ஆளவந்த மூர்த்தி தம் சிஷ்யவர்க்கங்களோடு அத்தலத்தை விட்டகலாதிருந்தார். வாதவூரடிகள் வந்து வணங்கியபின், சிவபெருமான் தாம் கைலாசத்திற்குப்போகவேண்டுமென்று சிஷ்யர்களிடத்துக்கூற, அவர்கள் மிகவருந்தினார்கள். "இக் குருந்தமர நிழலின்மேல தெய்வபீடமொன்று செய்து அதன்மேல் நம்முடைய திருவடிகளைச் செய்துவைத்து வணங்குங்கள்; சின்னாட் கழியுமுன் இப்பொய்கையில்

நெருப்புண்டாகும்; நீங்கள் எல்லீரும் அதனுள் விழுந்து கவ
லையை யொழியுங்கள்,'' என்று சொல்லித் தேற்றிய சிவன் வார்
த்தையைக் கேட்டுச் சிஷ்யர்கள் அடங்கியிருப்ப, அடிகள் சிவ
னைப் பின்தொடர்ந்து சென்றனர். சிவன் அவரைத் தனிவைத்து
''இவ்விடத்தில் அடியார்களோடு அளவளாவிச் சிலநாளிருந்து
இவர்களோடு பொய்கை நெருப்பில் விழாமல் உத்தரகோச மங்
கை முதலிய தலங்கட்குச் சென்று புத்தரை வாதில் வென்று
அப்புறம் சாயுஜ்ய மடைவாய்'' எனக்கூறி மறைந்தார். அதைக்
கண்டு மயங்கிய அடிகள் அடியார் கூட்டத்தை யடைந்து அவரும்
தாமுமாய்த் திருவடிகள் செய்து பீடத்து வைத்து வணங்கிவந்
தனர். அந்நாளிலே, ''நமச்சிவாய'' எனத் திருவாசகம் செப்
பத்தொடங்கி, அற்புதப்பத்து, அதிசயப்பத்து, குழைத்தபத்து
சென்னிப்பத்து, ஆசைப்பத்து, வாழாப்பத்து, அடைக்கலப்
பத்து, செத்திலாப்பத்து, புணர்ச்சிப்பத்து, அருட்பத்து என்ப
வைகளை அருளிச்செய்த பிறகு, திருவார்த்தை, எண்ணப்பதி
கம், திருப்பள்ளியெழுச்சி, திருவேசறவு, உயிருண்ணிப்பத்து,
பிரார்த்தனைப்பத்து, திருப்பாண்டிப் பதிகம். என்பவற்றையும்
அருளிச்செய்து அடியார்களோடு தங்கியிருந்தார். குறித்தநாள்
வருதலும் அடியார்கள் பொய்கைத்தீயில் விழுந்து கணநாதருரு
வம்பெற்று விண்ணேகினர். இப்பொழுது தனியே விடப்பட்டு
அளவிலாத் துன்பத்துளழுந்திய வாதவூரர் பூமியில் விழுந்தழுது
புலம்பித் தெளிந்து திருச்சதகம் சொல்லினர் பின் திருவுத்தர
கோசமங்கையிற்போய்க் குருவுருக் காணாராய் வருந்தி நீத்தல்
விண்ணப்பம் பாடித் தம் விருப்பம் நிறைவேறப் பெற்றனர். அப்
புறம் சடையன் கட்டளைப்படி திருவிடைமருதூரை வணங்கித் திரு
வாரூருக்குச் சென்று திருப்புலம்பல்பாடி, சீகாழியில் இறைவன்
திருவடியைப் பிடித்துக்கொண்டே பிடித்தபத்துப்பாடித் திரு
வண்ணாமலையில் குரு வடிவத்தைத் தரிசித்து, திருவாதிரை
நாளில் மகளிர் அந்நீராடச் செல்வதை நோக்கி அவர்கள் சொல்லிய
தாக திருவெம்பாவைபாடி, அம்மானைபாடும் மங்கையரைப்பார்த்
துத் திருவம்மானைபாடிக் கழுக்குன்றத்துச் சென்று திருக்கழு
குன்றப்பதிகம் பாடிப் பின் தில்லையையடைந்து சபாநாதர் திரு

வுருவைக்கண்டு ஆநந்தக் கண்ணீரொழுகக் கண்டபத்து அருளிச்செய்தனர். தில்லை மூவாயிரவர் வீதியில் போகும்போது குலாப்பத்து, கோயிற்றிருப்பதிகம் கோயின்மூத்த திருப்பதிகம் கீர்த்தித் திருவகவல், திருவண்டப்பகுதி, போற்றித் திருவகவல என்பவைகளைப்பாடி, சுண்ணமிடிக்கு மாதரைக்கண்டு திருப்பொற்சுண்ணம் பாடித் திருத்தெள்ளேணம் முதலியன்வைகளையும் பாடினர். பின் அந்நகர்ப் புறத்து ஒரு பன்னசாலையமைத்து அதில் தங்கியிருந்தனர்.

திருவாசகப் பதிகங்கள் பாடிய சந்தர்ப்பமுறைக்கும் விஷயத்தில், வேம்பத்தூரார் புராணத்திற்கும் திருவாதவூரர் புராணத்திற்குமுள்ள மாறுபாடுகள் உற்று நோக்கின் நன்கு புலப்படும். அவை மேலே குறிக்கப்பட்டன. உதாரணமாக: வேம்பத்தூரார் புராணத்துக் கோயிற்பத்தும் திருப்புலம்பலும் திருப்பெருந்துறையில் அருளிச்செய்தனவாகக் கூறப்பட்டன. திருவாசகப் பதிப்புகளுள் திருவாதவூரர் புராணத்து வகுத்த முறைப்பற்றிப்போலும் அவை தில்லையிலும் திருவாரூரிலும் அருளிச்செய்தனவாகக் காணப்படுகின்றன. கோயிற்பத்து விஷயம் சந்தேகத்திற் கிடனில்லை. பாட்டுத்தோறும் திருப்பெருந்துறைப் பிரஸ்தாபமுள்ளது, தில்லைப் பிரஸ்தாபம் யாண்டுமில்லை திருப்புலம்பல் மூன்று பாடல்களும் முதற்பாட்டுத் திருவாரூரையும், இரண்டாவது திருப்பெருந்துறையையும், மூன்றாவது திருக்குற்றாலத்தையுங் குறிக்கும். பாடல்களுக்குச் சந்தர்ப்பங் கூறும் விஷயம் அவ்வளவு முக்கியமென்றெண்ணப்படாது. அநேகமாய் உத்தேசந்தான்.

இனி, வாதவூரடிகள் சிதம்பரத்து வசிக்கு நாளிலே, ஒரு பக்தர் ஸ்தலயாத்திரை செய்பவர் ஈழதேசத்துச்சென்று அத்தேசத்தரசன் வாழுமூரிற் றங்கியகாலத்துச் சிதம்பர மான்மியத்தைப் பலவாறாகச் சொல்லிக்கொண்டிருந்தனர். இதனைப் பொறாத புத்தர்கள் சொல்லக்கேட்ட அரசன் அவரைத் தன் சபைக்கு வரவழைத்தான். அங்குச்சென்ற அவர் "திருவம்பலம்" என்று சொல்லி இருக்க, அரசன் காரணங்கேட்டான். அப்

பொழுது அவர் தில்லையைப் பற்றிப் பிரசங்கித்தார். அரசனுட னிருந்த புத்தகுரு வெகு கோபங்கொண்டு அரசனோடும் பரிவாரங்களோடும் உடனே புறப்பட்டுத் தில்லைக்கு வந்து ஆலயத்தை யெய்திப் புத்தசமயத்தி னுயர்வைப் பிரசங்கித்தற்குச் சித்தப்பட்டிருந்தான். இவ்விஷயத்தை யறிந்த தில்லைமூவாயிரவர் மனங்கலங்கிப் பின்னர் "மாணிக்கவாசகர் புத்தனை வாதில்வெல் லுவர்," என்று சிவன் கனவில் வந்து தோற்றத் தெரிய பொழுது புலர்ந்ததும் சிவிகையோடு அடிகளிருக்கும் இடஞ்சென்று அவரை அழைக்க, அவரும் சிவபெருமான் குறிப்புணர்ந்து புறப்பட்டு வந்தார்.

புத்தகுரு பிரசங்கத்தைச் சாஸ்திர பூர்வமாய்க் கண்டித்துத் தஞ்சமயமாகிய சைவசமயத்தின் பெருமையை நன்கெடுத்துக் கூறினர். புத்தர் கொடுஞ் சொற்களைக் கேட்ட அடிகள் நாமகளைச் சினந்து அவர்கள் நாவைவிட்டகலுமாறு ஆஞ்ஞாபித்தனர். பின் அரசன் வேண்டுகோட்கிணங்கி அவன் ஊமைப்பெண்ணைப் பேசவைத்து அவளைக்கொண்டே புத்தர் கேட்ட அக்கிரமவினாக்கட்கு விடையளித்து அரசனைச் சந்தோஷிப்பித்தனர் வணங்கின புத்தர்களையும் சைவராக்கி யாட்கொண்டார். வினாக்களையும் ஊமைப்பெண் கூறிய விடைகளையும் திருச்சாழலாகச் செய்தனர். பின் சபாநாதரை வணங்கி எல்லாரும் அவரவரிடஞ் சேர்ந்து சுகமாக வாழ்ந்திருந்தனர்.

மாணிக்கவாசகர் இதன்பின் திருப்படையாட்சி, திருப்படையெழுச்சி, அச்சோப்பத்து, யாத்திரைப்பத்து என்பவைகளைப் பாடிச் சிவானந்தப்பெருவாழ்வி லமர்ந்திருந்தனர். அந்நாளிலே ஒருநாள் சபாநாயகர் வேதியருருக்கொண்டு இவர்முன் வந்து நின்றனர். இவரும் அவரை இருக்கச்சொல்லி யுபசரித்து, அவரிருக்குமிடமெது, வந்தகாரணமென்னையென்று விசாரித்தபொழுது, அவர், "யான் பாண்டிநாட்டிலுள்ளவன்; தம்மைச் சிவன் ஆண்டுகொண்டவண்ணமும் பின் தமக்காகத் திருவிளையாடல்கள் செய்ததிறமும், தாம் ஸ்தலயாத்திரைசெய்து இத்தில்லைக்கு வந்து புத்தரை வாதில்வென்ற வரலாறும் அறிந்து

மகிழ்ந்தவன்; தாம் பாடிய பாடல்களனைத்தையுமோத விருப்பமுடையவனுகி யிங்கு வந்தேன்," என்று விடைபகர, மாணிக்கவாசகர் மகிழ்ந்து தாம் பாடிய பாடலனைத்துந் தெளிவாகச்சொல்லிவந்தார். வேதியரும் கையில் ஏடு பிடித்து ஒன்றும் விடாது எழுதித் தீர்ந்தவுடன் சபாநாயகனைப் பாட்டுடைத்தலைவனுக வைத்து ஒரு கோவை பாடவேண்டும். என்றிரந்தனர். கோவை முடிந்ததும் ஐயர் ஏட்டைச் சுருட்டிக்கொண்டு மின்னெனமறைந்தார். மாணிக்கவாசகர் அவரைக் காணுராய் வருந்தி, " இது சஞ்சிவனே" என மனந்தேறியிருந்தனர். புத்தகங்கொண்டு சென்ற கடவுள் கோயிலகம் புக்கு அங்கு வந்திருந்த தேவர்கட்கு தன்பெருமையை எடுத்துரைத்து, "திருவாதவூரர் சொல்ல அழகிய திருச்சிற்றம்பலமுடையார் கையெழுத்து" என்று திருக்கோவையர் முடிந்த இடத்தில் எழுதி, மைக்காப்புஞ்செய்து, உலகமு மறியட்டுமென்னும் கருணையால் வாசற்படியில் அதனை வைத்துத் தம் உருக்கரந்தனர். காலையில் பூசைசெய்யச் சென்ற பிராமணன் அதனை நோக்கித் தில்லைமாநகருள்ளார்க்குச் சொல்ல, அவர்கள் இவ்வதிசயத்தைக் காணவந்து; ஏட்டை எடுத்துப்பார்த்து உண்மையை யறிந்து, அதன்பொருளுணருமாறு எல்லாருங்கூடி வாதவூரரிடத்துச் சென்று வடுகண்டவிதஞ் சொல்லினர் வாதவூரர் முன்னுள் நடந்த செய்தியைச்சொல்லி மனமகிழ்ந்து "கனகசபைக் கெதிரே நின்று பொருள் சொல்லுகிறேன்," என்று முன்னேபோய், "இத்திருக்கோவையாருக்குப் பொருள் இவர்தாம்," என்று சபாநாதனைச் சுட்டிக் காட்டிச் சபையில் எல்லாருங்காண மறைந்தனர்.

## மாணிக்கவாசகசுவாமிகள் காலம்.

சைவசமய குரவராகிய மாணிக்கவாசக சுவாமிகள் காலம் வரையறுக்கப்பட்டதாயில்லை. கடைச்சங்க காலத்திருந்தனரென்றும், தேவார முடையார் மூவர்க்குப் பின்னிருந்தனரென்றும், பதினொன்றும் நூற்றுண்டி லிருந்தனரென்றும், பலவித அபிப்பிராயங்கள் வெளிவந்திருக்கின்றன. திருத்தொண்டத் தொகை செய்த சுந்தரமூர்த்திசுவாமிகள் இவரது பெயரைக்

குறியாது விட்டமையால் ஒன்பதாம் நூற்றாண்டிக்குப் பின் அடிகள் வாழ்ந்தனரென்றுரைத்தலே நியாயமென்பாரொருவர். அம்மட்டோ? "வரகுணபாண்டியனொருவனைத் திருக்கோவையாரிற் குறித்தலால், அவர் அவன் காலமாகிய ஒன்பதாம் நூற்றாண்டிற்குப் பின் இருந்தார் என்றலே சால்புடைத்து. அன்றியும், திருவம்பலத்துக்குப் பொன்னோடு வேய்ந்த பராந்தகச்சோழனுக்கு முன் பொன்னம்பலமென்னும் வழக்காறில்லை? ஆதலால், அவர் அவன் காலமாகிய பத்தாம் நூற்றாண்டிலிருந்து வருமாவர் மேலும் பதினொன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்து அரசு செலுத்திய ராஜராஜசோழன் காலத்து நாகபட்டினத்து ஒரு பிரசித்த பௌத்தாலயமிருந்ததாகத் தெரிகின்றது வாதவூரர் அவ்வூர்ப் புத்தர்களோடுதான் வாது செய்திருக்கவேண்டும். அக்காலத்துக்குப்பின் இருந்தவருமாவர் 'கழுமலமதனிற் காட்சி கொடுத்தும்' என்றும் 'தேனமர் சோலைத் திருவாரூரின் ஞானந்தன்னை நல்கிய' என்றும், ஞானசம்பந்தரையும் சுந்தரமூர்த்தியையும் முறையே திருவாசகத்துக் குறித்தமையால், அவ்விருவர்க்கும் பின்தான் அடிகள் இருந்தனரென்பதில் ஐயமில்லை. இவர் பாடிய திருப்பெருந்துறையும் திருவுத்தரகோசமங்கையும் தேவாரம்பெற்ற ஸ்தலங்களாயிராததன்மையும் இவர் பிற்காலத்தவரெனக் காட்டும்" என்று கூறி முடித்தனர் மற்றொருவர். மஹாமஹோபாத்தியாயர் சுவாமிநாத ஐயரவர்கள், "நரியைக்குதிரை செய்வானும்" எனவும், "குடமுழ நந்தீசனை வாசகனாக் கொண்டார்" எனவும், திருநாவுக்கரசு சுவாமிகள் ஓதினமையின் மாணிக்கவாசகர் அவருக்குக் காலத்தால் முற்பட்டவர் என்று கூறினர். "வைகைத் திருக் கொட்டி நின்றதோர் திறமுந் தோன்றும்," என்று அத்தேவாரமுடையாரே குறித்ததும், சொக்கநாதர் மண்சுமந்த திருவிளையாடலையே என்று பகர்வாருமுளர். அதுவெல்லாஞ் சரியாயின் மாணிக்கவாசகர் கி பி ஆறாம் நூற்றாண்டிலாயினும் அதற்கு முன்னாயினும் இருந்தவராகல்வேண்டும். பட்டினத்துப்பிள்ளையாராற் றுதிக்கப்பட்ட அடிகள் பத்தாம் நூற்றாண்டிறுதியிலிருந்த அவருக்கு முற்பட்டவரென்பது நிச்சயம். திருத்

தொண்டத்தொகை விஷயம் நன்கு ஆராயத்தக்கது. திருமுறை வகுப்பில் தேவாரங்கட்குப்பின் திருவாசகம் வைக்கப்பெற்றதும் கவனிக்கத்தக்கது. நரியைக் குதிரைசெய்த திருவிளையாடல் முதலியன தொன்று தொட்டு வழங்கிவந்த கதைகள்; அவை மாணிக்கவாசகரோடு பொருத்தி யிசைக்கப்பட்டன என்று சொல்லத்துணிவாருமுளர். மாணிக்கவாசகர்க்காக நிகழ்ந்த அற்புதங்கள் தேவார முடையார்க்காக நிகழ்ந்த அற்புதங்களை விட உயரலாக ரஹஸ்யங்கள் மிகக் கலந்துள்ளனவாகலால். ஒன்று மாணிக்கவாசகர் பிற்காலத்தவராயின் இவ்வற்புதங்கள் அவர்க்காக நிகழ்ந்தனவல்ல எனல்வேண்டும்? அல்லது மாணிக்கவாசகர் தேவார முடையார் காலத்துக்கு வெகுகாலமுன் இருந்தவர் எனல் வேண்டும். பரஞ்சோதிமுநிவர் திருவிளையாடல் தான் காலக்கிரமத்தை அநுஸரித்தெழுதியதுபோற் காணப்படுவது. வரகுணபாண்டியன் காலத்துப்பாணபத்திரன் சொக்கர் திருமுகங்கொண்டு சேரமானிடத்துச் சென்றானென்றும். அப்பாண்டியனுக்குப் பின் 41-பாண்டியர்கள் அரசாண்டபின் வந்த அரிமர்த்தனபாண்டியன் காலத்து மாணிக்கவாசகரிருந்தனரென்றும், அவனுக்குப்பின் பத்துப்பாண்டியர் ஆண்டபின் வந்த கூன்பாண்டியன் காலத்து ஞானசம்பந்தர் இருந்தனரென்றும் அப்புராணங் கூறுமாயின் சுந்தரமூர்த்தி சுவாமிகளோடிருந்த, சேரமான ஒன்பதாம நூற்றாண்டினனென்றும் ஞானசம்பந்தர் ஏழாம் நூற்றாண்டின ரென்றும் தெரிந்துவைத்த உண்மைகளோ டெங்கே பொருந்திவிடுவது? மற்று, மாணிக்கவாசகர் பாஷை நடையைவைத்து அவர் தேவார காலத்துக்கு முற்பட்டவரென்று சொல்லவியலாது. "குடமுழ நந்தீசனை வாசகனாக்கொண்டார்" என்பது மாணிக்கவாசகரையேகுறித்ததாயின், தமிழ்ப்புராண முடையாரெல்லாம் அதனை யறியா திருந்ததென்னை? "வாகனமா" எனப் பாடமேதும் உண்டென்றும் தெரிகிறது. பன்னிரு திருமுறைப்பதிப்பில் திருவாசகத்திற்குத் திரிசொற்பொருள் விளக்கமெழுதியவர் (உயிருண்ணிப்பத்து) "செங்காவலர் பரசும் புகழ்" என்ற விடத்துச் செங்காவலர் திருநெறித்தேவார மருளிச்செய்தவர் என்றெழுதி வைத்தது எவ்வாதாரத்தைக்

கொண்டோ தெரியவில்லை. இதுகாறுங் கூறியவற்றைத் திரட்டி நோக்கின், மாணிக்கவாசகர் சுந்தரர்க்குப் பின்னும் பட்டினத் தடிகட்கு முன்னும் ஒன்பதாம் நூற்றாண்டிறுதியிலேனும் பத்தாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேனும் இருந்தாரென்றலில் பாதக மில்லையென்று சொல்லலாமேயன்றி, அவர் இன்ன காலத்துத் தான் இருந்தனரென்று துணிந்துரைக்க வியலாமை நன்கு விளங்கும்.

**மாணிக்கவாசகசுவாமிகள் சரித்திரம் முற்றிற்று.**

# திருத்தோணோக்கம்.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது,
நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

பூத்தாரும்பொய்கைப்புனலிதுவேயெனக்கருதிப்
பேய்த்தேர்முகக்குறும்பேதைகுணமாகாமே
தீர்த்தாய்திகழ்தில்லையம்பலத்தேதிருநடஞ்செய்
கூத்தாவுன்சேவடிகூடும்வண்ணந்தோணோக்கம். (1)

என்றும்பிறந்திறந்தாழாமேயாண்டுகொண்டான்
கன்றால்விளவெறிந்தான்பிரமன்காண்பரிய
குன்றாதசீர்த்தில்லையம்பலவன்குணம்பரவித்
துன்றார்குழலினீர்தோணோக்கமாடாமோ (2)

பொருட்பற்றிச்செய்கின்றபூசனைகள்போல்விளங்கச்
செருப்புற்றசீரடிவாய்க்கலசமூனமுதம்
விருப்புற்றுவேடனார்சேடெறியமெய்குளிர்ந்தங்
கருட்பெற்றுநின்றவாதோணோக்கமாடாமோ. (3)

கற்போலுநெஞ்சங்கசிந்துருகக்கருணையினால்
நிற்பானைப்போலவென்னெஞ்சினுள்ளேபுகுந்தருளி
நற்பாற்படுத்தென்னைநாடறியத்தானிங்ஙன்
சொற்பாலதானவாதோணோக்கமாடாமோ. (4)

நிலநீர்நெருப்புயிர்நீள்விசும்புநிலாப்பகலோன்
புலனாயமைந்தனோடெண்வகையாய்ப்புணர்ந்துநின்றா
னுலகேழெனத்திசைபத்தெனத்தானொருவனுமே
பலவாகிநின்றவாதோணோக்கமாடாமோ. (5)

புத்தன்முதலாயபுல்லறிவிற்பல்சமயந்
தத்தமதங்களிற்றட்டுளுப்புப்பட்டுநிற்கச்
சித்தஞ்சிவமாக்கிச்செய்தனவேதவமாக்கு
மத்தன்கருணையினாற்றோணோக்கமாடாமோ. (6)

தீதில்லைமாணிசிவகருமஞ் சிதைத்தானைச்
சாதியுமவேதியன்றாதைதனைத் தாளிரண்டுஞ்
சேதிப்பவீசன்றிருவருளாற்றேவர்தொழப்
பாதகமேசோறுபற்றினவா தோணோக்கம் (7)

மானமழிந்தே மதிமறந்தே மங்கைநல்லீர்
வானந்தொழுந்தென்னன்வார்கழலேநினைந்தடியோ
மானந்தக்கூத்தனருள்பெறினாமவ்வணமே
யானந்தமாகிநின்றாடாமோதோணோக்கம். (8)

என்னுடைய மூவரிராக்கதர்களெரிபிழைத்துக்
கண்ணுதலெந்தைகடைத்தலைமுன்னின்றதற்பி
னெண்ணிலியிந்திரரெத்தனையோபிரமர்களு
மண்மிசைமால்பலர்மாண்டனர்காண்டோணோக்கம். (9)

பங்கயமாயிரம்பூவினிலோர்பூக்குறையத்
தங்கணிடந்தரன்சேவடிமேற்சாத்தலுமே
சங்கரனெம்பிரான்சக்கரமாற்கருளியவா
றெங்கும்பரவிநாந்தோணோக்கமாடாமோ. (10)

காமனுடலுயிர்காலன்பற்காய்கதிரோ
னாமகணாசிசிரம்பிரமன்காமெரியைச்
சோமன்கலைதலைதக்கனையுமெச்சனையுந்
தூய்மைகள்செய்தவா தோணோக்கமாடாமோ. (11)

உ

சிவமயம்.

# திருவாசகம்.

## சிவபுராணம்.

---

திருப்பெருந்துறையில்
அருளிச்செய்யப்பட்டது.

---

பஃறொடை வெண்பா.

---

திருச்சிற்றம்பலம்.

நமச்சிவாய வாழ்க நாதன்றாள் வாழ்க
விமைப்பொழுது மென்னெஞ்சி னீங்காதான் றாள்வாழ்க
கோகழியாண்ட குருமணிதன் றாள்வாழ்க
வாகம மாகிநின் றண்ணிப்பான் றாள்வாழ்க
வேக னநேகனிறைவ னடிவாழ்க
வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க
பிறப்பறுக்கும் பிஞ்ஞகன்றன் பெய்கழல்கள் வெல்க
புறத்தார்க்குச் சேயோன்றன் பூங்கழல்கள் வெல்க
கரங்குவிவா ருண்மகிழுங் கோன்கழல்கள் வெல்க
சிரங்குவிவா ரோங்குவிக்குஞ் சீரோன்கழல் வெல்க
யீச னடிபோற்றி யெந்தை யடிபோற்றி
தேச னடிபோற்றி சிவன்சே வடிபோற்றி
நேயத்தே நின்ற நிமல னடிபோற்றி
மாயப் பிறப்பறுக்கு மன்ன னடிபோற்றி
சீரார் பெருந்துறைநந் தேவ னடிபோற்றி
யாராத வின்ப மருளுமலை போற்றி
சிவனவனென் சிந்தையு ணின்ற வதனா
லவனரு ளாலே யவன்றாள் வணங்கிச்
சிந்தை மகிழச் சிவபுராணந் தன்னை

மூத்த வினைமுழுது மோய வுரைப்பனியான்
கண்ணுதலான் றன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
யெண்ணுதற் கெட்டா வெழிலார் கழலிறைஞ்சி
விண்ணிறைந்து மண்ணிறைந்து மிக்காய் விளங்கொளியா
யெண்ணிறந் தெல்லை யிலாதானே நின்பெருஞ்சீர்
பொல்லா வினையேன் புகழுமா றொன்றறியேன்
புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லா நின்றவித் தாவர சங்கமத்து
ளெல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றே
னுய்யவென் னுள்ளத்து ளோங்கார மாய்நின்ற
மெய்யா விமலா விடைப்பாகா வேதங்க
ளையா வெனவோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே
வெய்யாய் தணியா யியமான னாம்விமலா
பொய்யா யினவெல்லாம் போயகல வந்தருளி
மெய்ஞ்ஞான மாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரே
யெஞ்ஞான மில்லாதே னின்பப் பெருமானே
யஞ்ஞானந் தன்னை யகல்விக்கு நல்லறிவே
யாக்க மளவிறுதி யில்லா யனைத்துலகு
மாக்குவாய் காப்பா யழிப்பா யருடருவாய்
போக்குவா யென்னைப் புகுவிப்பாய் நின்றொழும்பி
னாற்றத்தி னேரியாய் சேயாய் நணியானே
மாற்ற மனங்கழிய நின்ற மறையோனே
கறந்தபால் கன்னலொடு நெய்கலந்தாற் போலச்
சிறந்தடியார் சிந்தனையுட் டேனூறி நின்று
பிறந்த பிறப்பறுக்கு மெங்கள் பெருமா
னிறங்களோ ரைந்துடையாய் விண்ணோர்க ளேத்த
மறைந்திருந்தா யெம்பெருமான் வல்வினையேன் றன்னை
மறைந்திட மூடிய மாய விருளை

அறம்பாவ மென்னு மருங்கயிற்றாற் கட்டிப்
புறந்தோல்போர்த் தெங்கும் புழுவழுக்கு மூடி
மலஞ்சோரு மொன்பது வாயிற்குடிலை
மலங்கப் புலனைந்தும் வஞ்சனையைச் செய்ய
விலங்கு மனத்தால் விமலா வுனக்குக்
கலந்தவன் பாகிக் கசிந்துள் ளுருகு
நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி
நிலந்தன்மேல் வந்தருளி நீள்கழல்கள் காட்டி
நாயிற் கடையாய்க் கிடந்த வடியேற்குத்
தாயிற் சிறந்த தயாவான தத்துவனே
மாசற்ற சோதி மலர்ந்த மலர்ச்சுடரே
தேசனே தேனா ரமுதே சிவபுரனே
பாசமாம் பற்றறுத்துப் பாரிக்கு மாரியனே
நேச வருள்புரிந்து நெஞ்சில்வஞ் சங்கெடப்
பேராது நின்ற பெருங்கருணைப் பேராறே
ஆரா வமுதே யளவிலாப் பெம்மானே
ஓராதா ருள்ளத் தொளிக்கு மொளியானே
நீரா யுருக்கியென் னாருயிராய் நின்றானே
இன்பமுந் துன்பமு மில்லானே யுள்ளானே
அன்பருக் கன்பனே யாவையுமா யல்லையுமாஞ்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே யந்த நடுவாகி யல்லானே
ஈர்த்தென்னை யாட்கொண்ட வெந்தைபெருமானே
கூர்த்தமெய்ஞ்ஞானத்தாற் கொண்டுணர்வார் தங்கருத்தி
னோக்கரிய நோக்கே நுணுக்கரிய நுண்ணுணர்வே
போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே
காக்குமென் காவலனே காண்பரிய பேரொளியே
ஆற்றின்ப வெள்ளமே யத்தாமிக் காய்நின்ற
தோற்றச்சுடரொளியாய்ச் சொல்லாத நுண்ணுணர்வாய்
மாற்றமாம் வையகத்தின் வெவ்வேறே வந்தறிவாந்
தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையு
ளூற்றான வுண்ணா ரமுதே யுடையானே

வேற்று விகார விடக்குடம்பி னுட்கிடப்ப
வாற்றேனெம் மையா வரனேயோ வென்றென்று
போற்றிப்புகழ்ந்திருந்து பொய்கெட்டு மெய்யானார்
மீட்டிங்கு வந்து வினைப்பிறவி சாராமே
கள்ளப் புலக்குரம்பை கட்டழிக்க வல்லானே
நள்ளிருளி னட்டம் பயின்றாடு நாதனே
தில்லையுட் கூத்தனே தென்பாண்டி நாட்டானே
யல்லற்பிறவி யறுப்பானே யோவென்று
சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்ச்
சொல்லியபாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்
செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்
பல்லோரு மேத்தப் பணிந்து.

## திருச்சதகம்.



திருப்பெருந்துறையிலருளிச்செய்யப்பட்டது.

கட்டளைக்கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

மெய்தா னரும்பி விதிர்விதிர்த் துன்விரை யார்கழற்கென்,
கைதான் றலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பியுள்ளம்,
பொய்தான் றவிர்ந்துன்னைப் போற்றி சயசய போற்றியென்னுங்,
கைதா னெகிழவிடே னுடையாயென்னைக் கண்டுகொள்ளே.

### அறிவுறுத்தல்.

தரவுகொச்சகக்கலிப்பா.

நாடகத்தா லுன்னடியார் போனடித்து நானடுவே
வீடகத்தே புகுந்திடுவான் மிகப்பெரிதும் விரைகின்றேன்
ஆடகச்சீர் மணிக்குன்றே யிடையறா வன்புனக்கென்
னூடகத்தே நின்றுருகத் தந்தருளெம் முடையானே.

## ஆன்மசுத்தி.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்,

ஆடுகின்றிலை கூத்துடையான் கழற் கன்பிலையென்புருகிப்
பாடுகின்றிலை பதைப்பதுஞ்செய்கிலை பணிகிலை பாதமலர்
சூடுகின்றிலை சூட்டுகின்றதுமிலை துணையிலி பிணநெஞ்சே
தேடுகின்றிலை தெருவுதோறலறிலை செய்வதொன்றறியேனே.

## அநுபோகசுத்தி

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

ஈசனேயெம்மானேயெந்தை பெருமானென்பிறவி
நாசனேநான்யாதுமொன்றல்லாப் பொல்லா நாயான
நீசனேனையாண்டாய்க்கு நினைக்கமாட்டேன் கண்டாயே
தேசனேயம்பலவனே செய்வதொன்றுமறியேனே.

செய்வதறியாச்சிறுநாயேன் செம்பொற்பாத மலர்காணாப்
பொய்யர்பெறும்பேறத்தனையும் பெறுதற்குரியேன் பொய்யிலா
மெய்யர்வெறியார்மலர்ப்பாத மேவக்கண்டுங் கேட்டிருந்தும்
பொய்யனேனானுண்டுடுத்திங் கிருப்பதானேன் போரேறே.

## காருணியத்திரங்கல்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

தரிக்கிலேன் காயவாழ்க்கை சங்கராபோற்றிவான
விருத்தனேபோற்றி யெங்கள் விடலையேபோற்றி யொப்பி
லொருத்தனேபோற்றியும்பர் தம்பிரான்போற்றி தில்லை
நிருத்தனேபோற்றி யெங்க ணின்மலாபோற்றி போற்றி

போற்றியோநமச்சிவாய புயங்கனே மயங்குகின்றேன்
போற்றியோநமச்சிவாய புகலிடம்பிறிதொன்றில்லை
போற்றியோநமச்சிவாய புறமெனைப் போக்கல்கண்டாய்
போற்றியோநமச்சிவாய சயசய போற்றி போற்றி

கடையனேனைப்போற்றியென்னைக் கண்டுகொண்டருளுபோற்றி
விடவுளேயுருக்கியென்னை யாண்டிட வேண்டும்போற்றி
யுடலிதுகளைந்திட்டொல்லை யும்பர்தந்தருளுபோற்றி
சடையுளே கங்கைவைத்த சங்கராபோற்றி போற்றி.

## ஆனந்தத் தழுந்தல்.

---

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

புணர்ப்பதொக்க வெந்தையென்னை யாண்டுபூண நோக்கினாய்
புணர்ப்பதன்றிதென்றபோது நின்னொ டென்னொ டென்னிதாம்
புணர்ப்பதாக வன்றிதாக வன்புநின் கழற்கணே
புணர்ப்பதாகவங்கணாள புங்கமானபோகமே.

## ஆனந்தாதீதம்.

---

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம். [ணை
மாறிலாதமாக்கருணைவெள்ளமே வந்துமுந்திநின்மலர்கொடாளி
வேறிலாப்பதப்பரிசுபெறுநின் மெய்ம்மையன்பருன்மெய்ம்மைமே
[வினா
ஈறிலாதநீயெளியையாகிவந்தொளிசெய்மானுடமாகநோக்கியுங்
கீறிலாதநெஞ்சுடையனாயினேன் கடையனாயினேன்பட்டகீழ்மை
[யே.

## நீத்தல் விண்ணப்பம்.

பிரபஞ்சவைராக்கியம
உத்தரகோசமங்கையி லருளிச்செய்யப்பட்டது.
கட்டளைக்கலித்துறை
திருச்சிற்றம்பலம்.

கடையவனேனைக்கருணையினாற்கலந்தாண்டுகொண்ட
விடையவனேவிட்டிடுதிகண்டாய்விறல்வேங்கையின்றோ
லுடையவனேமன்னுமுத்தரகோசமங்கைக்கரசே
சடையவனேதளர்ந்தேனெம்பிரானென்னைத் தாங்கிக்கொள்ளே.

# திருவெம்பாவை.

சத்தியை வியந்தது.

திருவண்ணாமலையிலருளிச்செய்யப்பட்டது.

வெண்டளையான்வந்த

இயற்றரவிணைக்கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்,

ஆதியு மந்தமு மில்லா வரும்பெருஞ்
சோதியையாம்பாடக்கேட்டேயும் வாட்டடங்கண்
மாதேவளருதியோ வன்செவியோ நின்செவிதான்
மாதேவன்வார்கழல்கள் வாழ்த்தியவாழ்த் தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
போதார மளியின்மே னின்றும் புரண்டிங்ங
னேதேனு மாகாள் கிடந்தா ளென்னேயென்னே
யீதேயெந்தோழி பரிசேலோரெம்பாவாய்.

பாசம்பரஞ்சோதிக்கென்பாயிராப்பகனாம்
பேசும்போதெப்போதிப்போதாரமளிக்கே
நேசமும்வைத்தனையோ நேரிழையாய்நேரிழையீர்
சீசியிவையுஞ்சிலவோவிளையாடி
யேசுமிடமீதோவிண்ணோர்களேத்துதற்குக்
கூசுமலர்ப்பாதந்தந்தருள்வந்தருளுந்
தேசன்சிவலோகன்றில்லைச்சிற்றம்பலத்து
ளீசனார்க்கன்பார்யாமாரேலோரெம்பாவாய்.

முத்தன்னவெண்ணகையாய் முன்வந்தெதிரெழுந்தென்
னத்தனானந்த னமுதனென் றள்ளூறித்
தித்திக்கப்பேசுவாய்வந்துன்கடைதிறவாய்
பத்துடையீரீசன் பழவடியீர்பாங்குடையீர்
புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டாற் பொல்லாதோ
வெத்தோநின் னன்புடைமை யெல்லோமறியோமோ
சித்தமழகியார் பாடாரோநஞ்சிவனை
யித்தனையும் வேண்டுமெமக் கேலோரெம்பாவாய்.

ஒண்ணித்திலநகையாயின்னம்புலர்ந்தின்றோ
வண்ணக்கிளிமொழியாரெல்லாரும் வந்தாரோ
வெண்ணிக்கொண்டுள்ளவாசொல்லுகோமவ்வளவுங்
கண்ணைத்துயின்றவமேகாலத்தைப்போக்காதே
விண்ணுக்கொருமருந்தைவேதவிழுப்பொருளைக்
கண்ணுக்கினியானைப்பாடிக்கசிந்துள்ள
முண்ணெக்குநின்றுருக யாமாட்டோநீயேவந்
தெண்ணிக்குறையிற்றுயிலேலோரெம்பாவாய்.

மாலறியாநான்முகனுங்காணாமலையினைநாம்
போலறிவோமென்றுள்ளபொக்கங்களேபேசும்
பாலூறுதேன்வாய்ப்படிறீகடைதிறவாய்
ஞாலமேவிண்ணேபிறவேயறிவரியான்
கோலமுநம்மையாட்கொண்டருளிக்கோதாட்டுஞ்
சீலமும்பாடிச்சிவனேசிவனேயென்
றோலமிடினுமுணராயுணராய்கா
ணேலக்குழலிபரிசேலோரெம்பாவாய்.

மானேநீநென்னலைநாளைவந்துங்களை
நானேயெழுப்புவனென்றலுநாணாமே
போனதிசைபகராயின்னம்புலர்ந்தின்றோ
வானேநிலனேபிறவேயறிவரியான்
றானேவந்தெம்மைத்தலையளித்தாட்கொண்டருளும்
வான்வார்கழல்பாடிவந்தோர்க்குன்வாய்திறவா
யூனேயுருகாயுனக்கேயுறுமெமக்கு
மேனோர்க்குந்தங்கோனைப்பாடேலோரெம்பாவாய்.

அன்னேயிவையுஞ்சிலவோபலவமர
ருன்னற்கரியானொருவனிருஞ்சீரான்
சின்னங்கள்கேட்பச்சிவனென்றேவாய்திறப்பாய்
தென்னாவென்னாமுன்னந்தீசேர்மெழுகொப்பா

யென்னானையென்னரையனின்னமுதென்றெல்லோமுஞ்
சொன்னோங்கேள்வெவ்வேறாயின்னந்துயிலுதியோ
வன்னெஞ்சப்பேதையர்போல்வாளாகிடத்தியா
லென்னேதுயிலின்பரிசேலோரெம்பாவாய்.

கோழிசிலம்பச்சிலம்புங்குருகெங்கு
மேழிலியம்பவியம்பும்வெண்சங்கெங்குங்
கேழில்பரஞ்சோதிகேழில்பரங்கருணை
கேழில்விழுப்பொருள்கள்பாடினோங்கேட்டிலையோ
யாழியீதென்னவுறக்கமோவாய்திறவா
யாழியானன்புடைமையாமாறுமிவ்வாறோ
ஊழிமுதல்வனாய்நின்றவொருவனை
யேழைபங்காளனையேபாடேலோரெம்பாவாய்.

முன்னைப்பழம்பொருட்குமுன்னைப்பழம்பொருளே
பின்னைப்புதுமைக்கும்பேர்த்துமப்பெற்றியனே
யுன்னைப்பிரானாகப்பெற்ற வுன்சீரடியோ
முன்னடியார்தாள்பணிவோமாங்கவர்க்கேபாங்காவோ
மன்னவரேயெங்கணவராவாரவருகந்து
சொன்னபரிசேதொழும்பாய்ப்பணிசெய்வோ
மின்னவகையேயெமக்கெங்கோனல்குதியே
லென்னகுறையுமிலோமேலோரெம்பாவாய்.

பாதாளமேழினுங்கீழ்சொற்கழிவுபாதமலர்
போதார்புனைமுடியுமெல்லாப்பொருண்முடிவே
பேதையொருபாற்றிருமேனியொன்றல்லன்
வேதமுதல்விண்ணோருமண்ணுந்துதித்தாலு
மோதவுலவாவொருதோழன்றொண்டருளன்
கோதில்குலத்தரன்றன்கோயிற்பிணாப்பிள்ளைகா
ளேதவனூரேதவன்பேராருற்றாராரயலா
ரேதவனைப்பாடும்பரிசேலோரெம்பாய்

மொய்யார்தடம்பொய்கைப்புக்குமுகேரென்னக்
கையாற்குடைந்துகுடைந்துன்கழல்பாடி

ஐயாவழியடியோம்வாழ்ந்தோங்காணாரழல்போற்
செய்யாவெண்ணீறாடிசெல்வா சிறுமருங்குன்
மையார்தடங்கண்மடந்தைமணவாளா
ஐயாநீயாட்கொண்டருளும்விளையாடி
னுய்வார்களுய்யும்வகையெல்லாமுய்ந்தொழிந்தே
மெய்யாமற்காப்பாயெமையேலோரெம்பாவாய்

ஆர்த்தபிறவித்துயர்கெடநாமார்த்தாடுந்
தீர்த்தனற்றில்லைச்சிற்றம்பலத்தேதீயாடுங்
கூத்தனிவ்வானுங்குவலயமுமெல்லோமுங்
காத்தும்படைத்துங்கரந்தும்விளையாடி
வார்த்தையும்பேசிவளைசிலம்பவார்கலைக
ளார்ப்பரவஞ்செய்ய வணிகுழன்மேல்வண்டார்ப்ப
பூத்திகழும்பொய்கைகுடைந்துடையான்பொற்பாத
மேத்தியிருஞ்சுனைநீராடேலோரெம்பாவாய்

பைங்குவளைக்கார்மலராற்செங்கமலப்பைம்போதா
லங்கங்குருகினத்தாற்பின்னுமரவத்தாற்
றங்கண்மலங்கழுவுவார்வந்துசார்தலினா
லெங்கள்பிராட்டியுமெங்கோனும்போன்றிசைந்த
பொங்குமடுவிற்புகப்பாய்ந்துபாய்ந்துநஞ்
சங்கஞ்சிலம்பச்சிலம்புகலந்தார்ப்பக்
கொங்கைகள்பொங்கக்குடையும்புனல்பொங்கப்
பங்கயப்பூம்புனல்பாய்ந்தாடேலோரெம்பாவாய்.

காதார்குழையாடப்பைம்பூண்கலனாடக்
கோதைகுழலாடவண்டின்குழாமாடச்
சீதப்புனலாடிச்சிற்றம்பலம்பாடி
வேதப்பொருள்பாடியப்பொருளாமாபாடிச்
சோதிதிறம்பாடிச்சூழ்கொன்றைத்தார்பாடி
யாதிதிறம்பாடியந்தமாமாபாடிப்
பேதித்துநம்மைவளர்த்தெடுத்தபெய்வளைதன்
பாதத்திறம்பாடியாடேலோரெம்பாவாய்.

ஓரொருகாலெம்பெருமானென்றென்றேநம்பெருமான்
சீரொருகால்வாயோவாள்சித்தங்களிகூர
நீரொருகாலோவாநெடுந்தாரைகண்பனிப்பப்
பாரொருகால்வந்தனையாள் விண்ணோரைத்தான்பணியாள்
பேரரையற்கிங்ஙனேபித்தொருவராமாறு
மாரொருவரிவ்வண்ணமாட்கொள்ளும் வித்தகர்தாள்
வாருருவப்பூண்முலையீர்வாயாரநாம்பாடி
யேருருவப்பூம்புனல்பாய்ந்தாடேலோரெம்பாவாய்.

முன்னிக்கடலைச்சுருக்கியெழுந்துடையா
ளென்னத்திகழ்ந்தெம்மையாளுடையாளிட்டிடையின்
மின்னிப்பொலிந்தெம்பிராட்டிதிருவடிமேற்
பொன்னஞ்சிலம்பிற்சிலம்பித்திருப்புருவ
மென்னச்சிலைகுலவிநந்தம்மையாளுடையா
டன்னிற்பிரிவிலாவெங்கோமானன்பர்க்கு
முன்னியவணமக்குமுன்சுரக்குமின்னருளே
யென்னப்பொழியாய்மழையேலோரெம்பாவாய்

செங்கணவன்பாற்றிசைமுகன்பாற்றேவர்கள்பா
லெங்குமிலாததோரின்பநம்பாலதாக்
கொங்குண்கருங்குழலிநந்தம்மைக்கோதாட்டி
யிங்குநம்மில்லங்கடோறுமெழுந்தருளிச்
செங்கமலப்பொற்பாதந்தந்தருளுஞ்சேவகனை
யங்கணரசையடியோங்கட்காரமுதை
நங்கள்பெருமானைப்பாடிநலந்திகழப்
பங்கயப்பூம்புனல்பாய்ந்தாடேலோரெம்பாவாய்

அண்ணாமலையானடிக்கமலஞ்சென்றிறைஞ்சும்
விண்ணோர்முடியின்மணித்தொகைவீறற்றாற்போல்
கண்ணாரிரவிகதிர்வந்துகார்கரப்பத்
தண்ணாரொளிமழுங்கித்தாரகைகடாமகலப்
பெண்ணாகியாணாயலியாய்ப்பிறங்கொளிசேர்
விண்ணாகிமண்ணாகியித்தனையும்வேறாகிக்

கண்ணாரமுதமாய்நின்றான்கழல்பாடிப்
பெண்ணேயிப்பூம்புனல்பாய்ந்தாடேலோரெம்பாவாய்

உங்கையிற்பிள்ளையுனக்கேயடைக்கலமென்
றங்கப்பழஞ்சொற்புதுக்குமெம்மச்சத்தா
லெங்கள்பெருமானுனக்கொன்றுரைப்போங்கே
ளெங்கொங்கைநின்னன்பரல்லார்தோள்சேரற்க
வெங்கையுனக்கல்லாதெப்பணியுஞ்செய்யற்க
கங்குல்பகலெங்கண்மற்றொன்றுங்காணற்க
விங்கிப்பரிசேயெமக்கெங்கோனல்குதியே
லெங்கெழிலென்ஞாயிறெமக்கேலோரெம்பாவாய்

போற்றியருளுகநின்னாதியாம்பாதமலர்
போற்றியருளுகநின்னந்தமாஞ்செந்தளிர்கள்
போற்றியெல்லாவுயிர்க்குந்தோற்றமாம்பொற்பாதம்
போற்றியெல்லாவுயிர்க்கும் போகமாம்பூங்கழல்கள்
போற்றியெல்லாவுயிர்க்குமீறாமிணையடிகள்
போற்றிமானான்முகனுங்காணாதபுண்டரிகம்
போற்றியாமுய்யவாட்கொண்டருளும்பொன்மலர்கள்
போற்றியாமார்கழிநீராடேலோரெம்பாவாய்.

திருச்சிற்றம்பலம்.

---

## திருவம்மானை

ஆனந்தக்களிப்பு
திருவண்ணாமலையிலருளிச்செய்யப்பட்டது
ஒப்புமைபற்றிவந்தவாறடித்தரவு
கொச்சகக்கலிப்பா
திருச்சிற்றம்பலம்

செங்கணெடுமாலுஞ்சென்றிடந்துங்காண்பரிய
பொங்குமலர்ப்பாதம்பூதலத்தேபோந்தருளி
யெங்கள்பிறப்பறுத்திட்டெந்தரமுமாட்கொண்
டெங்குதிரள்சோலைத்தென்னன்பெருந்துறையான்

ணங்கணனந்தணனாயறைகூவிவீடருளு
மங்கருணைவார்கழலேபாடுதுங்காணம்மானாய்.

## திருப்பொற்சுண்ணம்.

ஆநந்தமனோலயம்
தில்லையிலருளிச்செய்யப்பட்டது.
அறுசீரடியாசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

முத்துநற்றாமம்பூமாலைதூக்கி
முளைக்குடந்தூபநற்றீபம்வைம்மின்
சத்தியுஞ்சோமியும்பார்மகளு
நாமகளோடுபல்லாண்டிசைமின்
சித்தியுங்கௌரியும்பார்ப்பதியுங்
கங்கையும்வந்துகவரிகொண்மி
னத்தனையாறம்மானைப்பாடி
யாடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

பூவியல்வார்சடையெம்பிராற்குப்
பொற்றிருச்சுண்ணமிடிக்கவேண்டு
மாவின்வடுவகிரன்னகண்ணீர்
வம்மின்கள்வந்துடன்பாடுமின்கள்
கூவுமின்றொண்டர் புறநிலாமே
குனிமின்றொழுமினெங்கோனெங்கூத்தன்
றேவியுந்தானும்வந்தெம்மையாளச்
செம்பொன்செய்சுண்ணமிடித்துநாமே.

சுந்தரநீறணிந்தும்மெழுகித்
தூயபொன்சிந்திநிதிபரப்பி
யிந்திரன்கற்பகநாட்டியெங்கு
மெழிற்சுடர்வைத்துக்கொடியெடுமின்

ணந்தார்கோனயன்றன்பெருமா
னாழியானாதனல்வேலன்றாதை
யெந்தரமாளுமையாள்கொழுநற்
கேய்ந்தபொற்சுண்ணமிடித்துநாமே.

காசணிமின்களுலக்கையெல்லாங்
காப்பணிமின்கள்கறையுரலை
நேசமுடையவடியவர்க
ணின்றுநிலாவுகவென்றுவாழ்த்தித்
தேசமெல்லாம்புகழ்ந்தாடுங்கச்சித்
திருவேகம்பன்செம்பொற்கோயில்பாடிப்
பாசவினையைப்பறித்துநின்று
பாடிப்பொற்சுண்ணமிடித்துநாமே.

அறுகெடுப்பாரயனும்மரியு
மன்றிமற்றிந்திரனோடமரர்
நறுமுறுதேவர்கணங்களெல்லா
நம்மிற்பின்பல்லதெடுக்கவொட்டோஞ்
செறிவுடைமும்மதிலெய்தவில்லி
திருவேகம்பன்செம்பொற்கோயில்பாடி
முறுவற்செவ்வாயினீர்முக்கணப்பற்
காடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

உலக்கைபலவோச்சுவார்பெரிய
ருலகமெலாமுரல்போதாதென்றே
கலக்கவடியவர்வந்துநின்றார்
காணவுலகங்கள்போதாதென்றே
நலக்கவடியோமையாண்டுகொண்டு
நாண்மலர்பாதங்கள்சூடத்தந்த
மலைக்குமருகனைப்பாடிப்பாடி
மகிழ்ந்துபொற்சுண்ணமிடித்துநாமே.

சூடகந்தோள்வளையார்ப்பவார்ப்பத்
தொண்டர்குழாமெழுந்தார்ப்பவார்ப்ப
நாடவர்நந்தம்மையார்ப்பவார்ப்ப
நாமுமவர்தம்மையார்ப்பவார்ப்ப
பாடகமெல்லடியார்க்குமங்கை
பங்கினனெங்கள்பராபரனுக்
காடகமாமலையன்னகோவுக்
காடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

வாட்டடங்கண்மடமங்கைநல்லீர்
வரிவளையார்ப்பவண்கொங்கைபொங்கத்
தோட்டிருமுண்டந்துதைந்திலங்கச்
சோற்றெம்பிரானென்றுசொல்லிச்சொல்லி
நாட்கொண்டநாண்மலர்ப்பாதங்காட்டி
நாயிற்கடைப்பட்டநம்மையிம்மை
யாட்கொண்டவண்ணங்கள்பாடிப்பாடி
யாடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

வையகமெல்லாமுரலதாக
மாமேருவென்னுமுலக்கைநாட்டி
மெய்யெனுமஞ்சணிறையவட்டி
மேதகுதென்னன்பெருந்துறையான்
செய்யதிருவடிபாடிப்பாடிச்
செம்பொனுலக்கைவலக்கைபற்றி
ஐயனணிதில்லைவாணனுக்கே
யாடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

முத்தணிகொங்கைகளாடவாட
மொய்க்குழல்வண்டினமாடவாடச்
சித்தஞ்சிவனொடுமாடவாடச்
செங்கயற்கண்பனியாடவாடப்

பித்தம்பிரானொடுமாடவாடப்
பிறவிபிறரொடுமாடவாட
வத்தன்கருணையொடாடவாட
வாடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

மாடுநகைவாணிலாவெறிப்ப
வாய்திறந்தம்பவளந்துடிப்ப
பாடுமினந்தம்மையாண்டவாறும்
பணிகொண்டவண்ணமும்பாடிப்பாடித்
தேடுமினெம்பெருமானைத்தேடிச்
சித்தங்களிப்பத்திகைத்துத்தேறி
யாடுமினம்பலத்தாடினானுக்
காடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

மையமர்கண்டனைவானநாடர்
மருந்தினைமாணிக்கக்கூத்தன்றன்னை
யையனையையர்பிரானைநம்மை
யகப்படுத்தாட்கொண்டருமைகாட்டும்
பொய்யர்தம்பொய்யனைமெய்யர்மெய்யைப்
போதரிக்கண்ணினைப்பொற்றொடித்தோட்
பையரவல்குன்மடந்தைநல்லீர்
பாடிப்பொற்சுண்ணமிடித்துநாமே.

மின்னிடைச்செந்துவர்வாய்க்கருங்கண்
வெண்ணகைப்பண்ணமர்மென்மொழியீ
ரென்னுடையாரமுதெங்களப்ப
னெம்பெருமானிமவான்மகட்குத்
தன்னுடைக்கேள்வன்மகன்றகப்பன்
றமையனெம்மையன்றாள்கள்பாடிப்
பொன்னுடைப்பூண்முலைமங்கைநல்லீர்
பொற்றிருச்சுண்ணமிடித்துநாமே.

சங்கமரற்றச்சிலம்பொலிப்பத்
தாழ்குழல்சூழ்தருமாலையாடச்
செங்கனிவாயிதழுந்துடிப்பச்
சேயிழையீர்சிவலோகம்பாடிக்
கங்கையிரைப்பவராவிரைக்குங்
கற்றைச்சடைமுடியான்கழற்கே
பொங்கியகாதலிற்கொங்கைபொங்கப்
பொற்றிருச்சுண்ணமிடித்துநாமே.

மாறிநின்றென்னைமயக்கிடும்வஞ்சப்
ஞானக்கரும்பின்றெளிவைப்பாகை
தேனைப்பழச்சுவையாயினானைச்
சித்தம்புகுந்துதித்திக்கவல்ல
கோனைப்பிறப்பறுத்தாண்டுகொண்ட
கூத்தனைநாத்தழும்பேறவாழ்த்திப்
பானற்றடங்கண்மடந்தைநல்லீர்
பாடிப்பொற்சுண்ணமிடித்துநாமே.

ஆவகைநாமும்வந்தன்பர்தம்மோ
டாட்செயும்வண்ணங்கள்பாடிவிண்மேற்
றேவர்கனாவிலுங்கண்டறியாச்
செம்மலர்ப்பாதங்கள்காட்டுஞ்செல்வச்
சேவகமேந்தியவெல்கொடியான்
சிவபெருமான்புரஞ்செற்றகொற்றச்
சேவகனாமங்கள்பாடிப்பாடிச்
செம்பொன்செய்சுண்ணமிடித்துநாமே.

தேனகமாமலர்க்கொன்றைபாடிச்
சிவபுரம்பாடித்திருச்சடைமேல்
வாணகமாமதிப்பிள்ளைபாடி
மால்விடைபாடிவலக்கையேந்
தூனகமாமழுச்சூலம்பாடி

யும்பருமிம்பருமுய்யவன்று
போனகமாகஞ்சுண்டல்பாடிப்
பொற்றிருச்சுண்ணமிடித்துநாமே.

அயன்றலைகொண்டுசெண்டாடல்பாடி
யருக்கனெயிறுபறித்தல்பாடிக்
கயந்தனைக்கொன்றுரிபோர்த்தல்பாடிக்
காலனைக்காலாலுதைத்தல்பாடி
யியைந்தனமுப்புரமெய்தல்பாடி
யேழையடியோமையாண்டுகொண்ட
நயந்தனைப்பாடிநின்றாடியாடி
நாதற்குச்சுண்ணமிடித்துநாமே.

வட்டமலர்க்கொன்றைமாலைபாடி
மத்தமும்பாடிமதியும்பாடிச்
சிட்டர்கள்வாழுந்தென்றில்லைபாடிச்
சிற்றம்பலத்தெங்கள்செல்வம்பாடிக்
கட்டியமாசுணக்கச்சைபாடிக்
கங்கணம்பாடிக்கவித்தகைம்மே
யிட்டுநின்றாடுமரவம்பாடி
யீசற்குச்சுண்ணமிடித்துநாமே.

வேதமும்வேள்வியுமாயினார்க்கு
மெய்ம்மையும்பொய்ம்மையுமாயினார்க்குச்
சோதியுமாயிருளாயினார்க்குத்
துன்பமுமாயின்பமாயினார்க்குப்
பாதியுமாய்முற்றுமாயினார்க்குப்
பந்தமுமாய்வீடுமாயினார்க்குக்
காதியுமந்தமுமாயினாருக்
காடப்பொற்சுண்ணமிடித்துநாமே.

திருச்சிற்றம்பலம்.

# திருக்கோத்தும்பி.



## சிவனோடைக்கியம்.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.
நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா.
திருச்சிற்றம்பலம்

பூவேறு கோனும்புரந்தரனும்பொற்பமைந்த
நாவேறுசெல்வியுநாரணனுநான்மறையு
மாவேறுசோதியும்வானவருந்தாமறியாச்
சேவேறுசேவடிக்கேசென்றூதாய்கோத்தும்பீ.

## திருத்தெள்ளேணம்.

சிவனோடடைவு.
தில்லையிலருளிச்செய்யப்பட்டது.
நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா.
திருச்சிற்றம்பலம்.

திருமாலும்பன்றியாய்ச்சென்றுணராத்திருவடியை
யுருநாமறியவோரந்தணனாயாண்டுகொண்டா
னொருநாமமோருருவமொன்றுமில்லார்க்காயிரந்
திருநாமம்பாடிநாந்தெள்ளேணங்கொட்டாமோ.

## திருப்பூவல்லி.

மாயாவிசயநீக்குதல்.
தில்லையிலருளிச்செய்யப்பட்டது.
நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா.
திருச்சிற்றம்பலம்.

இணையார்திருவடியென்றலைமேல்வைத்தலுமே
துணையானசுற்றங்களத்தனையுந்துறந்தொழிந்தே

னணையார்புனற்றில்லையம்பலத்தேயாடுகின்ற
புணையாளன்சீர்பாடிப்பூவல்லிகொய்யாமோ.

எந்தையெந்தாய்சுற்றமற்றுமெல்லாமென்னுடைய
பந்தமறுத்தென்னையாண்டுகொண்டபாண்டிப்பிரா
னந்தமிடைமருதிலானந்தத்தேனிருந்த
பொந்தைப்பரவிநாம்பூவல்லிகொய்யாமோ.

## திருப்பொன்னூசல்.

அருட்சுத்தி.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

ஒப்புமைபற்றிவந்த

ஆறடித்தரவு கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்

சீரார்பவளங்கான்முத்தங்கயிறாக
ஏராரும்பொற்பலகையேறியினிதமர்ந்து
நாராயணனறியாநாண்மலர்த்தாளடியேற்
கூராகத்தந்தருளுமுத்தரகோசமங்கை
யாராவமுதினருட்டாளிணைப்பாடிப்
போரார்வேற்கண்மடவீர்பொன்னூசலாடாமோ.

## குயிற்பத்து.

ஆத்துமவிரக்கம்.

தில்லையிலருளிச் செய்யப்பட்டது.

ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கீதமினியகுயிலேகேட்டியே லெங்கள்பெருமான்
பாதமிரண்டும்வினவிற்பாதாள மேழினுக்கப்பாற்
சோதிமணிமுடிசொல்லிற் சொல்லிறந்துநின்றதொன்மை
யாதிகுணமொன்றுமில்லானந்தமிலான் வரக்கூவாய்.

சுந்தரத்தின்பக்குயிலேசூழ்சுடர் ஞாயிறுபோல
வந்தரத்தேநின்றிழிந்திங்கடியவ ராசையறுப்பான்
முந்துநடுவுமுடிவுமாகிய மூவரறியாச்
சிந்துரச்சேவடியானைச்சேவகனைவரக்கூவாய்.

## திருப்பள்ளியெழுச்சி.

திரோதானசுத்தி

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

போற்றியென்வாழ்முதலாகியபொருளே
புலர்ந்ததுபூங்கழற்கிணைதுணைமலர்கொண்
டேற்றிநின்றிருமுகத்தெமக்கருண்மலரு
மெழினகைகொண்டுநின்றிருவடிதொழுகோஞ்
சேற்றிதழ்க்கமலங்கண்மலருந்தண்வயல்சூழ்
திருப்பெருந்துறையுறைசிவபெருமானே
யேற்றுயர்கொடியுடையாயெனையுடையா
யெம்பெருமான்பள்ளியெழுந்தருளாயே.

## கோயிற்றிருப்பதிகம்.

அனுபோகவிலக்கணம்.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மாறிநின்றென்னைமயக்கிடும்வஞ்சப்
புலனைந்தின்வழியடைத்தமுதே
யூறிநின்றென்னுளெழுபரஞ்சோதி
யுள்ளவாகாணவந்தருளாய்

தேறலின்றெளிவேசிவபெருமானே
திருப்பெருந்துறையுறைசிவனே
யீறிலாப்பதங்களியாவையுங்கடந்த
வின்பமேயென்னுடையன்பே.

## செத்திலாப்பத்து.

சிவாநந்தமளவறுக்கொணாமை.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

ஆ சி ரி ய வி ரு த் த ம்.

திருச்சிற்றம்பலம்.

பொய்யனேனகநெகப்புகுந்தமுதூறும்
புதுமலர்க்கழலிணையடிபிரிந்துங்
கையனேனின்னுஞ்செத்திலேனந்தோ
விழித்திருந்துள்ளக்கருத்தினையிழந்தே
னையனேயரசேயருட்பெருங்கடலே
யத்தனேயயன்மாற்கரியொண்ணாச்
செய்யமேனியனேசெய்வகையறியேன்
திருப்பெருந்துறைமேவியசிவனே.

## அடைக்கலப்பத்து.

பக்குவ நிண்ணயம்.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

கலவைப் பாட்டு.

திருச்சிற்றம்பலம்.

செழுக்கமலத்திரளனநின்சேவடிசேர்ந்தமைந்த
பழுத்தமனத்தடியருடன்போ யினர்யான்பாவியேன்
புழுக்கணுடைப்புன்குரம்பைப்பொல்லாக்கல்விஞானமிலா
வழுக்குமனத்தடியேனுடையாயுன்னடைக்கலமே.

வழங்குகின்றாய்க் குன்னருளாரமுதத்தைவாரிக்கொண்டு
விழுங்குகின்றேன் விக்கினேன் வினையேனென்விதியின்மையாற்
றழங்கருந்தேனன்ன தண்ணீர்பருகத்தந்துய்யக்கொள்ளா
யழுங்குகின்றேனுடையாயடியேனுன்னடைக்கலமே.

## வாழாப்பத்து.

---

### முத்தியுபாயம்.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பாரொடுவிண்ணாய்ப்பரந்தவெம்பரனே
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
சீரொடுபொலிவாய்சிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
யாரொடுநோகேனார்க்கெடுத்துரைக்கே
னாண்டநீயருளிலையானால்
வார்கடலுலகில்வாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

வம்பனேன்றன்னையாண்டமாமணியே
மற்றுநான்பற்றிலேன்கண்டா
யும்பருமறியாவொருவனேயிருவர்க்
குணர்விறந்துலகமூடுருவுஞ்
செம்பெருமானேசிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
யெம்பெருமானேயென்னையாள்வானே
யென்னைநீகூவிக்கொண்டருளே.

பாடிமால்புகழும்பாதமேயல்லாற்
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
தேடிநீயாண்டாய்சிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே.

யூடுவதுன்னோடுவப்பதுமுன்னை
யுணர்த்துவதுனக்கெனக்குறுதி
வாடினேனிங்குவாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

வல்லைவாளரக்கர்புரமெரித்தானே
மற்றுநான்பற்றிலேன்கண்டாய்
தில்லைவாழ்கூத்தாசிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
யெல்லைமூவுலகு முருவியன்றிருவர்
காணுநாளாதியீறின்மை
வல்லையாய்வளர்ந்தாய்வாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

பண்ணினேர்மொழிபாள்பங்கநீயல்லாற்
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
திண்ணமேயாண்டாய்சிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
யெண்ணமேயுடல்வாய்மூக்கொடுசெவிகண்
ணென்றிவைநின்கணேவைத்து
மண்ணின்மேலடியேன்வாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரிவாயே.

பஞ்சின்மெல்லடியாள்பங்கநீயல்லாற்
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
செஞ்செவேயாண்டாய்சிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
யஞ்சினேனாயேனாண்டுநீயளித்த
வருளினைமருளினான்மறந்த
வஞ்சனேனிங்குவாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

பரிதிவாழொளியாய்பாதமேயல்லாற்
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
திருவுயர்கோலச்சிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
கருணையேநோக்கிக்கசிந்துளமுருகிக்
கலந்துநான்வாழுமாறறியா
மருளனேனுலகில்வாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

பந்தணைவிரலாள்பங்கநீயல்லாற்
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
செந்தழல்போல்வாய்சிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
யந்தமிலமுதேயரும்பெரும்பொருளே
யாரமுதேயடியேனை
வந்துய்யவாண்டாய்வாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

பாவநாசாவுன்பாதமேயல்லாற்
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
தேவர்தந்தேவேசிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே
மூவுலகுருவவிருவர்கீழ்மேலாய்
முழங்கழலாய்நிமிர்ந்தானே
மாவுரியானேவாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே.

பழுதிறொல்புகழாள்பங்கநீயல்லாற்
பற்றுநான்மற்றிலேன்கண்டாய்
செழுமதியணிந்தாய்சிவபுரத்தரசே
திருப்பெருந்துறையுறைசிவனே

தொழுவனேபிறரைத்துதிப்பேனேவெனக்கோர்
துணையெனநினைவனேசொல்லாய்
பழவிடையானேவாழ்கிலேன்கண்டாய்
வருகவென்றருள்புரியாயே

திருச்சிற்றம்பலம்.

## அருட்பத்து.

மகாமாயாசுத்தி.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சோதியேசுடரேசூழொளிவிளக்கே
சுரிகுழற்பணைமுலைமடந்தை
பாதியேபரனேபால்கொள்வெண்ணீற்றாய்
பங்கயத்தயனுமாலறியா
நீதியேசெல்வத்திருப்பெருந்துறையி
னிறைமலர்க்குருந்தமேவியசீ
ராதியேயடியேனாதரித்தழைத்தா
லதெந்துவேயென்றருளாயே

## திருக்கழுக்குன்றப் பதிகம்.

சற்குருதரிசனம்.

திருக்கழுக்குன்றதி லருளிச்செய்யப்பட்டது.

ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பிணக்கிலாதபெருந்துறைப்பெரு
மானுன்னாமங்கள்பேசுவார்க்
கிணக்கிலாததோரின்பமேவருந்
துன்பமேதுடைத்தெம்பிரா

உணக்கிலாததோர்வித்துமேல்விளை
யாமலென்வினையொத்தபின்
கணக்கிலாத்திருக்கோலநீவந்து
காட்டினாய்கழுக்குன்றிலே.

பிட்டுநேர்படமண்சுமந்த
பெருந்துறைப்பெரும்பித்தனே
சட்டநேர்படவந்திலாத
சழக்கனேனுனைச்சார்ந்திலேன்
சிட்டனேசிவலோகனேசிறு
நாயினுங்கடையாயவெங்
கட்டனேனையுமாட்கொள்வான்வந்து
காட்டினாய்க்கழுக்குன்றிலே.

மலங்கினேன்கண்ணினீரைமாற்றி
மலங்கெடுத்தபெருந்துறை
விலங்கினேன்வினைக்கேடனேனினி
மேல்விளைவதறிந்திலே
னிலங்குகின்றநின்சேவடிக
ளிரண்டும்வைப்பிடமின்றியே
கலங்கினேன்கலங்காமலேவந்து
காட்டினாய்கழுக்குன்றிலே.

பூணொணாததொரன்புபூண்டு
பொருந்திநாடொறும்போற்றவு
நாணொணாததொர்நாணமெய்தி
நடுக்கடலுளழுந்திநான்
பேணொணாதபெருந்துறைப்பெருந்
தோணிபற்றியுகைத்தலுங்
காணொணாத்திருக்கோலநீவந்து
காட்டினாய்கழுக்குன்றிலே.

கோலமேனிவராகமேகுண
மாம்பெருந்துறைக்கொண்டலே
சீலமேதுமறிந்திலாதவென்
சிந்தைவைத்தசிகாமணி

ஞாலமேகரியாகநானுனை
நச்சிநச்சிடவந்திடுங்
காலமேயுனையோதநீவந்து
காட்டினாய்கழுக்குன்றிலே.

பேதமில்லதொர்கற்பளித்த
பெருந்துறைவெல்லமே
யேதமேபலபேசநீயெனை
யேதிலார்முனமென்செய்தாய்
சாதல்சாதல்பொல்லாமையற்ற
தனிச்சரண்சரணாமெனக்
காதலாலுனையோதநீவந்து
காட்டினாய்கழுக்குன்றிலே.

இயக்கிமாரறுபத்துநால்வரை
யெண்குணஞ்செய்தவீசனே
மயக்கமாயதொர்மும்மலப்பழ
வல்வினைக்குள்ழுந்தவுந்
துயக்கறுத்தெனையாண்டுகொண்டுநின்
றாய்மலர்க்கழறந்தெனைக்
கயக்கவைத்தடியார்முனேவந்து
காட்டினாய்கழுக்குன்றிலே.

திருச்சிற்றம்பலம்.

## கண்டபத்து.

நிருத்த தரிசனம்.
தில்லையிலருளிச் செய்யப்பட்டது.
கொச்சகக்கலிப்பா.
திருச்சிற்றம்பலம்.

இந்திரியவயமயங்கி யிறப்பதற்கேகாரணமா
யந்தரமேதிரிந்துபோயருநரகில்வீழ்வேற்குச்
சிந்தைதனைத்தெளிவித்துச் சிவமாக்கியெனையாண்ட
வந்தமிலாவானந்தமணிகொடில்லைகண்டேனே.

வினைப்பிறவியென்கின்ற வேதனையிலகப்பட்டுத்
தனைச்சிறிது நினையாதே தளர்வெய்திக்கிடப்பேனை
யெனைப்பெரிதுமாட்கொண்டென் பிறப்பறுத்தவிணையிலியை
யனைத்துலகுந்தொழுந்தில்லை யம்பலத்தேகண்டேனே.

## பிடித்தபத்து.

முத்திக்கலப்புரைத்தல்
திருத்தோணிபுரத்தி லருளிச்செய்யப்பட்டது.
ஆசிரிய விருத்தம்.
திருச்சிற்றம்பலம்.

உம்பர்கட்கரசேயொழிவறநிறைந்த
யோகமேயூற்றையேன்றனக்கு
வம்பெனப்பழுத்தென்குடிமுழுதாண்டு
வாழ்வறவாழ்வித்தமருந்தே
செம்பொருட்டுணிவேசீருடைக்கழலே
செல்வமேசிவபெருமானே
யெம்பொருட்டுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

விடைவிடாதுகந்தவிண்ணவர்கோவே
வினையனேனுடையமெய்ப்பொருளே
முடைவிடாதடியேன்மூத்தறமண்ணாய்ப்
முழுப்புழுக்குரம்பையிற்கிடந்து
கடைபடாவண்ணங்காத்தெனையாண்ட
கடவுளேகருணைமாகடலே
யிடைவிடாதுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

அம்மையேயப்பாவொப்பிலாமணியே
யன்பினில்விளைந்தவாரமுதே
பொய்ம்மையேபெருக்கிப்பொழுதினைச்சுருக்கும்
புழுத்தலைப்புலையனேன்றனக்குச்

46

செம்மையேயாயசிவபதமளித்த
செல்வமேசிவபெருமானே
யிம்மையேயுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

அருளுடைச்சுடரேயளிந்ததோர்கனியே
பெருந்திறலருந்தவர்க்கரசே
பொருளுடைக்கலையேபுகழ்ச்சியைக்கடந்த
போகமேயோகத்தின்பொலிவே
தெருளிடத்தடியார்சிந்தையுட்புகுந்த
செல்வமேசிவபெருமானே
யிருளிடத்துன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

ஒப்புனக்கில்லாவொருவனேயடியே
னுள்ளத்துள்ளொளிர்கின்றவொளியே
மெய்ப்பதமறியாவீறிலியேற்கு
விழுமியதளித்ததோரன்பே
செப்புதற்கரியசெழுஞ்சுடர்மூர்த்தி
செல்வமேசிவபெருமானே
யெய்ப்பிடத்துன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கழுந்தருளுவதினியே.

அறவையேன்மனமேகோயிலாக்கொண்டாண்
டளவிலாவானந்தமருளிப்
பிறவிவேரறுத்தென்குடிமுழுதாண்ட
பிஞ்ஞகாபெரியவெம்பொருளே
திறவிலேகண்டகாட்சியேயடியேன்
செல்வமேசிவபெருமானே
யிறவிலேயுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

பாசவேரறுக்கும்பழம்பொருடன்னைப்
பற்றுமாறடியனேற்கருளிப்
பூசனையுகந்தென்சிந்தையுட்புகுந்து
பூங்கழல்காட்டியபொருளே
தேசுடைவிளக்கேசெழுஞ்சுடர்மூர்த்தீ
செல்வமேசிவபெருமானே.
யீசனேயுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

அத்தனேயண்டரண்டமாய்நின்ற
வாதியேயாதுமீறில்லாச்
சித்தனேபத்தர்சிக்கெனப்பிடித்த
செல்வமேசிவபெருமானே
பித்தனேயெல்லாவுயிருமாய்த்தழைத்துப்
பிழைத்தவையல்லையாய்நிற்கும்
வித்தகனேயுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

பானினைந்தூட்டுந்தாயினுஞ்சாலப்
பரிந்துநீபாவியேனுடைய
வூனினையுருக்கியுள்ளொளிபெருக்கி
யுலப்பிலாவானந்தமாய
தேனினைச்சொரிந்துபுறம்புறந்திரிந்த
செல்வமேசிவபெருமானே
யானுனைத்தொடர்ந்துசிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே.

புன்புலால்யாக்கைபுரைபுரைகனியப்
பொன்னெடுங்கோயிலாப்புகுந்தென்
னென்பெலாமுருக்கியெளியையாயாண்ட
வீசனேமாசிலாமணியே

48

துன்பமேபிறப்பேயிறப்பொடுமயக்காந்
தொடக்கலாமறுத்தநற்சோதீ
யின்பமேயுன்னைச்சிக்கெனப்பிடித்தே
னெங்கெழுந்தருளுவதினியே

திருச்சிற்றம்பலம்.

---

## திருவேசறவு

---

சுட்டறிவொழித்தல்.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

கொச்சகக்கலிப்பா

திருச்சிற்றம்பலம்.

இரும்புதருமனத்தேனை யீர்த்தீர்த்தென்னென்புருக்கிக்
கரும்புதருசுவையெனக்குக்காட்டினையுன்கழலிணை
ளொருங்குதிரையுலவுசடையுடையானேநரிகளெல்லாம
பெருங்குதிரையாக்கியவாறன்றேயுன்பேரருளே

## திருப்புலம்பல்.

---

சி வா ன ந் த மு றி வு

திருவாரூரிலருளிச்செய்யப்பட்டது.

கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

பூங்கமலத்தயனொடுமாலறியாதநெறியானே
கோங்கலர்சேர்குவிமுலையாள்கூறாவெண்ணீறாடி
யோங்கெயில்சூழ்திருவாரூருடையானேயடியேனின்
பூங்கழல்களவையல்லாதெவையாதும்புகழேனே.

சடையானே தழலாடி தயங்குமூவிலைச்சூலப்
படையானே பரஞ்சோதி பசுபதீ மழவெள்ளை
விடையானே விரிபொழில்சூழ் பெருந்துறையாயடியேனு
னுடையானே யுனையல்லாதுறுதுணைமற்றறியேனே.

## சென்னிப்பத்து.

---

சிவவிளைவு

திருப்பெருந்துறையிலருளிச்செய்யப்பட்டது.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தேவதேவன்மெய்ச்சேவகன்
றென்பெருந்துறைநாயகன்
மூவராலுமறியொணாமுத
லாயவானந்தமூர்த்தியான்
யாவராயினுமன்பரன்றி
யறியொணாமலர்ச்சோதியான்
றூயமாமலர்ச்சேவடிக்கணஞ்
சென்னிமன்னிச்சுடருமே.

## எண்ணப்பதிகம்.

---

ஒழியாவின்பத்துவகை.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பாருருவாயபிறப்பறவேண்டும் பத்திமையும்பெறவேண்டுஞ்
சீருருவாய்சிவபெருமானே செங்கமலர்போ
லாருருவாயவென்னாரமுதேயுன் னடியவர்தொகைநடுவே [ளே.
யோருருவாயநின்றிருவருள்காட்டியென்னையுமுய்யக்கொண்டரு

## யாத்திரைப்பத்து.

---

அநுபவாதீத முரைத்தல்.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பூவார்சென்னிமன்னனெம்
புயங்கப்பெருமான்சிறியோமை
யோவாதுள்ளங்கலந்துணர்வா
யுருக்கும்வெள்ளக்கருணையினா
லாவாவென்னப்பட்டன்பா
யாட்பட்டீர்வந்தொருப்படுமின்
போவோங்காலம்வந்ததுகாண்
பொய்விட்டுடையான்கழல்புகவே.

## திருப்படையாட்சி.

---

சீவோபாதியொழிதல்

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கண்களிரண்டுமவன்கழல்கண்டு
களிப்பனவாகாதே
காரிகையார்கடம்வாழ்விலென்வாழ்வு
கடைப்படுமாகாதே
மண்களில்வந்துபிறந்திடுமாறு
மறந்திடுமாகாதே
மாலறியாமலர்ப்பாதமிரண்டும்
வணங்குதுமாகாதே

பண்களிகூர்தருபாடலொடாடல்
பயின்றிடுமாகாதே
பாண்டிநன்னாடுடையான்படையாட்சிகள்
பாடுதுமாகாதே
விண்களிகூர்வதோர்வேதகம்வந்து
வெளிப்படுமாகாதே
மீன்வலைவீசியகானவன்வந்து
வெளிப்படுமாயிடிலே.

ஒன்றினொடொன்றுமோரைந்தினொடைந்து
முயிர்ப்பறுமாகாதே
புன்னடியாரடியாரடியோமென
வுய்ந்தனவாகாதே
கன்றைநினைந்தெழுதாயெனவந்த
கணக்கதுவாகாதே
காரணமாகுமனாதிகுணங்கள்
கருத்துறுமாகாதே
நன்றிதுதீதெனவந்தநடுக்க
நடந்தனவாகாதே
நாமுமெலாமடியாருடனேசெல
நண்ணுதுமாகாதே
யென்றுமெனன்புநிறைந்தபராவமு
தெய்துவதாகாதே
யேறுடையானெனையாளுடைநாயக
னென்னுள்புகுந்திடிலே.

பந்தவிகாரகுணங்கள்பறிந்து
மறிந்திடுமாகாதே
பாவனையாயகருத்தினில்வந்த
பராவமுதாகாதே
யந்தமிலாதவகண்டமுநம்மு
ளகப்படுமாகாதே
யாதிமுதற்பரமாயபரஞ்சுட
ரண்ணுவதாகாதே

செந்துவர்வாய்மடவாரிடரானவை
சிந்திடுமாகாதே
சேலனகண்களவன்றிருமேனி
திளைப்பனவாகாதே
யிந்திரஞாலவிடாயபிறவித்துய
ரேகுவதாகாதே
யென்னுடைநாயகனாகியவீச
னெதிர்ப்படுமாயிடிலே.

என்னணியார்முலையாகமளைந்துட
னின்புறுமாகாதே
யெல்லையின்மாக்கருணைக்கடலினி
தாடுதுமாகாதே
நன்மணிநாதமுழங்கியெனுள்ளுற
நண்ணுவதாகாதே
நாதனணித்திருநீற்றினைநித்தலு
நண்ணுவதாகாதே
மன்னியவன்பரிலென்பணுமுந்துற
வைகுவதாகாதே
மாமறையுமறியமலர்ப்பாதம்
வணங்குதுமாகாதே
பின்னியசெங்கழுநீர்மலமென்முலை
யெய்துவதாகாதே
யென்னையுடைப்பெருமானருளீச
னெழுந்தருளப்பெறிலே.

மண்ணினின்மாயைமதித்துவகுத்த
மயக்கறுமாகாதே
வானவருமறியாமலர்ப்பாதம்
வணங்குதுமாகாதே
கண்ணிலிகாலமனைத்திலும்வந்த
கலக்கறுமாகாதே
காதல்செயும்மடியார்மனமின்று
களித்திடுமாகாதே

பெண்ணலியாணெனநாமெனவந்து
பிணக்கறுமாகாதே
பேரறியாதவநேகபவங்கள்
பிழைத்தனவாகாதே
யெண்ணிலியாகியசித்திகள்வந்தெனை
யெய்துவதாகாதே
யென்னையுடைப்பெருமானருளீச
னெழுந்தருளப்பெறிலே.

பொன்னியலுந்திருமேனிவெண்ணீறு
பொலிந்திடுமாகாதே
பூமழைமாதவர்கைகள்குவிந்து
பொழிந்திடுமாகாதே
மின்னியலுண்ணிடையார்கள்கருத்து
வெளிப்படுமாகாதே
வீணைமுரன்றெழுமோசையிலின்ப
மிகுந்திடுமாகாதே.
தன்னடியாரடியென்றலைமீது
தழைப்பனவாகாதே
தானடியோமுடனேயுயவந்து
தலைப்படுமாகாதே
யின்னியமெங்குநிறைந்தினிதாக
வியம்பிடுமாகாதே
யென்னைமுனாளுடையீசனெனத்த
னெழுந்தருளப்பெறிலே.

சொல்லியலாதெழுதூமணியோசை
சுவைதருமாகாதே
துண்ணெனவென்னுளமன்னியசோதி
தொடர்ந்தெழுமாகாதே
பல்லியல்பாயபரப்பறவந்த
பாரபரமாகாதே

பண்டறியாதபரானுபவங்கள்
பாங்கெதழுமாகாதே
வில்லியனன்னுதலார்மயலின்று
விளைந்திடுமாகாதே
விண்ணவரும்மறியாதவிழுப்பொரு
ளிப்பொருளாகாதே
யெல்லையிலாதனவெண்குணமானவை
யெய்திடுமாகாதே
யிந்துசிகாமணியெங்களையாள
வெழுந்தருளப்பெறிலே.

சங்குதிரண்டுமுரன்றெழுமோசை
தழைப்பனவாகாதே
சாதிவிடாதகுணங்கணம்மோடு
சலித்திடுமாகாதே
யங்கிதுநன்றிதுநன்றெனுமாயை
யடங்கிடுமாகாதே
யாசையெலாமடியாரடியோமெனு
மத்தனையாகாதே
செங்கயலொண்கண்மடந்தையர்சிந்தை
திளைப்பனவாகாதே
சிரடியார்கள்சிவானுபவங்க
டெரிந்திடுமாகாதே
யெங்குநிறைந்தமுதூறுபரஞ்சுட
ரெய்துவதாகாதே
யீறறியாமறையோனெனையாள
வெழுந்தருளப்பெறிலே.

திருச்சிற்றம்பலம்.

## ஆனந்தமாலை.

சிவானுபவவிருப்பம்.
தில்லையிலருளிச் செய்யப்பட்டது.
ஆசிரிய விருத்தம்.
திருச்சிற்றம்பலம்.

மின்னேரனையபூங்கழல்க ளடைந்தார்கடந்தார்வியனுலகம்
பொன்னேரனையமலர்கொண்டுபோற்றாநின்றாரமரரெல்லாங்
கன்னேரனையமனக்கடையாய்க் கழிப்புண்டவலக்கடல்வீழ்ந்த
வென்னேரனையேனினியுனைக்கூடும்வண்ணமியம்பாயே.

## அன்னைப்பத்து.

ஆத்துமபூரணம்.
தில்லையிலருளிச்செய்யப்பட்டது.
கலிவிருத்தம்.
திருச்சிற்றம்பலம்.

வேதமொழியர்வெண்ணீற்றர்செம்மேனியர்
நாதப்பறையினரன்னேயென்னும்
நாதப்பறையினர்நான்முகன்மாலுக்கு
நாதரிந்நாதனாரன்னேயென்னும்.

## திருத்தசாங்கம்.

அடிமைகொண்ட முறைமை.
தில்லையிலருளிச் செய்யப்பட்டது.
நேரிசைவெண்பா.
திருச்சிற்றம்பலம்.

ஏராரிளங்கிளியேயெங்கள் பெருந்துறைக்கோன்
சீரார்திருநாமந்தேர்ந்துரையாய்—ஆரூரன்
செம்பெருமான்வெண்மலரான் பாற்கடலான்செப்புவபோ
லெம்பெருமான்றேவர்பிரானென்று.

## பிரார்த்தனைப்பத்து.

சதாமுத்தி

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

கலந்துநின்னடியாரோடன்று வாளாகளித்திருந்தேன்
புலர்ந்துபோனகாலங்கள் புகுந்துநின்றதிடர்பின்னா
ளுலர்ந்துபோனே னுடையானே யுலவாவின்பச்சுடர்காண்பா
னலந்துபோனே னருள்செய்யா யார்வங்கூர வடியேற்கே.

## குழைத்தபத்து.

ஆத்மநிவேதனம்.

திருப்பெருந்துறையிலருளிச்செய்யப்பட்டது.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

குழைத்தாற்பண்டைக்கொடுவினைநோய்
காவாயுடையாய்கொடுவினையே
னுழைத்தா லுறுதியுண்டோதா
னுமையாள்கணவாவெனையாள்வாய்
பிழைத்தாற்பொறுக்கவேண்டாவோ
பிறைசேர்சடையாய்முறையோவென்
றழைத்தாலருளாதொழிவதே
யம்மானேயுன்னடியேற்கே.

திருச்சிற்றம்பலம்.

## சுட்டறுத்தல்.

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வெள்ளங்காழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே யெனக்கேட்டு வேட்டநெஞ்சாய்ப்
பள்ளங்கா ழுறுபுனலிற் கீழ்மேலாகப்
பதைத்துருகு மவர்நிற்க வென்னையாண்டாய்க்
குள்ளந்தா ணின்றுச்சி யளவுநெஞ்சா
யுருகாதா லுடம்பெல்லாங் கண்ணாயண்ணா
வெள்ளந்தான் பாயாதா னெஞ்சங்கல்லாங்
கண்ணிணையு மரமாந்தீ வினையினேற்கே.

## கைம்மாறு கொடுத்தல்.

கலி விருத்தம்.

இருகையானையை யொத்திருந்தென்னுளக்
கருவையான்கண்டிலேன்கண்ட தெய்வமே
வருகவென்றுபணித்தனை வானுளோர்க்
கொருவனேகிற்றி லேன்கிற்ப னுண்ணவே.
உண்டொரொண்பொரு ளென்றுணர்வார்க்கெலாம்
பெண்டிராணலி யென்றறி யொண்கிலை
தொண்டனேற்குள்ள வாவந்துதோன்றினாய்
கண்டுங்கண்டிலே னென்னகண்மாயமே.

## ஆனந்தப் பரவசம்.

கலி நிலைத்துறை.

விச்சுக்கேடுபொய்க்காகா
தென்றிங்கெனைவைத்தா
யிச்சைக்கானா ரெல்லாரும்
வந்துன்றாள்சேர்ந்தா

ரச்சத்தாலே யாழ்ந்திடு
கின்றேனாரூரெம்
பிச்சைத்தேவா வென்னான்
செய்கேன் பேசாயே.

## திருவுந்தியார்.

---

ஞானவெற்றி.
தில்லையிலருளிச் செய்யப்பட்டது.

கலித்தாழிசை.

திருச்சிற்றம்பலம்.

வளைந்தது வில்லு விளைந்தது பூச
லுளைந்தன முப்புர முந்தீபற
வொருங்குடன் வெந்தவா றுந்தீபற.

ஈரம்புகண்டில மேகம்பர் தங்கையி
லோரம்பே முப்புர முந்தீபற
வொன்றும் பெருமிகை யுந்தீபற.

## கோயின்மூத்த திருப்பதிகம்.

---

அநாதியாகிய சற்காரியம்.
தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

உடையாளுன்றனடுவிருக்கு
முடையாணடுவுணீயிருத்தி
யடியேனடுவுளிருவீரு
மிருப்பதானாலடியேனுன்

னடியார்நடுவுளிருக்குமரு
ளைப்புரியாய்பொன்னம்பலத்தெம்
முடியாமுதலேயென்கருத்து
முடியும்வண்ணமுன்னின்றே.

## ஆசைப்பத்து.

ஆத்தும விலக்கணம்.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

கருடக்கொடியோன்காணமாட்டாக் கழல்சேவடியென்னும்
பொருளைத்தந்திங்கென்னையாண்ட பொல்லாமணியேயோ
விருளைத்துரந்திட்டிங்கேவாவென் றங்கேகூவு
மருளைப்பெறுவானாசைப்பட்டேன் கண்டாயம்மானே.

## அதிசயப்பத்து.

முத்தியிலக்கணம்.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வைப்புமாடென்று மாணிக்கத்தொளியென்றுமனத்திடையுருகா
செப்புநேர்முலைமடவரலியர்தங்கடிறத்திடை நைவேனை [தே
யொப்பிலாதனவுவமனி லிறந்தனவொண்மலர்த்திருப்பாதத்
தப்பனண்டுதன்னடியரிற் கூட்டியவதிசயங்கண்டாமே.

திருச்சிற்றம்பலம்.

## புணர்ச்சிப்பத்து.

---

அத்துவிதவிலக்கணம்.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சுடர்பொற்குன்றைத்தோளாமுத்தை வாளாதொழும்புகந்து
கடைபட்டேனை யாண்டுகொண்டகருணாலயனைக்கருமால்பிரமன்
றடைபட்டின்னுஞ்சாரமாட்டாத்தன்னைத்தந்தவென்னாரமுதைப்
புடைப்பட்டிருப்பதென்றுகொல்லோவென் பொல்லாமணியைப்
புணர்ந்தே.

## உயிருண்ணிப்பத்து.

---

சிவானந்த மேலிடுதல்.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

கலி விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பைந்நாப்படவரவேரல்கு
லுமைபாகமதாயென்
மெய்ந்நாடொறும்பிரியாவினைக்
கேடாவிடைப்பாகா
செந்நாவலர்பரசும்புகழ்த்
திருப்பெருந்துறையுறைவா
யெந்நாட்களித்தெந்நாளிறு
மாக்கேனினியானே.

திருச்சிற்றம்பலம்.

---

## 61

## அச்சப்பத்து.

ஆனந்தமுறுதல்.

தில்லையி லருளிச்செய்யப்பட்டது.

ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

புற்றில்வாளரவுமஞ்சேன்
பொய்யர்தம்மெய்யுமஞ்சேன்
கற்றைவார்சடையெம்மண்ணல்
கண்ணுதல்பாதநண்ணி
மற்றுமோர்தெய்வந்தன்னை
யுண்டெனநினைந்தெம்பெம்மாற்
கற்றிலாதவரைக்கண்டா
லம்மநாமஞ்சுமாறே.

## திருப்பாண்டிப் பதிகம்.

சிவானந்தவிளைவு.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

கட்டளைக்கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

பருவரைமங்கைதன்பங்கரைப்பாண்டியற்காரமுதா
மொருவரையொன்றுமிலாதவரைக்கழற்போதிறைஞ்சித்
தெரிவரநின்றுருக்கிப்பரிமேற்கொண்டசேவகனா
ரொருவரையன்றி யுருவறியாதென்றனுள்ளமதே.

சதுரைமறந்தறிமால்கொள்வர்சார்ந்தவர்சாற்றிச்சொன்னோங்
கதிரைமறைத்தன்னசோதிகழுக்கடைகைப்பிடித்துக்
குதிரையின் மேல்வந்துகூடிடுமேற்குடிகேடுகண்டீர்
மதுரையர்மன்னன்மறுபிறப்போடமறித்திடுமே.

62

## குலாப்பத்து

அனுபவமிடையீடுபடாமை.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

கொச்சகக்கலிப்பா

திருச்சிற்றம்பலம்.

ஓடுங்கவந்தியுமே யுறவென்றிட்டுள்கசிந்து
தேடும்பொருளுஞ் சிவன்கழலேயெனத்தெளிந்து
கூடுமுயிருங்குமண்டையிடக்குனித்தடியே
னாடுங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

## அற்புதப்பத்து

அனுபவமாற்றாமை

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மையலாயிந்தமண்ணிடைவாழ்வெனு
மாழியுளகப்பட்டுத்
தையலாரெனுஞ்சுழித்தலைப்பட்டுநான்
றலைதடுமாறாமே
பொய்யெலாம்விடத்திருவருடந்துதன்
பொன்னடியிணைகாட்டி
மெய்யனாய்வெளிகாட்டிமுன்னின்றதோ
ரற்புதம்விளம்பேனே.

திருச்சிற்றம்பலம்.

## திருவார்த்தை.

---

அறிவித்தன்புறுதல்.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்.

மாதிவர்பாகன்மறைபயின்ற
வாசகன்மாமலர்மேயசோதி
கோதிலபரங்கருணையடியார்
குலாவுநீதிகுணமங்கநல்கும்
போதலர்சோலைப்பெருந்துறையெம்
புண்ணியன்மண்ணிடைவந்திழிந்
தாதிப்பிரமம்வெளிப்படுத்த
வருளறிவாரெம்பிரானாவாரே.

## திருவெண்பா.

---

அணைந்தோர்தன்மை.

திருப்பெருந்துறையிலருளிச்செய்யப்பட்டது.

நேரிசை வெண்பா.

திருச்சிற்றம்பலம்.

வெய்யவினையிரண்டும்வெந்தகலமெய்யுருகிப்
பொய்யும்பொடியாகாதென்செய்கேன் செய்ய
திருவார்பெருந்துறையான்றேனுந்துசெந்தீ
மருவாதிருந்தென்மனத்து.

திருச்சிற்றம்பலம்.

---

## பண்டாய நான்மறை.

அநுபவத்துக்கையமின்மையுரைத்தல்.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

நேரிசை வெண்பா.

திருச்சிற்றம்பலம்.

பண்டாயநான்மறையும் பாலணுகாமாலயனுங்
கண்டாருமில்லைக்கடையேனைத் — தொண்டாகக்
கொண்டருளுங்கோகழியெங்கோமாற்குநெஞ்சமே
யுண்டாமோகைம்மாறுரை.

## திருவிசைப்பா.

திருமாளிகைத்தேவர் அருளிச்செய்யப்பட்டது.

பண் பஞ்சமம்.

ஒளிவளர்விளக்கே யுலப்பிலாவொன்றே
யுணர்வுசூழ்கடந்ததோருணர்வே
தெளிவளர்பளிங்கின்றிரண்மணிக்குன்றே
சித்தத்துட்டித்திக்குந்தேனே
யளிவளருள்ளத்தானந்தக்கனியே
யம்பலமாடரங்காக
வெளிவளர்தெய்வக்கூத்துகந்தாயைத்
தொண்டனேன்விளம்புமாவிளம்பே.

## திருநாவுக்கரசு நாயனார். (பெ. பு

அண்ணலேயெனையாண்டுகொண்டருளியவமுதே
விண்ணிலேமறைந்தருள்புரிவேதநாயகனே
கண்ணினாற்றிருக்கயிலையிலிருந்தநின்கோல
நண்ணிநான்றொழநயந்தருள்புரியெனப்பணிந்தார்;

## காரைக்காலம்மையார். (பெ. பு)

இறவாதவின்பவன்புவேண்டிப்பின்வேண்டுகின்றார்
பிறவாமைவேண்டுமீண்டும் பிறப்புண்டேலுன்னையென்று
மறவாமைவேண்டுமின்னும் வேண்டுநான்மகிழ்ந்துபாடி
யறவாநீயாடும்போதுன்னடியின்கீழிருக்கவென்றார்.

## திருப்பல்லாண்டு.

சேந்தனார் அருளிச்செய்யப்பட்டது.

மன்னுகத்தில்லைவளர்கநம்பத்தர்கள்வஞ்சகர்போயகலப் [ங்க
பொன்னின்செய்மண்டபத்துள்ளேபுகுந்துபுவனியெல்லாம்விள
வன்னநடைமடவாளுமைகோனடியோமுக்கருள்புரிந்து
பின்னைப்பிறவியறுக்கநெறிதந்தபித்தற்குப்பல்லாண்டுகூறுதுமே.

பாலுக்குப்பாலகன்வேண்டியழுதிடப்பாற்கடலீந்தபிரான்
மாலுக்குச்சக்கரமன்றருள்செய்தவன்மன்னியதில்லைதன்னு
ளாலிக்குமந்தணர்வாழ்கின்றசிற்றம்பலமேயிடமாகப்
பாலித்துநட்டம்பயிலவல்லானுக்கேபல்லாண்டுகூறுதுமே.

## சமயகுரவர் திருநக்ஷத்திரம்.

சித்திரைச்சதயமப்பர் சிறந்தவைகாசிமூல
மத்தரைப்பணிசம்பந்தரானி மாமகத்திலந்த
முத்தமிழ்வாதவூரர் முதியநல்லாடிதன்னிற்
சுத்தமாஞ்சோதி நாளிற்சுந்தரர்கைலைசேர்ந்தார்.

## பெரியபுராணச்செய்யுள்.

கற்பனைகடந்தசோதிகருணையேயுருவமாகி
யற்புதக்கோலநீடியருமறைச்சிரத்தின்மேலாஞ்
சிற்பரவியோமமாகுந்திருச்சிற்றம்பலத்துணின்று